# குழந்தை இலக்கியப் பாடல்களில் உத்திகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.)

பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


*ஆய்வாளர்*

**வ. தெய்வானை**

**பதிவு எண்: 1380**

*நெறியாளர்*

**முனைவர் திருமதி. நா. வள்ளி**

(முதல்வர் (பணி நிறைவு)

இராமசாமி தமிழ்க் கல்லூரி

காரைக்குடி - 3.




**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தரமதிப்பீட்டுக் குழுவின் 'A' மதிப்புப் பெற்றது)

காரைக்குடி-630 003.

தமிழ்நாடு

இந்தியா

**ஜூலை - 2011**

**முனைவர் நா. வள்ளி**
பேராசிரியர் & மேனாள் முதல்வர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி-630 003

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**'குழந்தை இலக்கியப் பாடல்களில் உத்திகள்'** என்னும் தலைப்பில் **வ. தெய்வானை** அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(நா. வள்ளி)
நெறியாளர்

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி-630 003

டாக்டர் திருமதி. நா. வள்ளி,
M.A;B.Ed;Ph.D;P.G.Dip in Epl & Arch,
பேராசிரியை,
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி-630 003.

**வ. தெய்வானை**

*முனைவர் பட்ட ஆய்வாளர்*

*பதிவு எண்: 1380*

*தமிழ்த்துறை,*

*அழகப்பா பல்கலைக்கழகம்,*

*காரைக்குடி-630 003.*

*நாள்:* 2 1 JUL. 2011

**ஆய்வாளர் உறுதிமொழி**

**'குழந்தை இலக்கியப் பாடல்களில் உத்திகள்'** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு, எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

வ. தெய்வானை

*(வ. தெய்வானை)*

*ஆய்வாளர்*

உறுதிக் கையொப்பம்

**முனைவர் நா. வள்ளி**

பேராசிரியர் & மேனாள் முதல்வர்

*இராமசாமி தமிழ்க்கல்லூரி,*

*காரைக்குடி-630 003.*

**டாக்டர். திருமதி. நா. வள்ளி,**
M.A;B.Ed;Ph.D;P.G.Dip in Epl & Arch,
பேராசிரியை,
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

''குழந்தைகளின் மகிழ்ச்சியே எனது மகிழ்ச்சி

குழந்தைகளுக்குத் தொண்டாற்றுவதே என் குறிக்கோள்''

எனத் தம் வாழ்நாள் முழுவதும் குழந்தைகள் நலன் கருதியே வாழ்ந்த குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் குழந்தை நான். எனவே அவர்களின் பாடல்களை முதலில் கேட்டு ரசித்தேன். பேசக் கற்றபின் பாடி மகிழ்ந்தேன். படிக்கத் தெரிந்தபின் பல குழந்தை எழுத்தாளர்களின் படைப்புக்களை ரசித்துப் படித்தேன்.

என் தந்தையார் காட்டிய வழியில், நானும் குழந்தைப் படைப்பாளியானேன். குழந்தை இலக்கியத்தில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள வேண்டுமென்பது என் நீண்டநாள் கனவு.

கனவு நிறைவேறும் காலத்து, அதன் மூலமும் முதலுமாய் விளங்கும் என் தந்தையார் **அழ. வள்ளியப்பா,** என் தாயார் **வள்ளியம்மை** இருவரையும் நினைந்து வணங்குகிறேன்.

'கல்விக்காகத் தேடியும் அள்ளிக் கொடுத்த அழகன்' **வள்ளல் அழகப்பரின்** பாதம் பணிந்து, ஆய்வு செய்யும் வாய்ப்பினை நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், ஆய்வுக்கான விண்ணப்பம் பெறுவது முதல் பல்வேறு நிலைகளிலும் எனக்கு அன்போடு உதவிய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் மு. பாண்டி** அவர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றி.

ஒரு குழந்தையின் முதல் வழிகாட்டி தாயாவார். முனைவர் பட்டம் பெற எனக்கு நெறியாளராக அமைந்த காரைக்குடி, இராமசாமி தமிழ்க் கல்லூரியின் மேனாள் முதல்வர் **முனைவர் நா. வள்ளி** அவர்களும், எந்த நேரத்தில் அவர்கள் இல்லத்திற்குச் சென்றாலும் முகம் மலர, என் ஐயங்களைப் போக்கி, ஆய்வுப் பணிக்குத் தாய் போலிருந்து மெருகூட்டினார்கள். அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

ஆய்வு செய்யும் எண்ணத்தை, நான் பகிர்ந்து கொண்ட போது பேராசிரியர் **முனைவர் தமிழண்ணல் மற்றும் தமிழாகரர் தெ. முருகசாமி ஐயா** இருவரும் நல்ல பல ஆலோசனைகளைக் கூறினர்.

மேலும் என் தந்தையாரின் முதல் மாணவர் **டாக்டர் பூவண்ணன்** அவர்களும் அவர்களது படைப்பு குறித்து மேற்கொள்ளப்பட்ட ஆய்வேட்டைத் தந்துதவினார்கள். என் தந்தையாரைக் குருவென்று போற்றி வரும் அண்ணன் **கவிஞர் செல்ல கணபதி** அவர்களும் எனக்கு நல் வாழ்த்துக்களைச் சொல்லி, அவர்களது குழந்தைப் பாடல்களில் மேற்கொண்ட ஆய்வேட்டையும் வழங்கி ஊக்கப்படுத்தினார்கள். அவர்கள் நால்வருக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

என் ஆய்வுப் பணிக்குத் தேவையான முந்நூறுக்கும் மேற்பட்ட குழந்தைப் பாடல் நூல்கள் மற்றும் குழந்தை இலக்கியம் தொடர்பான நூல்களைத் தந்துதவிய சகோதரர் **முனைவர் ஈ.எஸ். ஹரிஹரன்** அவர்கள், நான் எழுதிய ஆய்வுக் கருத்துக்களையும் அவ்வப்போது படித்துப் பார்த்துக் கருத்துக் கூறினார்கள். அவர்களை நன்றியுடன் நினைத்துப் போற்றுகிறேன். இயற்பியல் பேராசிரியர் **முனைவர் மெ. மெய்யப்பன்** அவர்கள் ஆய்வேட்டினைப் படித்து அரிய பல கருத்துக்களைக் கூறினார். அவர்களுக்கும் என் நன்றி.

ஒப்பீட்டிற்காகப் பிறமொழிக் குழந்தைப் பாடல்கள் சேகரிக்க வானொலி அண்ணா **திரு. கூத்தபிரான், திருமதி. காந்தலெட்சுமி சந்திரமௌலி, திருமதி. ஜெயந்தி நாகராஜன்,** காரைக்குடி அழகப்பா ஆயத்தப் பள்ளி மற்றும் அழகப்பா மெட்ரிக் பள்ளி ஆசிரியைகள், **மருமகள் சிவகாமி அரவிந்த்** போன்ற பலர் உதவினர். அவர்களனைவருக்கும் என் நன்றி உரியது.

என் தந்தையாரின் நண்பர்களான **திரு.ப. வெங்கட்ராமன், பேராசிரியர் ருத்ர துளசிதாஸ், நல்லாசிரியர் கமலவேலன், காசிஸ்ரீ அரு. சோமசுந்தரன், குன்றக்குடி ஆதீனப் புலவர் மரு. பரமகுரு, கவிஞர் பாலநடராஜன்** போன்ற பலர் என் ஆய்வு சிறப்பாக அமைய அவ்வப்போது ஊக்கமளித்தார்கள். அவர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு முன்னதாக ஒரு வினாப்பட்டியல் தயாரித்து 55 குழந்தை எழுத்தாளர்களுக்கு அனுப்பியிருந்தேன். அதில் 36 எழுத்தாளர்கள் தம் பல்வேறு பணிகளுக்கிடையேயும் விடை எழுதி அனுப்பியிருந்தனர். அவர்களது கருத்துக்கள் என் ஆய்வு மேம்பட உதவின. அவர்களுக்கு என் நன்றியைப் புலப்படுத்துகிறேன்.

பள்ளிக் குழந்தைகளின் நேர்காணலுக்கு அன்புடன் அனுமதியளித்த அழகப்பா மாண்டிசோரிப் பள்ளித் தலைமையாசிரியை **திருமதி. தேவகி,** அழகப்பா ஆயத்தப்பள்ளி முதல்வர் **திரு. குமரப்பன்** மற்றும் அப்பள்ளிகளின் ஆசிரியப் பெருமக்களுக்கும் பங்கேற்ற 45 குழந்தைகளுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

இந்த ஆய்வேட்டினைப் பிழைகளின்றி அழகாக அச்சிட்டு உதவிய **'பூச்சரம்'** அன்புத் தம்பி **திரு. பழ. மணிகண்டன்** அவர்களுக்கு மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்க்கைத் துணையாகப் பெயரளவிலன்றி செயலளவில் என் பணிகளுக்கு உற்ற துணை நிற்கும் என் அன்புக் கணவர் **திரு. நாச்சியப்பன்** அவர்களுக்கும், ஆய்வுப் பணிக்கு உற்ற துணையாக விளங்கிய என் மகன் **வருண்**, மகள் **சிந்து**, மருமகன் **விஜய்**, என் வளர்ச்சியில் அக்கறை கொண்ட உறவினர்கள் மற்றும் நண்பர்கள் அனைவருக்கும் நன்றி.

**வ. தெய்வானை**

ஆய்வாளர்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| இ.பெ. | - | இயற்பெயர் |
| தி.ஜ.ர. | - | தி.ஜ. ரங்கநாதன் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| ப. | - | பக்க எண் |
| ப.கோ.க.சு.பா. | - | பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள் |
| பூவ. | - | பூவண்ணன் |
| மு.ப. | - | முதல் பதிப்பு |
| மேலது | - | மேல் குறிப்பிட்டது |
| மொ.பெ. | - | மொழி பெயர்ப்பு |
| ர.அ. | - | ர. அய்யாசாமி |
| C.L. in I.L. | - | Children's Literature in Indian Languages |
| Eng | - | English |
| P. | - | Page |

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| ஒன்று | குழந்தைப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும் | 6 |
| இரண்டு | குழந்தைப் பாடல்களில் பொருள் பாகுபாடு | 45 |
| மூன்று | குழந்தைப் பாடல் உத்திகள் | 200 |
| நான்கு | ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம் | 268 |
| ஐந்து | பண்புருவாக்கத்தில் குழந்தைப் பாடல்கள் | 322 |
| | முடிவுரை | 367 |
| | துணைநூற்பட்டியல் | |
| | பின்னிணைப்புகள் | |

# முன்னுரை

இலக்கியங்கள் மனித வாழ்விலிருந்து தோன்றி அவர்தம் வாழ்வை வளப்படுத்துவன. கதைகளும் பாடல்களும் குழந்தைகளை மகிழ்விப்பன. குழந்தைகளின் பண்பு மற்றும் அறிவு வளர்ச்சிக்காகப் படைக்கப்படும் கதைகள், பாடல்கள், நாடகங்கள், கட்டுரைகள் அனைத்தும் குழந்தை இலக்கியத்தின் பாற்படும்.

''ஏடு தூக்கிப் பள்ளியில்
இன்று பயிலும் சிறுவரே
நாடு காக்கும் தலைவராய்
நாளை விளங்கப் போகிறார்.''

நாளைய தலைவராய் விளங்கப் போகும் குழந்தைகள் மனதில் நல்ல கருத்துக்களைப் பதியச் செய்தல் அவசியம். அந்த நோக்கிலேயே குழந்தை இலக்கியங்கள் உருவாதல் வேண்டும். இலக்கியப் படைப்புகள் மேலும் செம்மையாக உருவாக அவை பற்றிய ஆய்வுகள் துணைபுரிகின்றன எனலாம். அவ்வகையில் குழந்தை இலக்கியத்தின் ஒரு பிரிவான 'குழந்தைப் பாடல்கள்' ஆய்வுப் பொருளாக அமைகிறது.

**ஆய்வுத் தலைப்பு:**

''குழந்தை இலக்கியப் பாடல்களில் உத்திகள்'' என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்:**

பால் மற்றும் பருவங்களின் அடிப்படையில் இலக்கியங்களைப் படைப்பதும் பகுத்துக் காண்பதும் இலக்கிய உலகில் நிகழும் ஒன்றாகும். இருபால் குழந்தைகளுக்கும் ஒழுக்கம் மற்றும் அறக்கருத்துக்களை விளக்கும் கதைகள், பாடல்கள், நாடகங்கள்,

கட்டுரைகள் எனப் பல வகைகளைப் படைப்பாளர்கள் கையாளுகின்றனர். அவற்றுள் குழந்தைகளுக்கான பாடல்களில் கவிஞர்கள் மேற்கொள்ளும் உத்திகளைக் கண்டு வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:**

ஔவையார், அதிவீரராம பாண்டியர் போன்றோர் குழந்தைகளுக்கான நீதி இலக்கியங்களைப் படைத்துள்ளனர். எனினும் இருபதாம் நூற்றாண்டில் தான் தமிழில் குழந்தை இலக்கியம் தனித்த சிறப்புடைய துறையாக மலர்ந்துள்ளது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஒன்றாம் ஆண்டு முதல் கவிமணி, பாரதியார் போன்ற கவிஞர்கள் குழந்தைகளுக்கென, பாடல்களை எழுதத் தொடங்கினர்.

1950களில் வெளிவந்த குழந்தைகளுக்கான 'சங்கு', 'பூஞ்சோலை', 'கரும்பு', 'டிங்டாங்', 'கண்ணன்', 'அணில்' போன்ற இதழ்கள் சிறுவர்களிடம் படிக்கும் ஆர்வத்தையும், கவிஞர்களிடம் குழந்தைகளுக்காக எழுதும் ஆர்வத்தையும் வளர்த்தது எனலாம். எனவே ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்து ஒன்றாம் ஆண்டு முதல் இரண்டாயிரமாவது ஆண்டு வரை (1951 முதல் 2000) வெளிவந்துள்ள பெரும்பான்மையான குழந்தைப் பாடல் நூல்கள் ஆய்வுக்கு எடுத்தாளப் பெறுகின்றன. குழந்தை எழுத்தாளரான பூவண்ணன் 'உத்திகள் பற்றிய ஆய்வில் கால வரையறை தேவையில்லை' என்று ஆய்வாளரின் நேர்காணலில் கூறியதற்கிணங்க ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பத்து ஒன்றாம் ஆண்டிற்கு முன்னும் இரண்டாயிரமாவது ஆண்டிற்குப் பின்னும் வெளிவந்த சில நூல்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்:**

குழந்தை இலக்கிய வளர்ச்சி குறித்துக் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா எழுதிய 'வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்', முனைவர் பூவண்ணன் எழுதிய 'குழந்தைக் கவிஞர்கள்' போன்ற கட்டுரை நூல்கள், இளம் முனைவர் பட்டத்திற்கான கதி. கணேசன் அவர்களின் 'குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி',

ஜி. ரெங்கநாதன் அவர்களின் ‘கவிஞர் செல்லகணபதியின் படைப்புகள் ஓர் ஆய்வு’ போன்ற ஆய்வேடுகளும் முனைவர் பட்டத்திற்கான அம்புயம் யுவச்சந்திரா அவர்களின் ‘குழந்தை இலக்கியமும் குழந்தைக் கவிஞர் வள்ளியப்பாவும்’ போன்ற ஆய்வு நூல்களும் இவ்வாய்வுக்கு முன்னோடிகளாக விளங்குகின்றன.

**சான்றாதாரங்கள்:**

கவிமணி, பாரதியார், பாரதிதாசன், தணிகை உலகநாதன், அழ. வள்ளியப்பா, அரு. சோமசுந்தரம், பூவண்ணன், பொன்ராசன், செல்லகணபதி, பால. நடராசன் போன்றோரின் குழந்தைப் பாடல் நூல்கள் முதன்மைச் சான்றாதாரங்களாகவும், குழந்தை இலக்கியம் பற்றிய திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், குழந்தைகளுக்கான இதழ்கள் ஆகியன துணைச் சான்றாதாரங்களாகவும் கொள்ளப் பெறுகிறது. இன்றைய குழந்தைக் கவிஞர்கள் சிலருடன் நேர்காணல் மூலமாக, அவர்தம் அனுபவங்கள் கேட்டறியப்பட்டு, அவர்களின் கருத்துக்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. மேலும் குழந்தை எழுத்தாளர்கள் பலருக்கு வினாப் பட்டியல் அனுப்பி, அவர்களிடமிருந்து பெறப்படும் கருத்துக்களையும் மனதில் கொண்டு ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**கருதுகோள்:**

குழந்தைகளுக்கு ஏற்ற யாப்பு வடிவமும் கருப்பொருளில் எளிமையும் கொண்டதாகவும் அறம், தன்னம்பிக்கை, பண்பு வளர்ச்சி போன்ற கருத்துக்களைக் குழந்தைகள் மனங்கொள்ளும் வகையில் தெளிவுபடுத்துவதாகவும் குழந்தைப் பாடல்கள் அமைய வேண்டும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாக அமையும்.

**ஆய்வு அணுகுமுறைகள்:**

குழந்தைப் பாடல்களின் தோற்றம், வளர்நிலை, இன்றைய நிலைகளைக் காணும் முகமாக வரலாற்றியல் அணுகுமுறையும் குழந்தைப் பாடல்களில் கவிஞர்கள் கையாண்டுள்ள யாப்பு வடிவம், பாடுபொருள், உத்திகள் பற்றி விளக்கும் விதமாக விளக்கவியல்

அணுகுமுறையும் குழந்தைகளின் வயது, உளவியல் நிலைகள், பண்பு வளர்ச்சி ஆகியவற்றைக் கண்டறிய உளவியல் அணுகுமுறையும் கையாளப்படுகின்றன.

**இயல் பகுப்பு:**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாகக் கீழ்க்கண்ட ஐந்து இயல்களைப் பெற்றிருக்கும்.

1. குழந்தைப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும்

2. குழந்தைப் பாடல்களில் பொருள் பாகுபாடு

3. குழந்தைப் பாடல் உத்திகள்

4. ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம்

5. பண்புருவாக்கத்தில் குழந்தைப் பாடல்கள்

**இயல் விளக்கம்:**

''குழந்தைப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும்'' என்னும் முதல் இயலில், வாய்மொழிப் பாடல்கள், தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் சங்கப்பாடல்களில் குழந்தையின் செயல்கள், மழலை மொழி, இடைக்காலத்தில் தோன்றிய பிள்ளைத்தமிழ், நீதி இலக்கியங்கள், இதழ்களில் குழந்தைக்கான பகுதி, இருபதாம் நூற்றாண்டில் குழந்தை இலக்கியம் தனித்துறையாக வளரத் தொடங்கியமை என்பனவற்றை ஆய்வதாக அமையும்.

''குழந்தைப் பாடல்களில் பொருள் பாகுபாடு'' என்னும் இரண்டாம் இயலில், விண்ணுக்கும் மண்ணுக்கும் இடைப்பட்ட அனைத்தும் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளாக அமைவதைச் சுட்டிக்காட்டுதல், தெய்வங்கள், உயிர் வகை, தொழில்கள், விழாக்கள், அன்றாடம் பயன்படும் பொருட்கள், விளையாட்டுக்கள், அறிவியல் சாதனங்கள், நகைச்சுவை, பழக்கவழக்கம், பண்பாடு போன்றவை பற்றிய பாடல்களும், பால் மற்றும் வயது வேறுபாட்டிற்கு ஏற்ற பாடல்களும் அமைந்துள்ள விதம் பற்றி ஆராயப்படுகின்றன.

‘‘குழந்தைப் பாடல் உத்திகள்’’ என்னும் மூன்றாம் இயலில், உத்தியின் வகைகள், பயன் ஆகியவற்றை இலக்கண, இலக்கிய அடிப்படையில் ஆய்வது. மேலும் குழந்தைப் பாடல்களின் பல்வேறு வகைகள் குறித்தும் ஆராயப்படுகிறது.

‘‘ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம்’’ என்னும் நான்காம் இயலில், பிறமொழிக் குழந்தை இலக்கிய வளர்ச்சி குறித்த செய்திகளுடன், தமிழ்க் குழந்தைப் பாடல்களில் தழுவல், மொழிபெயர்ப்பு, கருத்து, வடிவ ஒப்புமை பற்றிய செய்திகள் ஆராயப்படுகின்றன. இதழ்கள், வானொலி நிகழ்ச்சிகளின் சிறுவர் பகுதியும் ஆய்வு செய்யப்படுகின்றன.

‘‘பண்புருவாக்கத்தில் குழந்தைப் பாடல்கள்’’ என்ற ஐந்தாம் இயலில், குழந்தைகளின் அறிவு வளர்ச்சி போன்றே பண்பு வளர்ச்சிக்கும் முக்கியத்துவம் தரத்தக்க பாடல்கள் குழந்தை இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளமை குறித்து ஆராயப்படுகிறது.

குழந்தைப் பாடல்களில் கூறியது கூறல் குற்றமாகாது என்பர். அதுபோல் இவ்வாய்வில் சில பாடல்கள் மீண்டும் மீண்டும் வெவ்வேறு காரணங்களுக்காகச் சான்றாகக் காட்டப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்ட கருத்துக்களின் சாரங்கள் தொகுக்கப்பட்டு ஆய்வு முடிவுகளாகக் கொடுக்கப்படும்.

ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள் போன்றவை அகர வரிசைப்படுத்தப்பட்டுத் துணை நூற்பட்டியலில் இடம்பெறும்.

# இயல் ஒன்று

# குழந்தைப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும்

இலக்கியங்கள் மக்களுக்காக மக்களைப் பற்றி மக்களால் படைக்கப்பட்டு வருவன. மொழியைப் பேசும் திறன் பெற்ற மனிதன் வாய் மொழியாகப் பாடியும் கதை சொல்லியும் மகிழ்ந்தான். அவற்றை வாய்மொழி இலக்கியம் என்கிறோம்.

### 1.1. வாய்மொழிப் பாடல்களின் வகைகள்:

இசை என்பது மக்களை இசைவிப்பது. குழந்தைகளும் இதற்கு விதிவிலக்கல்ல. எனவேதான், பிறந்த குழந்தைகளைத் தூங்க வைக்கத் தாலாட்டுப் பாடுகிறார்கள். தொடர்ந்து குழந்தையின் பல்வேறு பருவங்களிலும் பலவிதப் பாடல்களைப் பாடிக் குழந்தையின் கேட்கும் திறன், பேசும் திறன் போன்ற திறன்களை வளர்க்கிறார்கள். குழந்தைகளின் கை, கால், உடல் இயக்கங்களுக்கான விளையாட்டுப் பாடல்களும் உள்ளன. மேலும் குழந்தைகட்குத் தெய்வ நம்பிக்கையும் தன்னம்பிக்கையும் ஊட்டும் பாடல்களும் வாய்மொழி இலக்கியங்களில் காணப்படுகின்றன.

#### 1.1.1. எழுதியோரும் பாடியோரும்:

எழுதா இலக்கியமான வாய்மொழி இலக்கியங்கள் யாரால் இயற்றப்பட்டன? எக்காலத்து இயற்றப்பட்டன? எனக் கூற இயலாதன. குழந்தைகளுக்கான வாய்மொழிப் பாடல்கள் தாய்மார்களாலும் பாட்டிமார்களாலும் குழந்தைகளுக்காகப் பாடப்பட்டன.

#### 1.1.2. உற்சாகப் பாட்டு:

அழும் குழந்தையைச் சிரிக்க வைக்கவும் தூங்காத குழந்தையைத் தூங்க வைக்கவும் வாய்மொழிப் பாடல்கள் தாய்மார்களுக்கு உதவின.

ஆடும் போதும் விளையாடும் போதும் குழந்தைகளின் உற்சாகம் மேலிட, பாட ஏற்ற பாடல்கள் வாய்மொழி இலக்கியங்களில் மிகுந்து காணப்படுகின்றன.

### 1.1.3. இயக்கத்திற்கேற்ற இசைப்பாடல்கள்:

''தாலாட்டுப் பாடிக் குழந்தையைத் தூங்க வைக்கும் தாய் அது விழித்திருக்கும் போது அக்குழந்தையின் ஒவ்வொரு செயலிலும் இன்பம் கண்டு பாட்டுப் பாடுகிறாள். தலையை ஆட்டும்போது அதற்குப் பாட்டு, உடம்பை அசைக்கும்போது பாட்டு, கையை வீசப் பாட்டு, காலை ஆட்டப் பாட்டு, குதிப்பதற்கென்று பாட்டு இப்படியாகக் குழந்தையின் ஆட்ட பாட்டங்களுக்கெல்லாம் அவள் பாட்டுப் பாடுகிறாள்''[1] என்கிறார் கி.வா. ஜகந்நாதன்.

### 1.1.4. வழிவழி வந்த வாய்மொழி இலக்கியம்:

இப்படித் தாய் பாடிய பாட்டைக் கேட்ட மகள் பாட, வளர்ந்த மகள் தன் குழந்தைக்குப் பாட, அதனைக் கேட்டு வளர்ந்த குழந்தை தன் குழந்தைக்குப் பாட இப்படியே வழிவழியாக வாய்மொழியாக வளர்ந்து வருவதுதான் வாய்மொழி இலக்கியங்கள்.

### 1.1.5. ஒலிக் குறிப்புக்கு ஒரு பாட்டு:

பிறந்த இரண்டு, மூன்று மாதங்களில் 'ங்கா' என்ற ஒலியை எழுப்பும் குழந்தையிடம்,

'ங்ங்கு ரெங்கா ரெங்கா ரெங்கா
காவேரி ரெங்கா கஸ்தூரி ரெங்கா
எங்கே இருக்குமாம் இந்த ரெங்கம்பழம்?
திருவானைக் காவலுக்கும் தீர்த்தக் கரைக்கும்
நடுவே இருக்குமாம் இந்த நயமான ரங்கம்பழம்.'

என்று குழந்தை சொல்லும் 'ங்கா' 'ங்கு' என்ற ஒலிக்குறிப்புக்கு ஒரு பாடலை வாய்மொழியாக வழங்கி வந்திருக்கின்றனர்.

**1.1.6. தொடு உணர்ச்சிக்குத் தொடரும் பாட்டு:**

மூன்று நான்கு மாதமேயான குழந்தை கையையும் காலையும் அசைத்துக் கொண்டிருக்கும் அவ்வேளையில்,

'நண்டூருது நரியூருது
நண்டூருது நரியூருது
கிச்சுக்கிச்சுக் கிச்சு'

என்று பாடியபடி விரல்களைக் குழந்தையின் கைப் பகுதியில் ஓட விட்டு குழந்தையை உணரச் செய்து, சிரித்து மகிழ வைப்பர்.

**1.1.7. உடல் இயக்கத்திற்கு உற்சாகமான பாடல்:**

விரலசைவை உணர்ந்த குழந்தை தானே தன் கையை அசைத்துப் பழக,

'தாப்பூ தாமரைப்பூ
தாயார் தந்த செண்பகப்பூ
மாம்பூ மல்லியப்பூ
மாமா தந்த மகிழம்பூ'

என்று பாடி, மூடியபடி இருக்கும் குழந்தையின் உள்ளங்கையை விரிந்த கிண்ணம் போல் வைத்துக் கொண்டு இப்படியும் அப்படியுமாக அசைக்கப் பழக்குவர். உட்காரப் பழகிய குழந்தைக்குத் தன் உடல் விழாமல் அசைக்கக் கற்றுக் கொடுக்க வேண்டும். அதற்கும் ஒரு பாடல்

'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
சாயக்கிளியே சாய்ந்தாடு'

என்று பாடியபடி உடலை முன்னும் பின்னுமாக அசைத்துச் சாய்ந்தாடக் கற்றுக் கொடுப்பார்கள்.

பொருட்களைப் பிடித்துக் கொண்டு நின்று பழகிய குழந்தை தளர் நடையிட்டு நடக்கத் தொடங்கியதும், உறுதியுடன் கால்களை ஊன்றிக் குதிக்கவும் தொடங்கும். அந்தக் குழந்தையை உற்சாகப்படுத்த,

‘சங்குச் சக்கர சாமி வந்து
சிங்கு சிங்குனு ஆடுச்சாம்’

என்று பாடப்பாடக் குழந்தை அந்த ஒலிக் குறிப்புக்கு ஏற்ப ஆடி மகிழும்.

**1.1.8. வளர்ந்த குழந்தைகளுக்கு விளையாட்டுப் பாடல்:**

**சுற்றும் ஆட்டம்:**

குழந்தைகள் கையை விரித்துக் கொண்டு சுற்றிச் சுற்றி விளையாடுவர். அப்போது,

‘கிறுகிறு வானம்
கிட்ட கிட்ட வந்தா
கிள்ளி கிள்ளி வைப்பேன்
தூரத் தூரப் போனா
தூக்கிப் போட்டு எத்துவேன்
கிறுகிறு வானம்’

என்று பாடியபடி சுற்றுவர்.

**கண்பொத்தும் கண்ணாமூச்சி:**

கண்பொத்தி விளையாடும் கண்ணாமூச்சி விளையாட்டில் குழந்தைகள் பாடும் பாடல்

‘கண்ணா மூச்சி ரேரே
காதடெச்சான் ரேரே
ரெண்டு முட்டெயத் தின்னுப்புட்டு
மஞ்சக்காரா முட்டெயை
புடிச்சிட்டு வா’

என்று ஒரு குழந்தைக்குக் கண்ணைக் கட்டிவிட்டுப் பாடுவர். ஒளிந்திருக்கும் மற்ற குழந்தைகளுக்கு,

‘அடியே பிள்ளெ ராமாயி
அரிசிக் காரன் வாறாண்டி
சின்ன வீட்லெ ஔிஞ்சுக்க
சிலுக்குச் சட்டெய போட்டுக்கோ’

என்று எச்சரிப்பர். இந்த விளையாட்டில் ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகளும் பங்கேற்பர். சில விளையாட்டுக்கள் ஆண் குழந்தைகளுக்கானவை மற்றும் சில பெண் குழந்தைகளுக்கானவை என பாகுபடுத்தப்பட்டிருக்கும்.

**வண்ண வளையல்:**

பெண் குழந்தைகள் கையில் போட்டிருக்கும் வளையலைக் கழட்டி உள்ளங்கையில் அடுக்கி வைத்துக் கொண்டு, சற்று மேல்நோக்கி எறிந்து புறங்கையில் விழ வைப்பார்கள். அந்த வளையல்களை மெல்ல மெல்ல விரலில் மாட்டிப் பின் எடுக்க வேண்டும். நிறைய வளையல் சேர்த்தவரே வென்றவர். அப்படி விளையாடுகையில் பாடும்பாட்டு,

‘வளையலோ வளையல்
வண்ண வண்ண வளையல்
செல்ல மக்கள் வாருங்கள்
செல்லக் கையெ நீட்டுங்கள்
கை நெறெய அடுக்குங்கள்
குலுக்கி குலுக்கி நடக்கலாம்’

என்பதாகும்.

**கபடி ஆட்டம்:**

ஆண் குழந்தைகளுக்கு அதிரடியான விளையாட்டு; அதுதான் கபடி விளையாட்டு.

‘பட்டான் பட்டான் எந்தம்பி
படெயில பட்டான் எந்தம்பி
நெத்தியிலெ காலுாணி
நேரெ பட்டான் எந்தம்பி’

பட்டான் படந்து வாறான்

படக்குத் தண்ணியெ குடிச்சு வாறான்

எட்டா மூலைக்கு ஏணிவச்சி ஏறிவாறான்

ஏறிவாறான் ஏறி வாறான்.

பட்டான் பட்டான் எம்பட்டான்

பாதியிலே பட்டான் எம்பட்டான்'

என்று பாடியபடி கபடி விளையாடி மகிழ்வர்.

இவ்வாறு குழந்தைகள் ஓடி ஆடி உற்சாகமாக விளையாடும் பல பாடல்கள் வாய் மொழி இலக்கியங்களில் காணக் கிடைக்கின்றன.

**1.1.9. தெய்வ நம்பிக்கைக்குத் தெளிவான பாடல்கள்:**

**விடியும் முன் விழித்தல்:**

குழந்தையின் உடல் வளர்ச்சியுடன் உள்ள வளர்ச்சிக்குமான வாய்மொழிப் பாடல்கள் பல உள்ளன. வளரும் குழந்தைக்குத் தெய்வ நம்பிக்கையூட்டுவது மரபுவழி வருகின்ற ஒன்று. அந்த அடிப்படையில்,

'பொழுது எப்ப விடியும்?

பூ எப்ப மலரும்?

சிவன் எப்ப வருவார்?

வரம் எப்பத் தருவார்?'

என்ற பாடல், பொழுது விடியும் முன், பூ மலரும் முன் எழுகிற ஒரு நல்ல பழக்கத்தைக் கற்றுக் கொடுக்கிறது. அத்துடன் காலை எழுந்ததும் இறைவனை வணங்கி அவன் அருளைப் பெறுதலின் அவசியத்தையும் சொல்கிறது.

**குறையில்லாத நாட்கள்:**

இரவில் தூங்கும் முன்பாக இறைவனை வணங்கிப் படுக்கும் பழக்கத்தை ஏற்படுத்தவும் ஒரு பாடல்.

‘அரினு பேர் சொல்லி
அச்சுதானு பாய் விரிச்சு
கிருஷ்ணானு பேர்சொல்லிப் படுத்தவர்க்குக்
கேடில்லை ஒரு நாளும்
கோவிந்தானு பேர் சொல்லிப் படுத்தவர்க்குக்
குறைவில்லை ஒரு நாளும்’

என்ற பாடல் தெய்வ நம்பிக்கையுடன் தன்னம்பிக்கையும் தரும் வாய்மொழிப் பாடலாக அமையக் காணலாம்.

**கணபதியே காத்தருள்:**

‘கைகால் சுகத்தோட
காசு பணத்தோட
காணி நிலத்தோட
காத்தருள்வாய் கணபதியே!’

என்று பாடி இறைவனின் அருளாசியால் உடல் நலமும் செல்வ வளமும் பெற முடியும் என்ற நம்பிக்கையைக் குழந்தைகளிடம் ஏற்படுத்தினர். இவ்வாறு பிறந்தது முதல் குழந்தையின் ஒவ்வொரு வளர்ச்சி நிலையிலும் பயிற்சி அளிக்கவும் விளையாடவும் தெய்வ நம்பிக்கையூட்டவும் பாடல்கள் பல வகையிலும் உதவி வந்தன; உதவி வருகின்றன.

**1.1.10. பாடலில் ஈடுபாடு:**

பிறந்தது முதல் ஓசை நயத்துடன் கூடிய பாடல்களைக் கேட்டு வளர்ந்த குழந்தைக்குப் பாடல்களில் ஈடுபாடு ஏற்படுகின்றது. இதனையே பாரதியார் ‘‘ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ?’’[2] என்று பாடினார்.

‘‘ஆழ்ந்து சிந்திக்கும் திறமுடைய ஒரு தாய் தன் குழந்தைக்கு அதன் புற்றிளம் பருவத்திலிருந்தே சொற்களின் சந்த நயத்தையும் பாடல்களையும் சுவைக்கும் வாய்ப்பை ஏற்படுத்துகிறாள். செவிலியப் பாடல்கள், விரலசைக்கும் பாடல்கள், செயல் விளக்கப் பாடல்கள்

ஆகியவை குழந்தைகளுடன் விளையாடுவதற்கான பாடல்களாகும்.'' எனும் Anne Fleat என்ற மேல்நாட்டு ஆய்வாளர் கருத்து குறிப்பிடத் தக்கதாகும்.''[3]

**1.1.11. கதை வழி அறிவூட்டல்:**

மொழி அறியாப் பருவத்தில் ஓசை நயம் மிக்கப் பாடல்களால் ஈர்க்கப்பட்ட குழந்தைகள், மொழி அறிந்த பின்னர் கதைகளைக் கேட்க ஆர்வம் காட்டுகின்றனர். இந்நிலையில் குழந்தைகளை நீராட்டவும் உண்ணச் செய்யவும் உறங்கச் செய்யவும் பல கதைகளைக் கூறுகின்றனர். இக்கதைகளின் மூலம் குழந்தைகளின் மொழி அறிவும் கற்பனைத் திறனும் ஒருங்கே வளர்கின்றன.

**1.1.12. இலக்கிய முன்னோடி:**

மொழி பேசத் தொடங்கிய காலத்து மக்கள் பாடல்களையும் கதைகளையும் ஏட்டில் எழுதாது வாய்மொழியாகவே பாடியும் கூறியும் வந்துள்ளனர். எனவே வாய்மொழி இலக்கியம் எனப் போற்றப்படும் இத்தகைய இலக்கியமே, இலக்கியங்களுக்கு முன்னோடி என்கின்றனர் அறிஞர்கள்.

**1.2. தொல்காப்பியம் காட்டும் குழந்தை இலக்கியம்:**

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறுவது மரபு. வாய்மொழி இலக்கியங்களைப் போல் குழந்தைகளைப் பற்றியும் குழந்தைகளுக்காகவும் இயற்றப்பட்ட இலக்கியங்கள் இருந்து மறைந்திருக்கலாம்.

**1.2.1. யாப்பின் இலக்கணம்:**

பழமையான இலக்கண நூலான தொல்காப்பியம் யாப்பு பற்றிக் கூறும் நூற்பாவில்,

'பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்

நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்'[4]

என்று குறிப்பிட்டமையால் பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என யாப்பின் வகைகள் ஏழு என்பர். அவ்வேழில் வாய்மொழி என்பது ஏட்டில் எழுதாமல் வாய்மொழியாக வழங்கி வந்த நாடோடிப் பாடல் வகையைச் சுட்டும் என்பர் சான்றோர். இயற்றியவரின் பெயரும் ஊரும் காலமும் தெரியாத நிலையில் இருப்பவையே வாய்மொழி இலக்கியங்கள். முற்கூறிய 'நண்டூருது', 'தாப்பூ' போன்றவையே வாய்மொழி இலக்கியங்கள்.

**1.2.2. பிசி வகை:**

பிசி என்பதை விளக்கவந்த தொல்காப்பியர்,

''ஒப்பொடு புணர்ந்த உவமைத்தானும்
தோன்றுவது கிளர்ந்த துணிவினானும்
என்றிரு வகைத்தே பிசி வகை நிலையே''[5]

என்கிறார். இந்தப் பிசி எனும் சொல் விடுகதைப் பாடல்களைக் குறிக்கிறது. உவமை அல்லது செயல்பாடுகளின் மூலம் உணர்த்துவது விடுகதையின் இருவகைகளாகும். இத்தகைய விடுகதைகள் குழந்தைகளின் ஆர்வத்தைத் தூண்டி விடைகாணும் முயற்சியை மேற்கொள்ளச் செய்யும்.

'கடிச்சாக் கடிபடாது
புடிச்சாப் புடிபடாது
அது என்ன?'

என்று சிறுவரில் ஒருவர் கேட்க மற்றொருவர் யோசித்துப் பின் ''தண்ணீர்'' என்ற சரியான விடையைச் சொல்வது சிந்தனை ஆற்றலை வளர்க்கும். தன் அறிவின் மீது நம்பிக்கை ஏற்பட்டுச் சிறுவர்களை மகிழ்விக்கும்.

'சொளகு நிறையச்
சுண்டைக்கா

விடிஞ்சு பாத்தா

ஒண்ணுமில்லெ'

அது என்ன?

'நட்சத்திரம்'

இப்படி விடுகதைகள் பொருளின் இயல்பு, உவமை இவற்றின் மூலம் சிறுவர்களின் சிந்தனைத் திறனைத் தூண்டும். இத்தகைய விடுகதைப் பாடல்களைத் தொல்காப்பியர் பிசி என்கிறார்.

**1.2.3. தொல்காப்பியம் சுட்டும் பாட்டும் கதையும்:**

இவ்வாறு தொல்காப்பியர் யாப்பு பற்றிக் குறிப்பிட்டிருக்கும் 'வாய்மொழி' என்பதை எழுதா இலக்கியமான நாடோடிப் பாடல்கள் என்றும், 'பிசி' என்பதை விடுகதைப் பாடல்கள் என்றும் குறிப்பிடு கிறோம். அது போல் கதை பற்றிக் குறிப்பிடும் 'பொருள் மரபில்லாப் பொய் மொழி', 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்பன கற்பனைக் கதைகளையும் நகைச்சுவைக் கதைகளையும் சுட்டுகின்றன.

**1.2.4. கூறுவோரும் கேட்போரும்:**

தொல்காப்பியர் பட்டியலிடும் இத்தகைய இலக்கிய வகைகளைக் கூறுவோரும் கேட்போரும் யாரெனக் காண்போம்.

''ஒன்றே மற்றுஞ் செவிலிக்குரித்தே''[6]

''மற்றும் என்றதனான் அவையன்றி வருகின்ற
பிசியும் செவிலியர்க்கு உரிய தென்பது கொள்க''[7]

என்கிறார் பேராசிரியர். வளர்ப்புத் தாயான செவிலி தலைவிக்கும் தோழிக்கும் கூறுவனவாகக் கதையும் வாய்மொழியும் பிசியும் அமைந்திருந்தன.

**1.3. சங்கப் பாடல்களில் குழந்தை:**

சங்கப் பாடல்களில் குழந்தைகள் பற்றிய பாடல்களும் குழந்தைகளுக்குப் பெரியோர்கள் சொன்ன பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

### 1.3.1. கலிப்பாடல்:

''அத்தத்தா என்னும் நின்
தேமொழி கேட்டல் இனிது''[8]

எனும் கலிப்பாடல் குழந்தையின் மழலையைத் 'தேமொழி' எனப் போற்றுகிறது. மேலும்,

''கிளர்மணி யார்ப்பார்ப்பச் சாஅய்ச் சாஅய்ச் செல்லுந்
தளர் நடை காண்டல் இனிது.''[9]

என்றும்,

''ஐய, திங்கட் குழவி வருகென யான் நின்னை
அம்புலி காட்டல் இனிது''[10]

என்றும் இப்பாடலில் குழந்தையின் தளர்நடையும் அம்புலி காட்டும் தன்மையும் கூறப்பட்டுள்ளன.

### 1.3.2. அகநானூறு:

வினை முடிந்து திரும்பும் தலைவன் தேர் பாகற்குச் சொல்லிய துறையில் அமைந்த ஓர் அகநானூற்றுப் பாடல் கொற்றங் கொற்றனார் இயற்றியது.

''முகிழ்நிலாத் திரிதரும் மூவாத்திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மகன் ஒற்றி
உருகுவையாயின் தருகவென் பாலென''[11]

''அரும்பும் நிலவினைப் போன்ற முகத்தினனும்
பொன்னுடைத் தாலியினனுமாகிய என் மகன்
அவ்வேளையிலே அவனை நினைந்தாளாக இவ்விடத்தே
வருவாயானால் நினக்குப் பால் தருவேன் என்றாள்''[12]

என்பதாகத் தலைவன் கற்பனையாகப் பாடுகிறான்.

### 1.3.3. நற்றிணை:

நற்றிணையில் செவிலி கூற்றாகப் போதனார் இயற்றிய ஒரு பாடல்,

> ''பிரசம் கலந்த வெண் சுவைத் தீம்பால்
> விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்தி
> புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
> 'உண்'என்று ஒக்குடி பிழைப்ப.''[13]

என்று தேனும் பாலும் கலந்த உணவை உண்ண மறுக்கும் குழந்தையை வற்புறுத்தும் காட்சி, பாடலாகக் காட்டப்பட்டுள்ளது.

### 1.3.4. புறநானூறு:

அகப்பாடல்களில் மட்டுமல்லாது, புறப்பாடல்களிலும் குழந்தைகள் பற்றிய செய்திகள் அமைந்துள்ளன.

> ''யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா
> பொருள் அறிவாரா; ஆயினும் தந்தையர்க்கு
> அருள் வந்தனவால் புதல்வர் தம் மழலை''[14]

என்ற அதியனைப் பற்றி ஔவை பாடிய புறநானூற்றுப் பாடல் குழந்தையின் மழலை பெற்றோர்க்கு இன்பம் விளைவிக்கும் என்கிறது.

மழலை மட்டுமா இன்பம் விளைவிக்கும்? அறிவுடை நம்பியின் புறநானூற்றுப் பாடல்,

> ''படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்
> உடைப்பெரும் செல்வராயினும் இடைப்பட
> குறுகுறு நடந்து, சிறுகைநீட்டி
> இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
> நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்ந்தும்
> மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
> பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே.''[15]

என்று குழந்தையின் செயல்கள் அனைத்தும் மகிழ்ச்சி தரக்கூடியன என்கிறது.

பொன்முடியார் இயற்றிய புறநானூற்றுப் பாடல்,

''ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே''[16]

என்று குழந்தை வளர்ப்பில் பெற்றோர்க்கான பொறுப்பினை பகிர்வு செய்யும் முறையைக் காட்டுகிறது.

சங்க இலக்கியங்களில் குழந்தைகளைப் பற்றிய பாடல்களும் குழந்தைகளுக்காகத் தாயார் பாடும் பாடல்களும் உள்ளன. குழந்தைகள் ஆடிப்பாடி மகிழ ஏற்ற பாடல்கள் இல்லை.

**1.4. சங்கம் மருவிய காலத்தில் குழந்தை:**

சங்கம் மருவிய காலத்துத் தோன்றிய பதினெண்கீழ்க்கணக்கும் அடுத்துவந்த காப்பியங்களும் குழவிகளின் மேன்மையுரைத்தன.

**1.4.1. குறளில் குழந்தை:**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் முதன்மை பெற்ற திருக்குறளில் திருவள்ளுவர் ''மக்கட் பேறு'' என்ற அதிகாரத்தில் குழந்தைச் செல்வத்தின் மேன்மையைக் குறிப்பிடுகிறார்.

''மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்று அவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.''[17]

குழந்தைகள் தொடுவதும் பேசுவதும் தரும் இன்பம் அளவிடற்கரியது என்கிறார் வள்ளுவர்.

''குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்''[18]

என்று குழந்தையின் மழலை, இனிமை மிக்க இசைக் கருவிகளான யாழையும் குழலையும் காட்டிலும் இனியது என்கிறார் வள்ளுவர். 'அறிவறிந்த மக்கட்பேறு', 'பண்புடைய மக்கட்பேறு' எனக்

குறிப்பிடுவதன் மூலம் குழந்தைகள் அறிவிலும் பண்பிலும் சிறந்து விளங்குவதன் இன்றியமையாமையைக் குறிப்பிடுகிறார்.

### 1.5. காப்பியங்களில் குழந்தை:

முன்காலத்து வழங்கி வந்த விளையாட்டுக்களாக ''சிந்து, பிழுக்கை, உடன்சந்தி, ஓர்மூலை, கவுசி, குடப்பிழுக்கை, கந்தன் பாட்டு, ஆலங்காட்டாண்டி, பருமணல் நெல்லிச்சி, சூலக்கூத்து, தூண்டில் முதலிய பலபல விளையாட்டுக்களின் பெயர்களைச் சிலப்பதிகாரத்தின் உரையில் அடியார்க்கு நல்லார் எடுத்துச் சொல்கிறார்''[19] என்று கி.வா. ஜகந்நாதன் குறிப்பிடுகிறார்.

சங்கம் மருவிய காலத்திற்குப் பிற்பட்ட காப்பியங்களில் மணிமேகலையின் பிறப்பில் மகிழ்ந்த கோவலன் செய்த அறங்கள் பற்றியும் சீவக சிந்தாமணியில் சீவகனின் இளமைப் பருவத்து நிகழ்ச்சிகள் பற்றியும் கூறப்படுகின்றன.

### 1.5.1. சூளாமணியில் குழந்தைப் பேறு:

சூளாமணியில் மக்கட் பேற்றின் மாண்பு கூறுகையில்,

> ''தொக்கிள மலர்துதை விலாத சோலையும்
> புக்கிளந் தாமரை நகாத பொய்கையும்
> மிக்கிளம் பிறைவிசும் பிலாத வந்தியும்
> மக்களை யிலாததோர் மனையும் மொக்குமே''[20]

மலரற்ற சோலையும் தாமரை அற்ற குளமும் நிலா அற்ற அந்தி வானமும் போன்றதே குழந்தைப் பேறு அற்ற வீடு என்கிறார் தோலாமொழித் தேவர்.

### 1.6. நளவெண்பாவில் இனிமை மிகு மழலை:

நளவெண்பாவில் புகழேந்திப் புலவரும்,

> ''சொன்ன கலையின் துறை அனைத்தும் தோய்ந்தாலும்
> என்ன பயனுடைத்தாம் இன்முகத்து – முன்னம்

குறுகுதலைக் கிண்கிணிக்கால் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலைக் கேளாச் செவி''[21]

என்கிறார். கலை ஞானத்தில் சிறந்தவராக இருந்தாலும் மழலை மொழியையும் சலங்கை ஒலியையும் கேட்காதவராக இருந்தால் பயனில்லை என்கிறது நளவெண்பா.

குறளும் காப்பியங்களும் மழலைச் செல்வத்தின் சிறப்பைச் செய்யுளாக்கித் தந்துள்ளன.

**1.7. ஆழ்வார் பாடல்களில் குழந்தை:**

''குழவி மருங்கினும் கிழவதாகும்''[22] என்ற தொல்காப்பிய நூற்பா தெய்வங்களையும் வள்ளல்களையும் சான்றோர்களையும் குழந்தையாகக் கருதிப் பாடும் மரபிற்கு அடிகோலியது.

**1.7.1. குழந்தைக் கண்ணனைப் போற்றிய பெரியாழ்வார்:**

பெரியாழ்வார் இயற்றிய திருமொழியான முதலாயிரத்தில் பெருமாளைக் குழந்தையாகக் கருதிப் பாடியுள்ளார்.

''நம்முடை நாயகனே! நன்மறையின் பொருளே!
நாபியுணர் கமல நான் முகனுக் கொருகால்
அம்ம! எனக்கொரு காலாடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே! ஆடுக வாடுகவே.''[23]

என்று இறைவனைக் குழந்தையாக எண்ணி செங்கீரை ஆடுமாறு அழைக்கின்றார்.

''குரக்கினத்தாலே குரைகடறன்னை
நெருக்கியணைகட்டி நீணீரிலங்கை
அரக்கரவிய வருகணையாலே
நெருக்கிய கைகளான் சப்பாணி நேமியங் கையனே''[24]

என்று இராமாவதாரப் பெருமைகளைச் சொல்லி சப்பாணி ஆட வேண்டுகிறார்.

### 1.7.2. குழந்தைக் கண்ணனைப் போற்றிய குலசேகராழ்வார்:

பெரியாழ்வாரைப் போல குலசேகராழ்வாரும் பெருமாள் திருமொழியில், 'தேவகியின் புலம்பல்' என்ற பகுதியில்,

> "தண்அந் தாமரைக் கண்ணனே! கண்ணா!
> தவழ்ந்து எழுந்து தளர்ந்ததோர் நடையால்
> மண்ணிற் செம்பொடி ஆடிவந்து என்தன்
> மார்பின் மன்னிடப் பெற்றிலேன்; அந்தோ
> வண்ணச் செஞ்சிறு கைவிரல் அனைத்தும்
> வாரி வாய்க் கொண்ட அடிசிலின் மிச்சில்
> உண்ணப் பெற்றிலேன்"[25]

என்று கண்ணனைப் பெற்ற தேவகி பாடுவதாகப் பாடியுள்ளார். குழந்தைப் பருவத்தில் தவழுவதையும் தளிர்நடையிடுதலையும் காணாது, சிறுகைகளால் பிசைந்து உண்டு மிஞ்சிய உணவை உண்ணாது போனது பேரிழப்பு என தேவகி புலம்புகிறாள். எனவே குழந்தைப் பருவ நிகழ்வுகளைத் தாயானவள் காண்பதும் துய்ப்பதும் பெரும் பேறாகக் கருதப்படுகிறது.

### 1.8. பிள்ளைத் தமிழ்:

பெரியாழ்வார் கண்ணனைப் பாடியதைத் தொடர்ந்து பலரும் இறைவனையும் மன்னர்களையும் போற்றுதற்குரிய பெரியோர்களையும் குழந்தையாக நினைத்துப் பாடத் தொடங்கினர். இவ்வகையில் பாடப்பட்ட பாடல்கள் 'பிள்ளைத் தமிழ்' இலக்கியம் எனப்பட்டது. இது தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களில் ஒன்றாக விளங்குகிறது.

### 1.8.1. பிள்ளைத் தமிழ் வகைகள்:

'பிள்ளைத் தமிழ்' என்பது 'ஆண்பால் பிள்ளைத் தமிழ்', 'பெண்பால் பிள்ளைத் தமிழ்' என இரு வகைப்படும். பிள்ளைத் தமிழ் பத்துப் பருவங்களாகப் பகுக்கப்பட்டுப் பாடப்படுகிறது. முதல் பருவமான 'காப்பு' என்பது இறைவனிடம் குழந்தையைக் காக்குமாறு வேண்டுவது. அதனைத் தொடர்ந்து வரும் ஒன்பது பருவங்களும்

பிள்ளைப் பருவச் செயல்களைக் கூறுவன. செங்கீரை, தால், சப்பாணி, அம்புலி, வருகை, முத்தம் என்பன இருபால் பிள்ளைத் தமிழுக்கு உரியன.

### 1.8.2. பிள்ளைத் தமிழில் பாகுபாடு:

ஆண் குழந்தைக்கும் பெண்குழந்தைக்குமான விளையாட்டுக்கள் வேறுபடுமாகையால், பிள்ளைத் தமிழிலும் இறுதி மூன்று பருவங்கள் வேறுபடும். பெண்பாற் பிள்ளைத் தமிழில் அம்மானை, நீராடல், ஊசல் எனப் பெண்குழந்தைகளுக்கான விளையாட்டுகளுக்கு ஏற்ப அமையும். ஆண்பாற் பிள்ளைத் தமிழில் ஆண்குழந்தைகளின் விளையாட்டிற்கு ஏற்ப சிற்றில், சிறுபறை, சிறுதேர் என அமைத்துள்ளனர். இவ்வாறு பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளைப் பாடுவதால் இதனையும் சிலர் குழந்தை இலக்கியமாகக் கருதினர்.

பெரியாழ்வாரைத் தொடர்ந்து, பக்தி இலக்கியக் காலத்திலும் பிற்காலத்திலும் பலர் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களைப் பாடத் தொடங்கினர்.

### 1.8.3. மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்:

மீனாட்சி அம்மனைக் குழந்தையாகக் கருதி குமரகுருபரர் பாடிய மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ் நூலில் பத்துப் பருவங்களில் பத்துப் பாடல்கள் வீதம் நூறு பாடல்கள் பாடியுள்ளார்.

மீனாட்சி அம்மனின் செயற்கருஞ் செயல்களைக் கூறிப் போற்றியுள்ளார்.

> ''அருள்விழி யொடும்வளர் கருணை பொழிந்திட
> வாடுக செங்கீரை
> யவனி தழைத்திட மவுலி புனைந்தவ
> ளாடுக செங்கீரை''[26]

என்று செங்கீரைப் பருவத்தில் மீனாட்சி அம்மனின் அருள் கருணையைக் குறிப்பிட்டுச் செங்கீரை ஆட அழைக்கிறார்.

''புள்ளுறை பூம்பொழின் மதுரைத் துரைமகள்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே''[27]

என்று பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய நீராடற்பருவத்தைப் பாடுகிறார்.

பிள்ளைத்தமிழ் நூலில் குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள் பாடப்பட்டதால் இதனைச் சிறுவர்க்குரியன எனச் சிலர் கருதினர். ஆனால் பெரியவர்களின் அரும்பெருஞ் செயல்களைக் கூறி, குழந்தைக்குரிய பருவம் போற்றப்பட்டுள்ளதால் இதனைக் குழந்தைக்குரிய இலக்கியம் எனச் சொல்ல இயலாது. தொடர்ந்து பதினைந்தாம் நூற்றாண்டு வரை தோன்றியுள்ள பாடல்களில் குழந்தை பற்றிய செய்திகளே கூறப்பட்டுள்ளன. அதன் பின்னர் தோன்றிய இலக்கியங்களில் குழந்தைகளுக்கு நீதி கற்பிக்கும் எண்ணத்தில் அறநூல்கள் தோன்றின.

### 1.9. நீதி இலக்கியங்களில் குழந்தை:

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் நீதிக் கருத்துரைப்பன.அவை போன்று பதினாறாம் நூற்றாண்டின் தொடக்க காலத்திலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை எளிய முறையில் சிறிய தொடர்களில் நீதிக் கருத்துக்களைக் கூறும் நூல்கள் பல தோன்றின. அவை ஔவையாரின் 'ஆத்திசூடி', 'கொன்றை வேந்தன்', 'மூதுரை', 'நல்வழி', அதிவீரராம பாண்டியரின் 'வெற்றி வேற்கை', உலகநாத பண்டிதரின் 'உலகநீதி', குமரகுருபரரின் 'நீதி நெறி விளக்கம்', சிவப்பிரகாச சுவாமிகளின் 'நன்னெறி' போன்ற நீதி நூல்கள் தோன்றின.

#### 1.9.1. சிறிய தொடரில் எளிய சொற்கள்:

அச்சு இயந்திர வசதியற்ற காலத்துத் திண்ணைப் பள்ளிக்கூட மாணவர்கள் மனனம் செய்ய ஏற்ற வடிவத்தையும் எளிய சொற்களையும் கொண்ட நீதி நூல்களாக இருந்தமையால் அவை

சிறுவர்க்கான நீதி நூல்கள் எனக் கருதப்பட்டு இன்றளவும் பாட நூல்களில் இடம்பெற்றுள்ளன.

**1.9.2. ஔவையாரின் அற இலக்கியங்கள்:**

> ''அறம் செய விரும்பு
> ஆறுவது சினம்''[28]

என 'ஆத்திசூடி'யிலும்,

> ''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
> ஆலயம் தொழுவது சாலவும் நன்று''[29]

எனக் கொன்றை வேந்தனிலும் ஔவையார் பாடியுள்ளார்.

அகர வரிசையில் எளிய சொற்கள், சிறிய தொடர்களாக அமைந்துள்ளன. ஆயினும்,

> ''மெல்லினல்லா டோள்சேர்''

> ''மைவிழியார் மனையகல்''

> ''மோகத்தை முனி''[30]

போன்ற 'ஆத்திசூடி' அடிகளும்,

> ''காவல் தானே பாவையர்க்கு அழகு''[31]

> ''மைவிழியார் தம்மனை அகன்று ஒழுகு''[32]

என்ற கொன்றை வேந்தன் அடிகளும் சிறுவர் சிறுமியர்க்கு மட்டுமின்றி பெரியவர்களுக்கும் அறம் உரைப்பவையாக உள்ளன.

**1.9.3. உலகநாதரின் உலக நீதி:**

> ''ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்.
> ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்''[33]

எனத் தொடங்கும் உலகநாதர் இயற்றிய உலகநீதியில்

''கற்புடைய மங்கையரைக் கருத வேண்டாம்''

''வாழாமல் பெண்ணை வைத்துத்திரிய வேண்டாம்''

''மனையாளைக் குற்றமொன்றும் சொல்ல வேண்டாம்''[34]

என்று பெரியோர்க்கான வாழ்வியல் நெறிகளையே கூறுகின்றன.

**1.9.4. வெற்றி வேற்கையிலும் வேறுபாடு:**

அதிவீரராம பாண்டியரின் 'வெற்றி வேற்கை'யும்,

''எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்''

''கல்விக்கு அழகு கசடற மொழிதல்''[35]

எனச் சிறுவர்க்கான நீதிகளைச் சொல்லுகிறது. ஆனால்,

''குலமகட்கு அழகுதன் கொழுநனைப் பேணுதல்
விலைமகட்கு அழகுதன் மேனி மினுக்குதல்''[36]

என்றும், மேலும்,

''தன்மனை யாளைத் தனிமனை இருத்திப்
பிறன்மனை ஏகும் பேதையும் பதரே''[37]

என்றும் மகளிர், ஆடவர் இயல்புகள் சுட்டப்படுகின்றன.

**1.9.5. நீதி இலக்கியங்கள் குழந்தைகளுக்கானவையா?**

மேற்கண்டவாறு பெரியவர்களுக்குமான நீதிக் கருத்துக்களைக் கூறும் நீதி நூல்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், ''குழந்தைகளை மனக்கண் முன் நிறுத்தி ஔவையார் 'ஆத்திசூடி', 'மூதுரை' போன்ற பாடல்களைப் பாடி இருப்பாரா என்பது ஐயத்திற்குரியது''[38] என்கிறார் அழ. வள்ளியப்பா.

''சிறுசிறு சொற்கள், சில தொடர்களால் அமைந்த பாடல் என்பதால் இவற்றைச் சிறுவர் இலக்கியம் என்று சொல்லிவிட முடியாதென்றும் இவற்றின் வடிவம் மட்டுமே குழந்தை

இலக்கியத்திற்குரியது. இவற்றின் பொருள் சிறுவர் மனதுக்கு எட்டாதது''[39] என்று 'குழந்தை இலக்கிய வரலாறு' என்ற நூலில் மு.வரதராசனார், ஔவையாரின் ஆத்திசூடியுடன், பாரதியாரின் புதிய ஆத்திசூடி பற்றித் தம் கருத்தைத் தெரிவிக்கிறார் என 'வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்' என்ற நூலில் அழ. வள்ளியப்பா கூறுகிறார்.

எளிதில் மனனம் செய்ய ஏற்றவையாக இருப்பதால், நீதிநூல்கள் சிறுவர்க்கானவை எனக் கருதப்பட்டன. ஆனால் முற்கூறிய சில அடிகள், நீதி இலக்கியங்கள் குழந்தைகளுக்கு மட்டும் இயற்றப்பட்டனவல்ல என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

**1.9.6. மனப் பதிவுக்கான வடிவம்:**

பொருள் புரியாது படிக்கும் சில பாடல் அடிகள் இளம் வயதில் மனப்பதிவாகி வளர்ந்து பெரியவராகும் போது வாழ்க்கைப் பயன் தரலாம். அக்காலப் புலவர்களும் இக்காலக் கல்வியாளர்களும் இவ்வாறு கருதிய காரணத்தால் பாட நூல்களில் இன்றும் இவ்விலக்கியங்கள் இடம் பெற்றுள்ளன எனக் கொள்ளலாம்.

**1.9.7. கல்வித் துறையில் மாற்றம்:**

''இத்தகைய செய்யுள்கள் குழந்தைகளின் உள்ளத்தை எவ்வளவு தூரம் கவரும்? குழந்தைகளுக்கு எத்தகைய மகிழ்ச்சியை அளிக்கும்? என்பதுதான் கேள்வி. பொருள் புரியாதிருப்பதால் குழந்தைகளால் அவற்றை அனுபவிக்க முடிவதில்லை. எளிய நடையில் இனிய சந்தத்தில் உள்ளத்தை நேரடியாகத் தொட்டு, உணர்ச்சியைத் தூண்டும் பாடல்களே சின்னஞ் சிறுவருக்குத் தேவை என்பதை இன்றைய கல்வி நிபுணர்கள் ஒப்புக் கொண்டு அதற்கேற்றவாறு மாறுதல்கள் செய்து வருவது வரவேற்கத்தக்கது''[40] என்ற அழ. வள்ளியப்பாவின் கூற்று எண்ணத்தக்கது.

**1.10. இதழியலில் குழந்தை இலக்கியம்:**

குழந்தைகளுக்கான இதழ்கள் சில பதினெட்டாம் நூற்றாண்டில் வெளிவரத் தொடங்கின. அவை சிறுவர்க்கான இலக்கியப் படைப்புகளை வெளியிட்டன.

### 1.10.1. பதினெட்டாம் நூற்றாண்டு இதழ்கள்:

"நாகர்கோவிலில் இருந்து கிறிஸ்தவப் பிரசார சபையாரால் 1840 ஆம் ஆண்டு 'பால தீபிகை' என்ற சிறுவர் இதழ் தொடங்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து, 'சிறுபிள்ளை நேசத் தோழன்', 'பாலியர் நேசன்', போன்ற இதழ்கள் வெளிவந்தன. இவை குழந்தை இலக்கியங்களை வெளியிட்டு குழந்தைகளிடையே வாசிக்கும் பழக்கத்தை ஏற்படுத்தின. ஆனால் போதிய ஆதரவின்மையால் இவ்விதழ்கள் நீடித்து நிற்கவில்லை"[41] என்று கூறுகிறார் அழ. வள்ளியப்பா.

### 1.10.2. பெரியோர் இதழ்களில் சிறுவர் பகுதி:

1891 ஆம் ஆண்டு பெரியவர்க்கான இதழ்களில் சிறுவர்க்கான பகுதி ஒன்று தொடங்கினர். இந்த வகையில் 'விவேக சிந்தாமணி', 'ஜன வினோதினி', 'தமிழர் நேசன்' போன்ற இதழ்களிலும் 'பாலர் பகுதி' தொடங்கினர்.

1932ஆம் ஆண்டு கலைமகள் இதழிலும் சிறுவர் பகுதி தொடங்கப் பட்டது. அதில் கவிமணியின் சிறுவர் பாடல்கள் சில வெளிவந்தன. கலைமகளைத் தொடர்ந்து 'ஆனந்த விகடன்', 'கல்கி' போன்ற இதழ்களும் சிறுவர்க்கென சில பக்கங்களை ஒதுக்கின.

### 1.10.3. செட்டிநாடு தந்த சிறுவர் இலக்கியம்:

1942ஆம் ஆண்டு திருச்சி ஜில்லாவில் இன்றைய புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள இராயவரத்தில் 'பாலர் மலர்' என்ற பெயரில் குழந்தைகளுக்கான இதழ் தோன்றியது. அதனைத் தொடர்ந்து சங்கு, டமாரம், டிங்டாங் எனப் பல இதழ்கள் வெளிவந்தன.

#### பாலர் மலர்:

புதுக்கோட்டையிலிருந்து மாதமிருமுறை இதழாக வெளிவந்த பாலர்மலர் பின்னர் வந்த சிறுவர் இதழ்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக இருந்திருக்கிறது. கதை, கவிதை, நகைச்சுவைத் துணுக்கு, புத்தக விமர்சனம், பொது அறிவுச் செய்தி, விந்தைச் செய்திகள், தலைவர்கள் வரலாறு போன்றவை இடம்பெற்றுள்ளன. மேலும், 'மண்டு மாமாவின்

பதில்' என்ற பகுதியில் சிறுவர்களின் வினாவுக்கு பதில் அளிக்கிறார்கள். 'பேனா நண்பர்கள் சங்கம்' இந்த இதழில் துவக்கப்பட்டு, அதிலும் ஸ்டாம்ப் சேகரிப்பவர், போட்டோ சேகரிப்பவர், பத்திரிகை சேகரிப்பவர் என, சிறுவர்களின் ரசனைக்கேற்பப் பிரித்து பெயர் முகவரியுடன் வெளியிட்டுள்ளனர்.[42]

**சங்கு:**

குழந்தைகளுக்கான வாரம் இருமுறை இதழ் 'சங்கு'. ஒரு தாளை நான்காக மடித்தால் 8 பக்கங்கள் வருவது போன்ற அமைப்பில் உருவான இதழ் சங்கு. இதிலும் 'பாலர் மலர்' போன்ற குழந்தை இலக்கியப் படைப்புகள் பல இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று 'கேட்காத கேள்வியும் வேண்டாத விடையும்'. சான்றுக்கு ஒன்று 'தூங்கும் போது மூட்டைப் பூச்சிகளின் உபத்திரவம் தாங்க முடிவதில்லையே என்ன செய்வது?' இதற்கு பதில் 'முதலில் மூட்டைப் பூச்சிகளைத் தூங்கச் செய்துவிடுவதுதானே'[43] என்பன போன்ற அதிபுத்திசாலி யோசனைகளுடன் கூடிய நகைச்சுவைப்பகுதி இடம் பெற்றுள்ளது.

**டமாரம்:**

'பாலர் மலர்', 'சங்கு' ஆகியவற்றை வெளியிட்ட வி.எஸ். நடேசன் என்பவர் அதே காலகட்டத்தில் சிறுவர்க்கான வார இதழாக 'டமாரம்' என்ற இதழையும் வெளியிட்டார். இதில், 'வேடிக்கைப் புதுமொழிகள்' என்ற பகுதியில் ''குதிரை வெடிக்குப் பயந்தவன் கொரியாச் சண்டைக்குப் போனானாம்''[44] போன்ற புதுமொழிகள் வெளிவந்தன. இவை நகைச்சுவையோடு சிறுவர்களின் சிந்தனையைத் தூண்டி படைப்பாற்றலை வளர்த்தன.

**பூஞ்சோலை:**

சிறுவர்களுக்கான இலக்கியச் சோலையாகப் 'பூஞ்சோலை' விளங்கியது. பூஞ்சோலை செப்டம்பர் 1952 இதழில், இரண்டாவது குழந்தைப் புத்தகக் கண்காட்சி சென்னையில் அக்டோபர் 8, 9, 10 ஆகிய மூன்று நாட்களும் தம்புச் செட்டித் தெரு, முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் நடப்பதற்கான விளம்பரம் வெளியாகியுள்ளது.

மேற்கண்ட இதழ்கள் தீபாவளி, பொங்கல் மலர்களையும் சிறப்பாக வெளியிட்டுள்ளன. 1947 முதல் 1952 வரையிலான ஐந்தாண்டு காலத்தில் சிறுவர்க்காக நாற்பது இதழ்கள் தோன்றி, தக்க ஆதரவின்றி மறைந்தன.

''செட்டிநாடு இல்லாவிட்டால் தமிழில் குழந்தைகளுக்கான இலக்கியத் துறை அடைந்துள்ள வளர்ச்சி ஏற்பட்டிராது. குழந்தை இலக்கியத்திற்கு ஆக்கம் தந்தது செட்டிநாடே. 'பாப்பா மலர்', 'சிட்டு', 'பூஞ்சோலை', 'பாலர்மலர்', 'அணில்', 'கற்கண்டு', 'சாக்லெட்', 'டமாரம்', 'சங்கு', 'பாப்பா' போன்ற பத்திரிகைகளை வெளியிட்டவர்கள் செட்டிநாட்டவரே''[45] என்று உலகஞ் சுற்றிய தமிழர் சோமலெ குறிப்பிடுகிறார்.

ஐம்பதுகளில் 'கண்ணன்', 1966ஆம் ஆண்டு 'இளையபாரதம்' எழுபதுகளில் 'மத்தாப்பூ', 'கோகுலம்', 'பூந்தளிர்' போன்ற சிறுவர் இதழ்கள் வெளிவந்தன. ஆனால் பெரியோர் இதழ்களைப் போல் எந்த இதழும் நிலைத்து நீடித்து வரவில்லை என்பது வருத்தத்திற்குரியது.

'அம்புலிமாமா' என்ற சிறுவர் இதழ் இந்திய மொழிகள் அனைத்திலும் வெளிவந்தது.

### 1.10.4. இன்றைய சிறுவர் இதழ்கள்:

1983ஆம் ஆண்டு முதல் புதுப் பொலிவுடன் மீண்டும் 'கோகுலம்' சிறுவர் இதழ் வெளிவந்து வெள்ளி விழாக் கண்டது. 1999ஆம் ஆண்டு முதல் 'சுட்டி விகடன்' புதுமை புகுத்தும் சிறுவர் இதழாகத் தொடர்ந்து வெளிவருகிறது. இவை இன்றைய குழந்தைகளின் இலக்கிய ஆர்வத்தை நிறைவு செய்கின்றன.

நாளிதழ்களான தினமணி, 'சிறுவர் மணி'யையும் தினமலர், 'சிறுவர் மலர்' இதழையும், தினத்தந்தி 'தங்க மலரை'யும் வெளியிட்டு சிறுவரின் இலக்கிய தாகத்தைத் தணிக்கின்றன.

அன்று முதல் இன்று வரை சிறுவர் இதழ்கள் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்திருக்கின்றன. குழந்தைகளின்

வாசிக்கும் பழக்கத்தை வளர்க்கவும் படைப்பாற்றலைத் தூண்டவும் இதழ்கள் வழிவகுத்தன.

### 1.11. இருபதாம் நூற்றாண்டு குழந்தை இலக்கியம்:

வாய்மொழி இலக்கியமாய்த் தோன்றி, சங்க காலம், சங்கம் மருவிய காலம், இடைக்காலம், நீதிநூல்களின் காலம் என இலக்கியக் காலங்கள் வகைப்படுத்தப்படுகின்றன. அவ்விலக்கியங்களில் குழந்தைமை பற்றியும் குழந்தைகளுக்காகவும் பாடப்பட்டவற்றைக் கண்டோம். ஆயினும் 'குழந்தை இலக்கியம்' என்ற சொல்லாட்சியுடன் குழந்தைகள் மகிழ இலக்கியம் படைக்கப்பட்ட காலம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கமே.

#### 1.11.1. குழந்தை என்ற சொல்லாட்சி:

பாப்பா, மழலை, பிள்ளை, சிறுவன், சிறுமி, இளையோர், மக்கள், மகவு, பாலர் போன்ற சொற்கள் குழந்தையைக் குறிக்கப் பேச்சு வழக்கில் வழங்குகின்றன.

> ''Child hood – குழந்தைப் பருவம்''
>
> ''Child life – குழந்தை வாழ்க்கை''
>
> ''Childness – குழந்தை இயல்பு''
>
> ''Child like – குழந்தை போன்று''
>
> ''Child welfare – குழந்தை நலம்''
>
> ''Childly – குழந்தைக்குகந்த''[46]

என்கிறது அகராதி. Child என்ற சொல்லுக்குக் குழந்தை எனப்பொருள் கொள்ளப்படுகிறது.

குழந்தைகளுக்கான கதை, பாடல் முதலியவற்றை ஆங்கிலத்தில் Children Literature என்று குறிப்பிடுகின்றனர். இதனைத் தமிழ்ப்படுத்திக் குழந்தை இலக்கியம் என்று குறிப்பிட்டு வருகின்றனர்.

**1.11.2. குழந்தை எழுத்தாளர்:**

''குழந்தை இலக்கியம் என்னும் பெயரை மொழி பெயர்ப்புப் பெயராகத் தந்தவர் யார் என்பது தெரியவில்லை. ஆனால் Childrens Writer என்பதைக் 'குழந்தை எழுத்தாளர்' என்று மொழி பெயர்த்து வழங்கியவர், வழக்கிலே புகுத்தி நிலைக்கச் செய்தவர் தமிழ்க் குழந்தை இலக்கியத் தந்தை என்று போற்றப்படும் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா''[47] என்கிறார் டாக்டர் பூவண்ணன்.

**1.11.3. குழந்தைகள் நூற்றாண்டு:**

''பத்தொன்பதாம் நூற்றாண்டைத் தொழிலாளர் நூற்றாண்டு'' என்பார்கள். இருபதாம் நூற்றாண்டைக் 'குழந்தைகள் நூற்றாண்டு' என்று சொல்ல வேண்டும்''[48] இது குழந்தைகளின் கல்வியில் மிகுந்த கவனம் செலுத்திய மாண்டிசோரி அம்மையாரின் கூற்று.

**1.11.4. குழந்தைகளின் யுகம்:**

''சுவீடன் நாட்டுப் பாவாணர் எலென்கே என்ற அம்மையார் இருபதாம் நூற்றாண்டினைக் குழந்தைகளின் யுகம் என்று புனைந்துரைத்துள்ளார்''[49] என்று கதி.கணேசன் கூறுகிறார்.

**1.11.5. எளிய நடையில் இனிய சந்தம்:**

''பழங்காலத்துப் பாடல் என்றாலே எளிதில் பொருள் விளங்காது. பண்டிதர் துணையும் பலநாள் உழைப்பும் நமக்கு வேண்டும் அதைப் புரிந்துகொள்ள. அப்படி இருந்தும் எளிய நடையில் இனிய சந்தத்தில் பல குழந்தைப் பாடல்கள் தொன்று தொட்டு நம் நாட்டிலே வழங்கி வருவதை நாம் அறிவோம்''[50] என்கிறார் அழ. வள்ளியப்பா.

**1.11.6. குழந்தைகளுக்கு அதிர்ஷ்டமான ஆண்டு:**

இருபதாம் நூற்றாண்டைப் பற்றிக் கூறும் அழ. வள்ளியப்பா, ''இந்த நூற்றாண்டின் துவக்க ஆண்டான 1901 ஆம் ஆண்டு தமிழ்க் குழந்தைகளுக்கு அதிர்ஷ்டமான ஓர் ஆண்டாகும். இந்த ஆண்டில்தான் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் குழந்தைகளுக்கான பாடல்களைப் பாடத் தொடங்கினார்..................... சகுந்தலா பாரதி

(பாரதியாரின் மகள்) பிறந்தது 1908 ஆம் ஆண்டு. அதனால் பாரதியார் தன் மகளுக்காகப் பாடிய 'பாப்பா பாட்டு' பிறந்தது 1908 ஆம் ஆண்டுக்குப் பிறகுதான் என்பது தெளிவாகிறது. அது 1915ஆம் ஆண்டு முதன்முதலாக 'ஞானபானு' என்னும் இதழில் வெளி வந்தது''[51] என்கிறார்.

**1.11.7. கவிமணியின் கனிவான கவிதைகள்:**

தமிழ்க் குடும்பங்களைச் சேர்ந்த குழந்தைகள் பாடி மகிழ ஏற்ற நல்ல தமிழ்ப் பாடல்கள் நாஞ்சில் நாட்டில் இல்லை. மலையாள மொழிப் பாடல்களே அப்பகுதிகளில் வழங்கி வந்தன.

பண்டித நேரு போல கவிமணியும் குழந்தைகளிடம் அன்பு காட்டி வந்தார். குழந்தைகளைக் காண்பதிலும் அவர்களின் மழலை மொழிகளையும் செயல்களையும் கூர்ந்து நோக்குவதிலும் பேரார்வம் கொண்டார்.

**கவிமணி கூறும் கவிதை இலக்கணம்:**

செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்கு 'மலரும் மாலையும்' என்னும் 201 கவிதைகள் அடங்கிய நூலைச் சமர்ப்பணம் செய்தார் கவிமணி.

''உள்ளத் துள்ளது கவிதை—இன்பம்
உருவெ டுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்—உண்மை
தெரிந் துரைப்பது கவிதை''[52]

என்று பாடினார் கவிமணி. ஆம்! உள்ளத்தில் உள்ள கருத்துக்கள் இன்ப உருவெடுத்து, உண்மைக்கு மாறுபடாமல் தெளிவாய்த் தெரிந்த மொழியில் வெளிப்படுவதே கவிதை எனக் கவிதைக்கான இலக்கணத்தைத் தந்தார் கவிமணி.

**பாசம் காட்டும் பசுவின் பாட்டு:**

''தோட்டத்தில் மேயுது
வெள்ளைப்பசு—அங்கே

துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி
அம்மா என்குது வெள்ளைப் பசு—உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி''[53]

என்று தாயன்பைப் 'பசுவும் கன்றும்' பாடல் மூலம் கூறித் தமிழகக் குழந்தைகளின் மனங்களில் இடம் பிடித்தார் கவிமணி.

இறைவனையும் இயற்கையையும் இலக்கிய இன்பத்தையும் சான்றோர் வாழ்வையும் நகைச்சுவைப் பாடல்களையும் கதைப் பாடல்களையும் பிறமொழித் தழுவல் பாடல்களையும் இயற்றிக் குழந்தைக் கவிதைக்குரிய களங்களைக் கண்டு வழிப்படுத்தியவர் கவிமணி.

**1.11.8. கவிமணி போற்றிய பாரதி:**

''பாட்டுக் கொருபுலவன் பாரதியடா! அவன்
பாட்டைப் பண்ணோடோ ருவன் பாடினானடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனடா—அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பா யடா''[54]

இவ்வாறு கவிமணியால் போற்றப்பட்ட மகாகவி பாரதியார் பெரியவர்களுக்கான பலகவிதைகளை இயற்றியவர். சிறுவர்க்காகவும் சில கவிதைகளைத் தந்திருக்கிறார்.

**பாரதியின் பிள்ளைப் பருவ ஏக்கம்:**

''ஆண்டோர் பத்தினி லாடியு மோடியும்
ஆறு குட்டையி னீக்கினும் பேச்சினும்
ஈண்டு பன்மரத் தேறியி றங்கியும்
என்னோ டொத்த சிறிய ரிருப்பாரால்;
வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்
வீதி யாட்டங்க ளேதினுங் கூடிலேன்
தூண்டு நூற்கணத் தோடு தனியனாய்த்
தோழமை பிறிதின்றி வருந்தினேன்''[55]

என்று பாரதியார் தன் சுயசரிதையில் பாடுகிறார். இன்றைக்கும் தந்தைக்கு அஞ்சி அடைப்பட்டுக் கிடக்கும் சிறுவர்களின் குரலாக இப்பாடல் அமைந்துள்ளது.

**தீஞ்சுவைக் காவியக் கலவை:**

> ''கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல
> காற்றையும் வான வெளியையும் சேர்த்து
> தெள்ளு தமிழ்ப் புலவோர்கள்—பல
> தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்''[56]

என்று கவிதைக்கான இரசாயனக் கலவையைப் பாரதி விளக்குகிறார்.

**காலம் கருதிய ஆத்திசூடி:**

ஔவையாரின் ஆத்திசூடியால் கவரப்பட்ட பாரதியார் தம் புதிய ஆத்திசூடியில் ஔவையாரைப் பின்பற்றி ஆனால் காலத்திற்கேற்ற கருத்துக்களைப் பாடத் தொடங்கினார்.

> ''அச்சம் தவிர்
> ஆண்மை தவறேல்''
> ..........................
> ..........................
> ''உடலினை உறுதிசெய்''
> ..........................
> ''குன்றென நிமிர்ந்துநில்''
> ..........................
> ..........................
> ''வையத் தலைமைகொள்''[57]

ஆங்கிலேயரின் ஆட்சியில் அஞ்சியஞ்சி வாழ்ந்த மக்களின் குழந்தைகள் அச்சம் தவிர்த்த ஆண்மையுடன் வாழ வேண்டும். உடல் உறுதி பெற்றுத் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும். உலகத் தலைவர்களாக உருவாக வேண்டும் என்று விரும்பினார்.

**பாப்பாவை அழைத்துப் பாடிய பாரதி:**

*பாரதியார் சிறுவர்க்காகப் பாடிய பாடல்களில் தம் பெரும் புலமையைக் காட்டாது எளிய சொற்களால் பாடியுள்ளார்.*

''ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா!''[58]

*என்று பாப்பாவை முன்னிலைப்படுத்தி, அழைத்துப் பாடுகிறார்.*

''காலை யெழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா''[59]

*என்று நல்ல பழக்கங்களைக் குழந்தைகட்குச் சொல்லி வந்த பாரதி,*

''பாதகஞ் செய்பவரைக் கண்டால்—நாம்
பயங் கொள்ள லாகாது பாப்பா
மோதி மிதித்து விடு பாப்பா—அவர்
முகத்தில் உமிழ்ந்து விடு பாப்பா''[60]

*என்று வீரத்தையும் ஊட்டுகிறார்.*

**போர்க்குணம் மிக்க பாடல்கள்:**

*''தமிழ்க் கவிதையைப் புதுநெறியில் இட்டுச் சென்ற மகாகவி பாரதியார் இயற்றிய, 'ஆத்திசூடி', 'பாப்பா பாட்டு' முதலியன தமிழுக்குப் புதியனவே. எனினும் பாரதியின் போக்கும் நோக்கும் குழந்தைக் கவிதைகளை முழுமையாகத் தழுவவில்லை. விடுதலைப் போருக்கு வீரர்களைத் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த கவிஞர் போர்க்குணம் மிக்க பாடல்களையே எழுதினார். பாரதி மரபில் வந்தவர்களே குழந்தைப் பாடல்களைப் பிரக்ஞை பூர்வமாகச் செழுமைப்படுத்தினர்''[61] என்கிறார் க. கைலாசபதி. அவரின் கருத்து, குழந்தைக் கவிதைகளின் பரிணாம வளர்ச்சியைக் காட்டுகிறது.*

### 1.11.9. பாரதிதாசனின் குழந்தைப் பாடல்கள்:

பாரதிக்குத் தாசனாகத் தம்மை ஆக்கிக் கொண்ட புரட்சிக் கவிஞர், குழந்தைகளுக்காகப் பல பாடல்களை இயற்றினார்.

''அன்பை வளர்த்திடுவாய்–மெய்
யன்பை வளர்த்திடுவாய்.
கூடப் பிறந்த குழந்தை யிடத்தினில்
கொஞ்சுதல் அன்பாலே! உற
வாடி அம்மாவை மகிழ்ந்த மகிழ்ச்சியும்
அன்பின் திறத்தாலே.''[62]

என்று அன்பின் மகத்துவத்தைப் பாடிய பாரதிதாசன், இயற்கை, இன்பம், தூய்மை, பொறாமை, பொறுமை, பறவை, விலங்குகள் பற்றிப் பாடியுள்ளார். தீய பழக்கங்களான காப்பி அருந்துதல், புகைபிடித்தல் போன்றவற்றின் தீமையையும் சிறுவர்க்குச் சொல்கிறார்.

''காப்பி எதற்காக நெஞ்சே?
காப்பி எதற்காக
கையினில் சுக்குடன் மல்லி இருக்கையில்
காப்பி எதற்காக?
........................
கரும்பு விளைந்திடும் இந்நாட்டு மண்ணும்
கசப்பேறச் செய்திடும் சுவையே இலாத
காப்பி எதற்காக?''[63]

என்று பாடினார் பாரதிதாசன்.

### 1.11.10. இலக்கியப் பயன்:

''உணர்ச்சி, சிந்தனை, அகஅனுபவம், கற்பனை, வாழ்க்கை அனுபவம் ஆகியவற்றின் வெளிப்பாடே இலக்கியம். எடுத்துக் கொண்ட பொருளை எளிதில் பதியச் செய்யும் ஆற்றல் இலக்கியத்திற்கே உண்டு''[64] என்கிறார் அகமது பஷீர்.

**1.11.11. பெரியோர் சிறியோர்க்கான இலக்கியப் பாகுபாடு:**

இலக்கியம் படைக்கும் கவிஞனின் உள்ளம் விரிந்தது. பெரியவர்கள் கவிஞர்களின் கருத்தைப் பாங்குடன் ஏற்கும் பக்குவம் பெற்றவர்கள். ஆனால், குழந்தைகள் அத்தகையோரல்லர். அவர்களுடைய இயல்பினை உணர்ந்து பாட வேண்டும். கவிஞர்கள் தங்கள் புலமையைப் பாடலாக்கினால் அது குழந்தைகளைச் சென்றடையாது.

ஜேம்ஸ் ரீவீஸ் ''முதியோர் கவிதைக்கும் சிறுவர் பாடல்களுக்கும், இலகுவில் வரையறை செய்து காட்டக் கூடிய பிரதான வேறுபாடு ஒன்று உண்டு. அது என்னவெனில் முன்னையது முதிர்ந்த மனங்களின் அக உலகினைத் துருவி ஆய்ந்தறிகிறது. பின்னையது புலன்களுக்குப் புலனாகும் புறவுலகை வெளியுலகினை நாடி அறிகிறது''[65] என்கிறார்.

தமிழறிஞர் கி.வா.ஜகன்நாதன் ''பெரியவர்களுக்கு எழுதுவது களிமண்ணால் உருவம் செய்வது போன்றதாகும். கண், காது சரியாக அமையாவிடில் அவற்றை எடுத்துவிட்டு மீண்டும் ஒட்டலாம். ஆனால் சிறுவர்களுக்கு எழுதுவது கல்லால் சிலை செய்வது போன்றதாகும். கல்லிலே செதுக்கும் போது கவனம் தேவை. ஒரு முறை செதுக்கினால் செதுக்கியதுதான் அதைத் திருத்திச் செய்ய முடியாது''[66] என்கிறார்.

அதிக கவனத்துடன் படைக்கப்படும் குழந்தை இலக்கியம் கவிமணி, பாரதி போன்றோர் அமைத்துக் கொடுத்த பாதையில் வளர்ச்சி பெற்று, புதிய புதிய மாற்றங்களையும் பெற்று நடைபோடுகிறது.

**1.11.12. அச்சிட்டு வெளியிட்ட நூல்கள்:**

''சென்ற நூற்றாண்டில், 1835 ஆம் ஆண்டு நமது நாட்டவரும் அச்சு இயந்திர சாலைகளை வைக்கலாம் என்னும் சட்டம் ஏற்பட்ட பிறகுதான் நம் நாட்டவரால் நூல்கள் அச்சிட்டு வெளியிடப் பட்டன.''[67] என்கிறார் அம்புயம் யுவச்சந்திரா.

கிறிஸ்துவ இலக்கியக் கழகத்தினரும், 'சென்னை குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்' என்னும் வெளியீட்டாளரும் ஆசிரியர் நூற்பதிப்புக் கழகமும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் இதுபோன்ற பல

அமைப்பினரும் குழந்தைகளுக்கான பாட நூல்களை வெளியிடுவதில் முன்நின்றனர். 1917ஆம் ஆண்டு முதல் சிறுவர்க்கான நூல்களை வெளியிட்டு வந்தனர்.

**1.11.13. ஆரம்பப் பள்ளி பிள்ளைகளுக்கு அகரவரிசைப் பாடல்கள்:**

குருகுலக் கல்வி, திண்ணைப் பள்ளிக்கூடம் போன்வற்றின் மூலம் கல்வி கற்ற குழந்தைகள் ஆங்கிலேயர் வருகைக்குப் பின் இன்றுள்ள பள்ளிக்கூடங்களில் பாடவேளைகள் பகுக்கப்பட்டு பாடப்புத்தகத்தின் வழி கற்கத் தொடங்கினர். அக்காலக் கட்டத்தில் கா. நமச்சிவாய முதலியார் ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளுக்கு ஆத்திசூடி போன்று அகர வரிசையில் உயிர் எழுத்துக்களைக் கற்றுக் கொடுக்கப் பாடப் புத்தகத்தில்,

''அ அதோ பார் அத்திப்பழம்,
ஆ என்பவன் ஆசைப்பட்டான்.
இ என்பவன் இதோ என்றான்.
ஈ என்பவன் ஈ என்றான்.''

எனத் தொடங்கி,

''ஔ என்பவன் கௌவிக் கொண்டான்''[68]

என்று முடித்துள்ளார்.

நமச்சிவாய முதலியாரைப் போலவே மே.வீ.வேணு கோபாலப் பிள்ளையும் அகரவரிசையில் எழுதிய,

''அம்மா இங்கே வாவா
ஆசை முத்தம் தா தா
இலையில் சோறு போட்டு
ஈயைத் தூர ஓட்டு''[69]

என்ற பாடல் பாடநூலில் இடம் பெற்றுள்ளது.

### 1.11.14. பாடப் புத்தகங்களில் பாடல் தந்தோர்:

மயிலை சிவமுத்து, மணி திருநாவுக்கரசு, பெ.நா. அப்புஸ்வாமி போன்றோரும் பாடப் புத்தகங்கள் வழி தமிழகக் குழந்தைகளுக்குப் பல பாடல்களைத் தந்தனர்.

### 1.11.15. பாடல் நூல்களைப் படைத்துத் தந்தோர்:

குழந்தைகளுக்குப் பாடப் புத்தகங்களில் அல்லாது, தனிப்பட்ட முறையிலே குழந்தைப் பாடல்கள் எழுதி நூல்களாக ஆக்கித் தந்தவர்கள் மு.வரதராசன், தணிகை உலகநாதன், பெ. தூரன், அழ. வள்ளியப்பா, பூ.அ. முத்துக்கிருஷ்ணன், ர. அய்யாசாமி, நாக. முத்தையா, ரா. பொன்ராசன், பூவண்ணன், ஆர்.பி.சாரதி, செல்ல கணபதி, இளையவன், அப்துல்கரீம், குழ. கதிரேசன், அரு. சோமசுந்தரம் காமாட்சி சீனிவாசன் போன்றோர் ஆவார்.

### 1.11.16. குழந்தை எழுத்தாளர் சங்கம்:

சென்ற நூற்றாண்டின் இடையில் 1950ஆம் ஆண்டு குழந்தைகளுக்காக எழுதுவோரை ஒன்று திரட்டிக் ‘குழந்தை எழுத்தாளர் சங்கம்’ என்ற அமைப்பை அழ. வள்ளியப்பா நிறுவினார். இச்சங்கத்தின் மூலம் 1950ஆம் ஆண்டு, முதல் முதலாகத் தமிழகத்தில் புத்தகக் கண்காட்சி நடத்தப்பட்டது. அதுவும் குழந்தைப் புத்தகக் கண்காட்சி. மிகக் குறைந்த அளவிலேயே தமிழில் குழந்தைப் புத்தகங்கள் வெளிவந்திருந்தன. இந்நிலை கண்ட, ‘குழந்தை எழுத்தாளர் சங்கம்’ குழந்தைகள் தினமான நேருவின் பிறந்த நாளில் குழந்தைகளுக்கான பல்துறை நூல்கள் வெளிவர ஏற்பாடு செய்தது.

### 1.11.17. குழந்தை எழுத்தாளர்களுக்கு ஊக்கம்:

மத்திய மாநில அரசுகள் குழந்தைகளுக்கான படைப்புக்களுக்குப் பரிசுகள் வழங்கின. குழந்தை எழுத்தாளர் சங்கம், குழந்தை இலக்கியத்தின் பல்வேறு துறைகளில் ஆண்டு தோறும் போட்டிகள் நடத்தி, சிறந்த குழந்தை இலக்கியப் படைப்புக்கு (கையெழுத்துப் பிரதிக்கு) A.V.M. அறக்கட்டளையின் மூலம் தங்க, வெள்ளிப் பதக்கங்களை வழங்கினர். பாரத ஸ்டேட் வங்கி, திருப்பூர் தமிழ்ச்சங்கம்

வள்ளியப்பா இலக்கிய வட்டம் போன்ற அமைப்புகளும் குழந்தை எழுத்தாளர்களுக்குப் பரிசும் பதக்கமும் விருதும் வழங்குகின்றன. இவற்றின் மூலம் குழந்தை எழுத்தாளர்கள் ஊக்கம் பெற்று உற்சாகத்துடன் குழந்தை இலக்கியம் படைக்கின்றனர்.

**1.11.18. வானொலியும் தொலைக்காட்சியும்:**

தமிழகத்தில் 50 ஆண்டுகளுக்கு முன்பு வானொலி சிறந்த குழந்தை இலக்கியத் தொண்டாற்றியது. வாரத்தில் இரண்டு நாட்கள் குழந்தைகளுக்கான நிகழ்ச்சியை ஒலிபரப்பியது. சென்னை வானொலி 'மழலையமுதம்', 'பாப்பா மலர்' என இரு நிகழ்ச்சிகளை ஒலிபரப்பியது. இத்தகைய நிகழ்ச்சிகளை திருச்சி, கோவை போன்ற வானொலி நிலையங்களும் ஒலிபரப்பின. இன்றும் மதுரை உள்ளிட்ட பல வானொலி நிலையங்கள் சிறுவர் நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகின்றன.

வானொலி நிகழ்ச்சிகளைக் குழந்தைகளுக்காக நடத்தும் பொறுப்பாளர்களை 'வானொலி அண்ணா' என்று அழைத்தனர். குறிப்பாக சென்னை வானொலியின் வானொலி அண்ணா கூத்தபிரானின் குரல் வளத்தினாலும், குழந்தைகளிடம் அன்பாகப் பழகியமையாலும் ஓய்வுபெற்றுப் பல வருடங்களாகியும் இன்றும் வானொலி அண்ணா என்று அன்புடன் அழைக்கப்படுகிறார்.

வானொலி நிகழ்ச்சியில் சிறுவர்க்கான கதை, கவிதை, பாடல், உரையாடல், உரை, உரைச்சித்திரம், நாடகம், வில்லுப்பாட்டு போன்ற நிகழ்ச்சிகள் இடம்பெற்றன. சிறுவர்கள் பங்கேற்று பாடி, பேசி, நடித்து மகிழ்ந்தனர், மகிழ்வித்தனர். வானொலி நிகழ்ச்சிக்காக எழுதும் வாய்ப்பும் பல குழந்தை எழுத்தாளர்களுக்குக் கிடைத்தது.

தொலைக்காட்சியும் வானொலி போலவே சிறுவர்க்கான நிகழ்ச்சிகள் பலவற்றை வழங்குகின்றது. வானொலியில் காட்சியாகக் காணமுடியாத நடனம், மாறுவேடம் போன்ற நிகழ்ச்சிகளையும் குழந்தைகளுக்காக வழங்கி வருகின்றது. தொலைக்காட்சி நிகழ்ச்சிக்காகக் குழந்தை இலக்கியம் படைக்கும் வாய்ப்பும் குழந்தை எழுத்தாளர்களுக்குக் கிடைத்தன.

தொலைக்காட்சியும் வானொலியும் குழந்தை இலக்கிய வளர்ச்சியில் பங்கு கொண்டுள்ளன என்பதை மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

**1.11.19. சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு:**

1979ஆம் ஆண்டு 'சர்வதேசக் குழந்தைகள்' ஆண்டாக அறிவிக்கப்பட்டதை ஒட்டி, உலக நாடுகள் பலவும் குழந்தைகள் மேம்பாட்டிற்கான பல பணிகளைச் செய்தன.

தமிழகத்திலும் பல அமைப்புகள் சர்வதேசக் குழந்தைகள் ஆண்டைச் சிறப்பாகக் கொண்டாடி, குழந்தைகளுக்கான பல ஆக்கப்பூர்வமான பணிகளை மேற்கொண்டன.

குறிப்பாக, காரைக்குடி, சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு விழாக் குழுவினர் 1980-ஆம் ஆண்டில், 'குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா அறக்கட்டளை'யை நிறுவி, அதனைத் தொடர்ந்து சிறப்பாக நடத்துவதற்காக, காரைக்குடி, இராமசாமி தமிழ்க்கல்லூரி நிறுவனர் இராம.பெரி.பெரியகருப்பன் செட்டியார் அவர்களிடம் ஒப்படைத்தனர்.

இராமசாமி தமிழ்க்கல்லூரி நிர்வாகத்தினரின் சீரிய முயற்சியால், தொடர்ந்து ஆண்டுதோறும் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா அறக்கட்டளை மூலம் மழலையர் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரையான பள்ளிக் குழந்தைகளுக்குத் திருக்குறள் மற்றும் அழ.வள்ளியப்பா பாடல்கள் ஒப்புவித்தல் போட்டி நடத்திப் பரிசளித்து வருகிறார்கள். அதனால் பல நூற்றுக்கணக்கான குழந்தைகள் பயன்பெறுகின்றனர். இதுபோன்று குழந்தைப் பாடல் போட்டிகள் சிலரால் நடத்தப்படுகின்றன. அவை குழந்தைகளுக்கு மிகுந்த பயனளிக்கின்றன.

குழந்தை எழுத்தாளர்கள் பத்திரிகைகள், மின்னணு ஊடகங்கள், இணையம் மற்றும் இலக்கிய அமைப்புகள் மூலமாக ஊக்கமும் ஆக்கமும் பெற்று குழந்தை இலக்கியத்திற்கு வளம் சேர்த்து வருகிறார்கள்.

**தொகுப்புரை**

- பேசும் திறன் பெற்ற மனிதன் வாய்மொழியாகப் பாடியும் கதை கூறியும் வந்தான். அவை வாய்மொழி இலக்கியம்.
- குழந்தை பிறந்தது முதல் வளர்ச்சியின் பல்வேறு பருவங்களில் பல வகைப் பாடல்களை வாய்மொழியாகத் தாய் பாடி வளர்த்தாள்.
- பழமையான இலக்கண நூலான தொல்காப்பியம் சிறுவர்க்கான பிசி (விடுகதை) வாய்மொழி இலக்கியங்கள் பற்றிக் குறிப்பிடுகின்றது.
- சங்கப் பாடல்களில் குழந்தையின் செயல்கள், மழலை மொழி, பெற்றோர் குழந்தைக்குச் செய்ய வேண்டுவன பற்றிக் கூறப் பட்டுள்ளன.
- சங்கம் மருவிய காலத்து இலக்கியங்களும் குழந்தையைப் பற்றியும் போற்றியும் பாடுகின்றன.
- இடைக்காலத்தில் பெரியோர்களைக் குழந்தையாகக் கருதிப் பாடும் பிள்ளைத் தமிழ் இலக்கியம் தோன்றியது.
- நீதி இலக்கியங்களின் சிறிய தொடர், எளிய சொற்கள் குழந்தைகளுக்கானவையாகக் கருத இடமில்லை.
- இதழ்கள் வழி குழந்தை இலக்கியம் வளர்ந்தது.
- இருபதாம் நூற்றாண்டில் குழந்தை இலக்கியம் தனித்துறையாகச் சிறந்து வளரத் தொடங்கியது.

# குழந்தை இலக்கியப் பாடல்களில் உத்திகள்

## இயல் ஒன்று
## குழந்தைப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும்

### சான்றெண் விளக்கம்

1. கி.வா. ஜகந்நாதன், 'குழந்தை உலகம்' ப. 20.
2. பாரதியார், 'பாரதியார் கவிதைகள்' ப. 296.
3. அம்புயம் யுவச்சந்திரா, 'குழந்தை இலக்கியமும் குழந்தைக் கவிஞர் வள்ளியப்பாவும்' ப. 10.
4. தொல்காப்பியர், 'தொல்காப்பியம்' பொருளதிகாரம்- நூற்பா எண் 384
5. மேலது, 488
6. மேலது, 487
7. மேலது பேராசிரியர் உரை 390
8. மருதனிளநாகனார், 'கலித்தொகைப்பாடல்' 80, அடிகள் 14, 15.
9. மேலது, அடிகள் 10, 11
10. மேலது, அடிகள் 18, 19
11. கொற்றங் கொற்றனார் 'அகநானூறு' பாடல் 54, அடிகள் 17-19.
12. அகநானூறு, புலியூர் கேசிகன் உரை. ப. 125.
13. போதனார் 'நற்றிணை' பாடல் 110-பாலைத்திணை
14. ஔவையார், 'புறநானூறு' பாடல் 92.
15. அறிவுடைநம்பி, 'புறநானூறு' பாடல்-188.
16. பொன்முடியார், 'புறநானூறு' பாடல் 312, அடிகள் 1, 2.
17. திருவள்ளுவர், 'திருக்குறள்' அறம்-மக்கட்பேறு குறள்-65.
18. மேலது, குறள்-66.
19. கி.வா. ஜகந்நாதன், 'குழந்தை உலகம்' ப.39, 40
20. தோலாமொழித் தேவர் 'சூளாமணி' பாடல்-413.
21. புகழேந்தி 'நளவெண்பா' பாடல் 247.
22. தொல்காப்பியர், 'தொல்காப்பியம்-பொருளதிகாரம்' நூற்பா-84.
23. பெரியாழ்வார், திருமொழி, முதலாயிரம்- பாடல் 3
24. மேலது பாடல்-8.
25. குலசேகராழ்வார், மேலது, பாடல்-6.
26. குமரகுருபரர், 'மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்' பாடல் 20, ப. 27.
27. மேலது, பாடல் 92, ப. 62.
28. துரை தண்டபாணி (தொ.ஆ.) 'நீதி நூல்கள்' ஔவையார், 'ஆத்திசூடி' பாடல் அடிகள் 1, 2 ப. 1.
29. மேலது ஔவையார் 'கொன்றை வேந்தன்' பாடல் அடிகள் 1, 2 ப. 29,30.
30. மேலது ஆத்திசூடி பாடல் அடிகள் 94, 96, 98 ப. 22, 33.
31. மேலது 'கொன்றை வேந்தன்' பாடல்கள் 14, 15 ப. 34.

32. மேலது பாடல் 78 ப 53.

33. மேலது உலகநாதர், 'உலகநீதி' ப. 61.

34. மேலது ப. 68, 69, 70.

35. மேலது அதிவீரராம பாண்டியர் 'வெற்றி வேற்கை' பாடல்கள் 1, 2, ப 90.

36. மேலது பாடல்கள் 12, 13, ப. 93.

37. மேலது பாடல் 70, ப. 115.

38. அழ. வள்ளியப்பா, 'வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்' ப. 9.

39. மேலது ப10.

40. மேலது ப 12.

41. மேலது ப 3.

42. பாலர்மலர் (மாதம் இருமுறை இதழ்) சர்வதாரி ஸு ஆடி மீ 15.

43. சங்கு (வாரம் இருமுறை இதழ்) 21.9.49 பக்க எண் இல்லை.

44. டமாரம் (வாரம் ஒரு முறை இதழ்) 1.1.51 ப.20.

45. சோம.லெ., 'செட்டி நாடும் செந்தமிழும்' ப 192.

46. சிதம்பரநாத செட்டியார், Eng.-Tam. Dictionary, ப175.

47. பூவண்ணன், 'சிறுவர் இலக்கியச் சிந்தனை' ப.62.

48. பூவண்ணன், 'சிறுவர் இலக்கியச் சிறப்புகள்' ப57.

49. கதி. கணேசன், 'குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி' ப. 18.

50. அழ. வள்ளியப்பா, ''வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்'' ப8.

51. மேலது ப. 13, 14.

52. கவிமணி, 'மலரும் மாலையும்' ப. 18.

53. மேலது ப. 66.

54. மேலது ப. 26.

55. பாரதியார், ''பாரதியார் கவிதைகள்'' ப. 228.

56. மேலது ப. 167.

57. மேலது ப. 258, 259.

58. மேலது ப. 266.

59. மேலது ப. 266.

60. மேலது ப. 267.

61. க. கைலாசபதி, 'நவீன இலக்கியத்தின் அடிப்படை' ப. 56.

62. பாரதிதாசன், ''இசையமுது'' ப. 21.

63. மேலது ப. 32.

64. அகமது பஷீர், ''குழந்தை இலக்கியம் - திறனாய்வு'' ப. 70.

65. க. கைலாசபதி, ''நவீன இலக்கியத்தின் அடிப்படை'' ப. 71.

66. செல்ல கணபதி, ''வளர்ச்சிப் பாதையில் குழந்தை இலக்கியம்'' ப. 31.

67. அம்புயம் யுவச்சந்திரா, ''குழந்தை இலக்கியமும் குழந்தைக் கவிஞர் வள்ளியப்பாவும்'' ப. 37.

68. அழ. வள்ளியப்பா, ''வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்'' ப. 21.

69. மேலது ப. 22.

# இயல் இரண்டு

# குழந்தைப்பாடல்களில் பொருள் பாகுபாடு

### 2.1. குழந்தை வளர்ப்பு:

பெற்றோர்கள், தங்கள் குழந்தைகள் அறிவில் சிறந்தவர்களாக வரவேண்டும்; ஆரோக்கியம் நிறைந்தவர்களாக வளர வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை காட்டுகின்றனர். அதே நேரத்தில் தங்கள் குழந்தைகளின் பண்பு உருவாக்கத்திலும் அதிகக் கவனம் செலுத்துவது நலம் பயக்கும்.

#### 2.1.1. அறிவும் பண்பும் நிறைந்த குழந்தைகள்:

''நம் குழந்தைகளுக்கு அறிவும் தேவை; பண்பும் தேவை. உழுத நிலத்தில் அரிசியையோ உமியையோ தனித்தனியாக விதைத்தால் பயிர் விளையாது. உமியும் அரிசியும் ஒன்று சேர்ந்த நெல்லை விதைத்தாலே பயிர் விளையும் என்பதனை நாம் நன்கறிவோம். அதே போலத்தான் அறிவும் பண்பும் கலந்ததாக வாழ்க்கை அமைய வேண்டும். அறிவு பெருகி, நெஞ்சம் குறுகி வருகின்ற சூழ்நிலையை அன்றாடம் காணுகின்ற நாம் எதிர்காலக் குடிமக்களையாவது இரண்டும் பொருந்தியவர்களாக உருவாக்க வேண்டும்''[1] என்கிறார் அழ.வள்ளியப்பா.

> ''குழந்தைகள் வளர்வது அன்பிலே—நல்ல
> குணங்கள் அமைவது பண்பிலே!''[2]

என்று பாடினார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

> ''எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான்
> மண்ணில் பிறக்கையிலே—பின்

நல்லவர் ஆவதும் தீயவர் ஆவதும்
அன்னை வளர்ப்பினிலே!''[3]

என்று பாடினார் புலமைப்பித்தன்.

குழந்தைகள் பிறந்த மரபு எதுவாயினும் அவர்கள் வளர்க்கப்படும் சூழ்நிலை அடிப்படையிலே அவர்களின் பண்பு உருவாகிறது.

ஈன்று புறந்தரும் தாயும் சான்றோன் ஆக்கும் தந்தையும் குழந்தையின் வளர்ச்சிக்கு ஏற்ற நல்ல சூழலை அமைத்துத் தர வேண்டும்.

### 2.1.2. பெற்றோர்களும் ஆசிரியர்களும்:

''மின்சாரத்தைச் சரியான முறையில் இயக்கினால் எத்தனையோ அதிசயங்கள் செய்கின்றது. இல்லை என்றால் அழிவுக்குக் காரணமாகின்றது. குழந்தைகளைச் சீரான வழியில் திருப்பிவிட்டால், மேன்மையான பல காரியங்களைச் செய்வார்கள். அப்படித் திருப்ப வேண்டிய கடமை பெற்றோர்களையும் உபாத்திமார்களையும் பொறுத்தது''[4] என்கிறார் ப்ளோரா எச்.வில்லியம்ஸ்.

நாளைய இந்தியாவின் தூண்களான நம் அன்புக் குழந்தைகளை உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்லும் அரும்பணியில் ஈடுபட்டிருப்போர் பெற்றோரும் ஆசிரியரும். குழந்தைகளைச் சீரான வழியில் திருப்பிவிட அவர்களுக்குத் துணை நிற்பன குழந்தை இலக்கியம்.

### 2.1.3. குழந்தைகளின் நினைவாற்றல்:

''மூடத் தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற
காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமே

என்ற பாரதிதாசனின் தாலாட்டு வரிகளை யாரும் மறக்க முடியாது... கற்பூரப் பெட்டகத்தைச் சிங்கப்பூரில்தான் கண்டோம்... நறுமணம் கமழும் அந்த பெட்டகத்தில் எந்தப் பொருளை வைத்தாலும் காலமெல்லாம் கெட்டுப் போகாமல் பத்திரமாகக் காப்பாற்றி வைக்கலாம் என்ற உண்மையைத் தெரிந்து கொண்டோம்.''[5] என்கிறார் புத்தனேரி ரா.சுப்பிரமணியம்.

குழந்தைப் பருவத்தில் கேட்கும் கருத்துக்கள் குழந்தைகள் மனதில் பதிந்துவிடும் என்பதால்தான் பாரதிதாசன் குழந்தையைக் 'கற்பூரப் பெட்டகமே' என்றார்.

### 2.1.4. குழந்தைகளுக்கான கவிதைகள்:

குழந்தைகளுக்கான உணவு, குழந்தைகளுக்கான உடை, குழந்தைகளுக்கான விளையாட்டுப் பொருட்கள் என்று தனித்தனியாக இருப்பது போல குழந்தைகளுக்கான இலக்கியமும் குறிப்பாக குழந்தைப் பாடல்களும் தனித்துவம் பெற்று விளங்குகின்றன.

'' 'கவிதையே கலைகளின் அரசி' என்பது தாமஸ் ஸ்பராட் அவர்களின் கூற்று. இதை எவரும் ஏற்றுக் கொள்வர். கவிதை 'கலைகளின் அரசி' என்றால் குழந்தைக் கவிதை, 'கலைகளின் இளவரசி' என்று சொல்லலாம். ''அரசியைக் காட்டிலும் இளவரசியின் அழகு அதிகம்; ஆளுமை அதிகம்; ஆயுளும் அதிகம்.''[6] என்கிறார் பூவண்ணன்.

குழந்தைப் பாடல்கள், அழகும் ஆளுமையும் மிக்கன என்பதால், அவை குழந்தைகளிடம் வரவேற்பைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

''இலக்கியத்திலே ஒரு ஜாதிப் பிரிவினை என்பது போலக் குழந்தை இலக்கியத்தைப் பாவிக்கக் கூடாது. மனித வாழ்க்கைக்குப் பயன்படும் அஸ்திவார இலக்கியம் என்றே குழந்தை இலக்கியத்தைக் கருத வேண்டும்.''[7] என்கிறார் தி.ஜ.ரங்கநாதன்.

''குழந்தைகள் கண்களின் மூலம் கற்பதை விட அதிகமாகவும், எளிதாகவும் கேட்டுக் கற்றுக் கொள்கின்றன. 'படிப்பது கடினம்' என்று நினைக்கும் குழந்தை கூட கேட்டுக் கற்றுக் கொள்ளத் தயங்குவதே இல்லை.''[8] என்கிறார் நம் நாட்டுத் தந்தை காந்தியடிகள்.

''சின்னஞ்சிறு குழந்தைகளுக்குத் தாளம் போடுவதில் ஆசை; தாளத்திற்கு ஏற்ப குதிப்பதில் ஆசை. பாட்டுப் பாடுவதைக் கேட்பதில் ஆசை. முடிந்தால் சேர்ந்து பாடுவதிலும் ஆசை.''[9] என்கிறார் கி.வா.ஜகந்நாதன்.

குழந்தை மனம் என்பது ஒரு தனிஉலகம், குழந்தைகளுக்காக எழுதுவோர் அதனைப் புரிந்து கொள்ள வேண்டும். புரிந்து கொண்டவர்களால்தான் குழந்தை இலக்கியம் படைக்க முடியும்.

''குழந்தைகளை வயது வந்தோரின் சிறிய உருவங்களாகப் பாவித்து எழுதக் கூடாது என்பதை மனத்தில் நன்கு வைத்துக் கொள்ள வேண்டும்.''[10] என்ற பெ.தூரனின் கருத்து கருதத்தக்கது.

**2.1.5. அறிநிலைப் பருவம்:**

''அறிவில் லாதவர் அறிந்தோரிடம்
அறியாத தைக்கேட்டுப் படிக்க வேண்டும்.
அறிவை அறிந்தவர் அறியாதார்க்கு
அறியாத தைஅறிவிக்க வேண்டும்.''[11]

என்பது அரபுமாலை. இப்பாடல் அறிந்தோர், அறியாதோரின் கடமைகளைச் சொல்கிறது.அறியாதார், அறிந்தோரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அறிந்தோர் தனக்குத் தெரிந்ததை அறியாதார்க்குச் சொல்ல வேண்டும். இதுவே அறிவு பெறும் வழி. இது குழந்தை இலக்கியத்திற்கு மிகவும் பொருத்தமான ஒன்று.

''வளரும் குழந்தை தன் குழந்தைப் பருவத்திலேதான் தன் எதிர்கால வாழ்க்கைக்குத் தன்னைத் தயார் செய்து கொள்கிறது. இப்பருவத்தை 'அறிநிலைப் பருவம்' என்று கூறலாம். இது 'தெளிநிலைப் பருவம்' ஆகாது. எனவே இப்பருவத்தினர்க்கு எழுத விரும்புவோர் அவர்களது அறிவுக்கும் உணர்வுக்கும் ஏற்றவற்றையே வழங்க வேண்டும்.''[12] என்கிறார் வில்லியம் இ.பிளாட்ஸ் என்ற உளவியல் அறிஞர்.

குழந்தைகளுக்காக இலக்கியம் படைக்கும் போது, குழந்தைகள் அறிந்தவற்றையும் அவர்கள் அறிய வேண்டியவற்றையும் குழந்தை மனநிலையில் இருந்து எழுத வேண்டும். குழந்தை இலக்கியம் இனிமையான நடையில், எளிமையான சொற்களில் தெளிவாகச் சொல்லப்பட வேண்டும். அதே நேரத்தில், ''மேஜை மேல் இருக்கும் தட்டிலே கண்ணைக் கவரும் ஆப்பிள் பழம் ஒன்று இருக்கிறது.

*குழந்தை ஆவலுடன் எடுத்துக் கடிக்க முயல்கிறது. கடினமாக இருந்ததும், குழந்தை உற்றுப் பார்க்கிறது. மரத்தால் செய்து, வர்ணம் பூசப்பட்ட ஆப்பிள் என்பதை ஏமாற்றத்துடனும், ஏக்கத்துடனும் தெரிந்து கொள்கிறது... இதுபோல் கவர்ச்சியான பல வண்ணப்படங்கள் இருந்தாலும், கவிதை கடினமான நடையில் இருந்தால் குழந்தைகளின் ஏமாற்றமும், ஏக்கமும் மிகுதியாகும்''[13] என்கிறார் அழ. வள்ளியப்பா.*

### 2.1.6. குழந்தைக்கு எழுதுதல் அருமை:

*குழந்தைப் பாடல்கள் எழுதுவது மிகவும் கடினமானது என்பதனைக் கவிஞர் சௌந்தரா கைலாசம் விளக்குகிறார்.*

''காட்டிலூறும் யானையினைக்
கையிலூறும் பானையினுள்
ஓட்டுங் கலையும்
ஒரு கலையா? –எழுத்துக்
கூட்டுஞ் சிறிய
குழந்தைக்குப் பாட்டெழுதிக்
காட்டுங் கலையே கலை''[14]

*யானையைக் கூடப் பானையில் அடைத்து விடலாம். ஆனால் குழந்தைக்குப் பாட்டெழுதுவது அரிய ஒன்று என்பது புலனாகிறது.*

### 2.1.7. பாடுபொருளின் அற்புதம்:

''வண்டி அற்புதப் பொருளாம்–வண்டி
மாடும் அற்புதப் பொருளாம்
வண்டி பூட்டும் கயிறும் என்றன்
மனத்துக் கற்புதப் பொருளாம்.''[15]

*என்று கவிமணி பாடு பொருளின் அற்புதத்தைக் குறிப்பிடுகிறார்.*

''இவ்வுலகம் இனியது. இதிலுள்ள வான் இனிமையுடைத்து.
காற்றும் இனிது.
தீ இனிது, நீர் இனிது, நிலம் இனிது.
ஞாயிறு நன்று; திங்களும் நன்று

வானகத்துச் சுடர்களெல்லாம் மிக இனியன.

மழை இனிது, மின்னல் இனிது, இடி இனிது.''[16]

இவ்வாறு வசன கவிதையில் அடுக்கிச் சொல்லும் பாரதியார் உலக உயிர்களும் பொருட்களும் நிகழ்வுகளும் இனிமை மிக்கன என்கிறார். இனிமை மிக்க இவை அனைத்துமே பாடுபொருளாக ஏற்றன. எனவேதான்,

''எத்தனை கோடி இன்பம்

வைத்தாய் இறைவா.''[17]

என்று வியந்து பாடுகிறார் பாரதியார்.

**2.1.8. பாடுபொருளில் தெளிவு:**

குழந்தை இலக்கியம் படைப்போர், 'நாம் யாருக்காக எழுதுகிறோம்; ஏன் எழுதுகிறோம்; எப்படி எழுதுகிறோம்?' என்பது பற்றிய தெளிவுடையவர்களாக இருக்க வேண்டும்.

குழந்தைப் பாடல்களின் பாடு பொருள் குழந்தைகளுக்குத் தெரிந்தவையாக இருப்பது நல்லது. தெரியாதவற்றைக் குழந்தைகளின் வயதுக்கும் மனநிலைக்கும் ஏற்ப அறிமுகம் செய்ய வேண்டும்.

குழந்தை இலக்கியத்தின் கருப்பொருள் எவை என்று வரையறை செய்ய இயலாது. குழந்தைகள் தம் கண்களால் கண்டும், காதால் கேட்டும், வாயால் சுவைத்தும், அனுபவிக்கும் சாதாரணப் பொருட்களே பாடு பொருளாகும். புதிரும் புதிய கண்டுபிடிப்புகளும் வியப்பூட்டுகிறவையாக இருக்க வேண்டும்.

கவிதையின் பாடுபொருள் எல்லையற்றது. விண்ணிற்கும் மண்ணிற்கும் இடைப்பட்ட எப்பொருளும் பாடு பொருளாகலாம். ஆயினும் கவிஞர் எதைப் பாடினாலும் எப்படிப் பாடுகிறார் என்பதிலேயே அவரின் கலைத் திறனாக்கம் வெளிப்படும்.

'' 'கவிதைக்கு அழகு பாடுபொருள் வெளிப்படும் முறையே' என்பது பிரின்ஸ்டன் கலைக்களஞ்சிய முடிபாகும்.''[18] என்கிறார் வெ.தனலக்குமி.

குழந்தைகளுக்கான பாடுபொருள் என்பதை

1. பொருள் பாகுபாடு
2. வயது வேறுபாடு
3. பால் வேறுபாடு

என்ற அமைப்பில் காணலாம்.

**2.2. பொருள் பாகுபாடு:**

குழந்தைப் பாடல்களில் பொருளை இயற்கைப் படைப்பான உயிர், பயிர், பிறவகையின எனப் பிரித்துக் காணலாம். இவற்றைத் தொடர்ந்து, மனிதர்கள், விழாக்கள், ஒழுக்கம், விளையாட்டு, அறிவியல், கற்பித்தல், உணவு வகைகள், பயன்படு பொருட்கள் என்பனவாகப் பாடுபொருளைப் பாகுபடுத்திக் காணலாம்.

**2.2.1. இயற்கை:**

இயற்கை என்பதை,

1. உயிர் வகைகள்
2. பயிர் வகைகள்
3. பிற வகையின

என மூன்றாகப் பகுத்துக் காண்போம்.

**உயிர் வகைகள்:**

> ''ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
> இரண்டறி வதுவே அதனொடு நாவே
> மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
> நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
> ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
> ஆறறி வதுவே அவற்றொடு மனனே
> நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.''[19]

என்பார் தொல்காப்பியர்.

தொல்காப்பியர் பட்டியலிடும் உயிரினங்களில் பகுத்தறிவு மிக்க மனிதனைத் தனித்துக் காண்போம். மனிதன் தவிர்த்த ஏனைய உயிரினங்களைப் பற்றிக் காண்போம்.

குழந்தைகளின் நான்காம் ஆண்டுப் பருவத்திலே விலங்குகளைப் பற்றிய இனிய அறிமுகத்தை வழங்க வேண்டியது பெற்றோர்களின் கடமை. விலங்குகள் பற்றிய அறிமுகம் குழந்தைகளின் அச்ச உணர்வினைப் போக்கும்; இன்புறச் செய்யும் என்பது உளநூலார் கருத்து.

விலங்குகள், பறவைகள், பிற உயிரினங்களைப் பற்றிய பாடல்கள் குழந்தைகளுக்கு மகிழ்வூட்டுவன.

**எளிதில் காணும் விலங்குகள்:**

குழந்தைகளுக்கு அறிமுகமான வீட்டு விலங்குகளையும், சுற்றுப்புறங்களில் காணக் கூடியதுமான விலங்குகளையும் பட்டியலிடுவோம்.

நாய்
மாடு
ஆடு
பூனை
எலி
கழுதை
குதிரை
குரங்கு
பன்றி

**அரிதாய்க் காணும் விலங்குகள்:**

காட்டிலும் காட்சி சாலையிலும் மட்டுமே காண இயலும் விலங்குகளின் பட்டியலைக் காண்போம்.

யானை
முயல்

மான்

சிங்கம்

புலி

ஒட்டகம்

ஒட்டகச்சிவிங்கி

நரி

நீர்யானை

வரிக்குதிரை

**பறந்து திரியும் பறவைகள்:**

*அண்ணாந்து பார்க்கும் குழந்தைக்கு விண்ணில் பறக்கும் பறவை ஆனந்தத்தைத் தரவல்லது. பறவைகளின் பட்டியலைக் காண்போம்.*

காகம்

கிளி

குயில்

மயில்

அன்னம்

வாத்து

புறா

கோழி

கொக்கு

தூக்கணங்குருவி

சிட்டுக் குருவி

கருடன்

நாரை

**பல்வகைப் பூச்சிகள்:**

*விலங்குகள், பறவைகள் தவிர்த்து மிகச்சிறு உயிரினங்களான வண்டுகளும் வண்ணமிகு பூச்சிகளும் குழந்தைகளுக்கு வியப்பூட்டுவன. அவைகளாவன:*

வண்டு

எறும்பு

கறையான்

செல்

சிலந்தி

வண்ணத்துப்பூச்சி

தேனீ

தும்பி

மூட்டைப்பூச்சி

ஈ

கொசு

மண்புழு

மரவட்டை

பச்சோந்தி

**பிற உயிரினங்கள்:**

*மேற்கூறியவை தவிர நீர்வாழ் உயிரினங்களான சிலவற்றைக் காண்போம்.*

தவளை

நண்டு

மீன்

ஆமை

முதலை

நத்தை

*மேற்கண்ட உயிரினங்கள் குழந்தைப் பாடல்களின் பாடு பொருளாகின்றன. கவிஞர்கள் உயிரினங்களின்,*

1. தோற்றத்தைச் சித்தரிக்கின்றனர்.
2. பண்புகளைச் சுட்டுகின்றனர்.
3. பின்பற்றத் தக்க அறிவுரைகளைக் கூறுகின்றனர்.

மேலும் குழந்தைகளுக்கு இன்பமூட்டவும் வியப்பூட்டவும் இத்தகைய உயிரினங்கள் உதவுகின்றன. குழந்தைகளுக்காகப் பாடப்பட்ட உயினங்கள் பற்றிய பாடல்களைக் காண்போம்.

**எளிதாய்க் காணும் விலங்குகள்:**

**நாய்:**

குழந்தைகள் நாளும் காணும் விலங்கு நாய். குழந்தைகளுக்கு அறிமுகமான நாயைப் பாடுபொருளாக்கிப் பல பாடல்களைப் பல கவிஞர்கள் பாடியுள்ளனர்.

> ''வாடா வாடா கறுப்பா
> வாலை ஆட்டு விருப்பா!
> பாலும் சோறும் தருவேன்
> பாட்டு சொல்லித் தருவேன்!
> வீட்டுக் காவல் நீயே
> வீரங் காட்டு வாயே!''[20]

கறுப்பு வண்ண நாயை 'கறுப்பா' என அழைப்பதும் பாலும் சோறும் கொடுப்பதும் வீரத்தால் வீட்டைக் காக்கச் சொல்வதும் நடைமுறை. ஆனால் 'நாய்க்குப் பாட்டுச் சொல்லித் தருவேன்' என்று பாடுவது குழந்தைகளுக்கே உரிய கற்பனை.

நாயைத் தோழனாக, காவலனாக, நன்றியுணர்வின் நாயகனாகக் காட்டுவது குழந்தைப் பாடல்.

நாயின் நல்லியல்புகளைக் கவிஞர்கள் பலவாறாகப் பாடியிருக்க, பாரதிதாசன்,

> ''வாயும் தூய்மை இல்லை—அது
> வள்வள் என்று குலைக்கும்
> பாயில் கழிவு கழிக்கும் —அது
> பல்லால் வேட்டியைக் கிழிக்கும்.
> நாய் வளர்ப்பதை விட்டு—மிக
> நலம டைந்தான் கிட்டு.''[21]

என்று நாயின் தீய இயல்புகளைக் கூறி, நாய் வளர்க்காமல் இருப்பதே நன்று என்பதாகப் பாடுகிறார்.

**பூனை:**

பூனையின் உருவமும் நடையும் குழந்தைகளைக் கவரக் கூடியன. ஆனால் பூனை நல்லியல்பு கொண்டதல்ல என்ற கருத்தில் பல குழந்தைப் பாடல்கள் வந்துள்ளன.

''அடுப்பங் கரையில் பூனைக்குட்டி!
அயர்ந்து தூங்கும் பூனைக்குட்டி!
........ ........... ........... ...........
எலியைப் பிடிக்கும் பூனைக்குட்டி!
இரவில் பாயுது பூனைக்குட்டி!''[22]

என்று இரவில் விழித்திருந்து எலிபிடிக்கும் பூனையின் செயலை இப்பாடல் சுட்டுகிறது.

''மியாவ் மியாவ் பூனையார்
மீசைக் காரப் பூனையார்
மெல்ல மெல்லச் செல்லுவார்
மேலும் கீழும் தாவுவார்
'லொள் லொள்' சத்தம் கேட்டதும்
நொடியில் ஓடிப் பதுங்குவார்
மியாவ் மியாவ் பூனையார்
மீசைக் காரப் பூனையார்''[23]

பூனையை 'மியாவ் மியாவ்' என்றும் நாயை 'லொள் ளொள்' என்றும் குழந்தை அழைக்கும் இயல்பிலேயே இப்பாடல் அமைந்துள்ளது.

''மரத்தில் கருநிறமான பறவை ஒன்று 'காகா' என்று கத்தியது. அதைப்பற்றிச் சொல்லும்போது, பழங்கால மனிதன் தானும் 'காகா' என்று கத்தினான். நாளடைவில் 'கா கா' என்ற ஒலியே அந்தப் பறவைக்குப் பெயராயிற்று. இது பழங்காலத்தில் சொல் பிறந்த வரலாறு. ஆனால் இந்தக் காலத்திலும் குழந்தையிடம் இப்படி ஒலியால் பெயர்

வைக்கும் வழக்கம் இருக்கிறது.''[24] என்ற மு.வரதராசனாரின் கருத்து இங்கு எண்ணத் தக்கது.

**மாடு, கன்று:**

இன்றைய நாளில் நகர்ப்புறங்களில் மாடு, கன்றுகளைப் பார்ப்பது அருகிவிட்டது. எனினும் இருபது, இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, மாடு கன்று வளர்க்காத வீட்டிலும் மாடுகளை ஓட்டி வந்து, கண்ணெதிரே பால் கறந்து விற்பனை செய்தனர். மாட்டைப் பற்றிய செய்திகளைக் குழந்தைகளுக்குச் சொல்லும் பாடல்கள் நிறைய உள்ளன.

> ''பாலைப் பொழிந்துதரும் பாப்பா – அந்த
> பசுமிக நல்லதடி பாப்பா............
> .......................................... நெல்லு
> வயலில் உழுதுவரும் மாடு
> அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு – இவை
> ஆதரிக்க வேணுமடி பாப்பா''.[25]

என்று பாரதி, பால்தரும் பசுவையும் உழுதுவரும் மாட்டையும் ஆதரிக்க வேண்டுமென பாப்பாவிடம் சொல்லுகிறார்.

மாட்டைப் பற்றித் தெரிந்து கொண்ட குழந்தை கன்றுக் குட்டியை ஆவலுடன் பார்க்கும்.

> ''அம்மா என்குது
> வெள்ளைப்பசு– உடன்
> அண்டையில் ஓடுது
> கன்றுக்குட்டி.
> நாவால் நக்குது
> வெள்ளைப் பசு– பாலை
> நன்றாய்க் குடிக்குது
> கன்றுக்குட்டி.''[26]

கவிமணியின் இந்தப் பாடல், குழந்தைகள், கன்றுக்குட்டியை ஒரு குழந்தையாகப் பார்க்கும் முறையில் எழுதப்பட்ட பாடல். குழந்தைகள்

அன்னையிடம் கொஞ்சி விளையாடி, உணவு உண்பது போல கன்றும் மாடும் பாசப் பிணைப்போடு இருப்பதைச் சொல்லும் பாடலாக அமைந்துள்ளது.

**ஆடு:**

கன்றுக் குட்டியைப் போலவே சிறியதாகவும் தோழமையோடு பழக ஏற்றதாகவும் இருப்பது ஆட்டுக்குட்டி. குட்டி ஆடு மட்டுமன்றி ஆட்டுக்கூட்டமே குழந்தைகளைக் கவரக் கூடியது.

> ''ஆட்டுக் குட்டி ஆட்டுக் குட்டி
> அடடா மழையில் நனையாதே.
> மாட்டிக் கொண்டால்
> மழையால் உனக்கு
> வருமே தும்மல் ஏராளம்
> பாட்டி தருவாள் மருந்து
> அதுவும்
> பாகற் காய்போல் கசப்பாகும்.''[27]

இந்தப்பாடலில் செல்லகணபதி, குழந்தை ஆட்டுக் குட்டியோடு தோழமை உறவு கொண்டு பாடுவதாகப் பாடியுள்ளார். 'மழையில் நனைந்தால் சளி பிடிக்கும், சளிக்குப் பாட்டி தரும் மருந்து பாகற்காயாய்க் கசக்கும்' என்று தன் அனுபவத்தை, ஆட்டுக்குட்டிக்கு அறிவுரையாகச் சொல்கிறது குழந்தை.

**அணில்:**

இராமாயணத்தில் இடம் பெற்ற அணில் குழந்தைப் பாடல்களிலும் இடம் பிடித்துள்ளது. குழந்தைகள் அணிலை ரசிப்பது இயல்பு. அணில் உருவத்தில் சிறியது; செயலில் வேகமானது.

> ''வாலைத் தூக்கி கத்திக் கத்தி
> மரத்தில் பாயும் அணிலே! – பழுத்த
> மரத்தில் பாயும் அணிலே!
> ........ ........... ........... ...........
> வெள்ளரிக்காய்த் தோலைப் போல

வெள்ளைக் கோடு முதுகில்! – மூன்று

வெள்ளைக் கோடு முதுகில்!

பிள்ளை அணிலே! உனக்குத் தீட்டிப்

பிறக்க விட்டார் யாரோ? – அழகு

சிறக்க விட்டார் யாரோ?''[28]

என்ற வாணிதாசனின் பாடல், அணிலின் செயலையும் உருவத்தையும் வியந்து பாடும் வகையில் அமைந்துள்ளது.

**எலி:**

அணிலை ஆசையோடு பார்த்த குழந்தை, எலியை அச்சத்தோடு பார்க்கும். பொருட்களை நாசம் செய்யும் எலியும் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளாகின்றது.

''எலியே சொல்வேன் ஒரு வார்த்தை

என்றன் சொல்லை நீ கேளு!

........ ........... ........... ...........

வயலில் புகுந்து நெற்கதிரை

வாயால் கடித்து அழிக்கின்றாய்!

வாடை பிடித்துப் பண்டங்களை

வகையாய் திருடித் தின்கின்றாய்!

........ ........... ........... ...........

குற்றம் செய்வோர் தண்டனையைக்

கொள்ள நேரும் திருந்திவிடு!''[29]

என்று பாடுகிறார் மலரடியான். எலி செய்யும் தகாத செயல்களைப் பட்டியலிட்டு, தண்டனை கிடைக்கும்; திருந்திவிடு என எச்சரிப்பதன் மூலம் குழந்தைகளும் தகாத செயல்களைத் தவிர்க்க வேண்டுமென அறிவுரைக்கிறார்.

**கழுதை:**

இன்று கிராமப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் அருகிவிட்ட விலங்குகளுள் ஒன்று கழுதை. அந்தக் கழுதையைப் பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்லும் கவிதைகள் சில உள்ளன.

''வண்ணான் வீட்டுக் கழுதை!
வயிறு பெருத்த கழுதை.
முதுகின் மீது பெரிய
மூட்டை சுமக்கும் கழுதை!
காகிதத்தைக் கூடக்
கடித்துத் தின்னும் கழுதை!''[30]

கழுதையின் உருவத்தையும் செயலையும் குழந்தைக்கு அறிமுகப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**குதிரை:**

குதிரைகளும், குதிரை வண்டிகளும் காண அரிதாகிப் போன காலத்தில், குதிரைகளைப் பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்ல நிறையப் பாடல்கள் உள்ளன.

''டக் டக் குதிரை
தாவி ஓடும் குதிரை
கொள்ளுத் தின்னும் குதிரை
குட்டி போடும் குதிரை
வேகம் போகும் குதிரை
வெள்ளை நிறக் குதிரை''[31]

இப்பாடல் குதிரையை அறிமுகம் செய்கிறது. கடற்கரை, மிருகக்காட்சி சாலை, சர்க்கஸ் போன்ற இடங்களில் குதிரையைக் காணும் குழந்தை குதிரைப்பாடலைப் பாடி மகிழும்.

**குரங்கு:**

இன்றும் பல கிராமங்களில் குரங்குக் கூட்டங்களின் தொல்லை மிகுதியாக உள்ளன.

''உடலைச் சொறிகுது ஒரு குரங்கு;
'உர்உர்' என்னுது மறுகுரங்கு.
........ ........... ........... ...........
வயிற்றில் குட்டி தொங்கிடவே

வானைத் தாவுது ஒரு குரங்கு.

........ ........... ........... ...........

பேனைப் பார்க்குது ஒரு குரங்கு;

பல்டி அடிக்குது மறுகுரங்கு.''[32]

குரங்குச் சேட்டைகளைப் பட்டியிலிடும் இத்தகைய பாடல்களைக் குழந்தைகள் நடித்தபடி பாடி மகிழ்வர்.

**பன்றி:**

இன்றளவும் அருவறுக்கத்தக்க பிராணியாகக் கருதப்படுவது பன்றி. ஆனால் அந்தப் பன்றியும் இழிவானதல்ல என்பதைக் குழந்தைக்குச் சொல்லும் பாடலைக் காண்போம்.

''சின்னக் கிராமத் தோட்டிச்சி

சேற்றில் புரளும் பன்றிச்சி.

உன்னைப் போலப் பலகுட்டி

உவந்தே பெறும்நல் தாய்யாரோ?

........ ........... ........... ...........

பாரைத் தூக்க முன்மாலே

பாங்கென உன்உரு அடைந்தானே!

ஈனப் பிறவி உனக்கில்லை

ஈசன் படைப்பில் தாழ்வுண்டோ?''[33]

கம்பதாசனின் இப்பாடலைப் படித்த குழந்தைகளுக்கு, பன்றியைப் பார்க்கும் போது, முன்பிருந்த மனநிலை நிச்சயம் மாறி இருக்கும். இறைவன் படைப்பில் ஒன்றான பன்றியும் மக்களுக்கு உதவப் பிறந்ததுதான் என்ற எண்ணம் ஏற்படும்.

**அரிதாய்க் காணும் விலங்குகள்:**

நகர்ப்புறத்திலும் கிராமப்புறத்திலும் நாம் பார்க்க இயலாத விலங்குகள், காட்சி சாலையிலும், தொலைக்காட்சியிலும், ஓவியங்களிலும் மட்டுமே குழந்தைகளுக்கு அறிமுகமாகின்றன. அவை குழந்தைப் பாக்களின் பாடு பொருளாகின்றன.

**யானை:**

யானை என்பது குழந்தைகளுக்கு வியப்பூட்டும் ஒரு விலங்கு. யானையைக் கண்டு வியக்கும் குழந்தை, யானையின் உறுப்புக்களைப் பலவற்றோடு ஒப்பிட்டு, உவமை கூறி மகிழும்.

> ''யானை வந்தது! தெருவில்
> யானை வந்தது!
> ..................................
> தூணைப் போன்ற கால்களோடு
> யானை வந்தது!
> துடைப்பம் போன்ற வாலை ஆட்டி
> யானை வந்தது!
> மீனைப் போன்ற கண்களோடு
> யானை வந்தது!
> விசிறி போன்ற செவிகளோடு
> யானை வந்தது!''[34]

குழந்தைகளுக்கு அறிமுகமான பொருட்களோடு ஒப்புமைப் படுத்திப் பாடப்படுவதால், குழந்தையின் மனதில் யானையின் உருவம் நன்றாகப் பதிந்துவிடும்.

**சிங்கம்:**

'காட்டரசன்' என்று சொல்லப்படும் சிங்கம் குழந்தைகளுக்கு அச்சமூட்டும் ஒரு விலங்கு. எனினும் கவிஞர்கள் சிங்கத்தின் கம்பீரத்தைப் பாடு பொருளாக்கிச் சில பாடல்கள் பாடியுள்ளனர்.

> ''காட்டில் வாழும் அரசா—பெரும்
> காடே உன்றன் அரசா?
> ....... ....... ....... ....... ....... .......
> சிம்மக் குரலைக் கேட்டால்—நீ
> சீறிப் பாயக் கண்டால்
> எம்மைக் கொல்லும் என்று விலங்கும்
> எண்ணி ஓடும் விரைந்து!''[35]

சிம்மக்குரலும், சீறிய பாய்ச்சலும் விலங்குகளுக்கு அச்சம் தரும் என்பதைக் குழந்தைகள், அச்சம் விலகாமல் நடிப்புடன் பாடும் பாடலாக அமைந்துள்ளது.

**புலி:**

சிங்கத்தைப் போலவே அச்சமூட்டும் மற்றோர் மிருகம் புலி. அந்தப் புலியும் குழந்தைப் பாடல்களில் பாடு பொருளானது.

''காட்டுப் புலி காட்டுப் புலி
வேட்டை யாடுது.
கலைமானும் குழிமுயலும்
கலங்கி யோடுது''[36]

காட்டுப்புலியின் வேட்டைக்குப் பயந்து மானும், முயலும் கலங்கி ஓடுவதை நாரா. நாச்சியப்பன் காட்சிப் படுத்துகிறார்.

**ஒட்டகம்:**

ஒட்டகம், ஒட்டகச்சிவிங்கி போன்றவற்றின் உயரம் குழந்தைகளை வியப்போடு பார்க்கவைக்கும்.

''ஒரே ஓர் ஊரிலே
ஒரே ஓர் ஒட்டகம்

ஒட்டகத்தின் முதுகிலே
ஒன்பதுபேர் ஊர்வலம்!

ஒன்பதுபேர் சுமையினை
ஒட்டகமே தாங்குமோ?

ஒரே அடி வைத்ததும்
ஒடுங்கி படுத்துக்கொண்டது.

ஒட்டகத்தின் எதிரிலே
ஒருவர்மட்டும் இறங்கவே

ஒட்டகமும் எழுந்தது;

ஒய்யாரமாய் நடந்தது!''[37]

'ஒ' என்ற தலைப்பில் அமைந்த ஒட்டகம் பற்றிய இந்தப்பாடல் பொன்ராசனால் எழுதப்பட்டது. ஒட்டகத்தின் இயல்பைக் கூறுவதுடன், நகைச்சுவை உணர்வுடன் உள்ளது.

**நரி:**

'நரி என்பது தந்திரம் மிக்கது' என்ற கருத்தைச் சிறு குழந்தை கதை மூலம் தெரிந்து வைத்திருக்கிறது. அந்தக் குழந்தைக்குப் பாடல் மூலமாகவும் நரி பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன.

''நரியார் ஊளை

நுழைந்தார் சோலை!

கூப்பிடு ஆளை

எடுடா கோலை!

வருவேன் நாளை

வாலைப் பிடிப்பேன்

வரப்பில் அடிப்பேன்''[38]

ஊளையிட்டபடி சோலைக்குள் புகுந்த நரி அடிபடப் போவதைச் சொல்கிறது இந்தப்பாடல்.

**மான்:**

மானின் அழகும் மருட்சியும் குழந்தைகளைக் கவர்ந்திழுக்கும். சாதுவான மான் குழந்தைப் பாடல்களின் பாடு பொருளாக உள்ளது.

''மானே மானே ஓடிவா.

மகிழ்வாய்த் தண்ணீர் குடிக்கவா.

....... ................ .......................

புல்லைக் கொஞ்சம் மேய்ந்திடுவாய்

பொறுமை யாக நடந்திடுவாய்''[39]

காட்டில் வாழ்ந்தாலும் புல்லைத் தின்று, தண்ணீர் குடிக்கும் சாதுவான மிருகம் மான் என்பதைக் குழந்தை தெரிந்து கொள்ளும்.

**முயல்:**

பஞ்சுஉடல், பிஞ்சுப்பாதம், குறுகுறுத்த செயல் அனைத்தையும் குழந்தைகள் ரசிப்பார்கள். முயலைக் கண்டு மகிழ்வது குழந்தைகள் இயல்பு.

‘‘வெள்ளை முயல் ஓடுது!
வேகமாக ஓடுது.
முத்துப் போல கண்ணிலே
மேலும் கீழும் பாக்குது.
...... ........ ......... ..........
நெட்டை யான காதுதான்
நீட்டி நீட்டி ஆட்டுது!
குட்டை யான வாலுதான்
குறுகுறுன்னு ஆட்டுது’’.[40]

முயலைக் காணும் குழந்தை, முயலின் உருவத்தையும் செயலையும் பாடுவதற்கேற்ற பாடலாக இது அமைந்துள்ளது.

**நீர் யானை:**

யானையோடு உருவ ஒற்றுமை இல்லையென்றாலும் அளவில் பெரிதாக இருப்பதாலும் நீரில் வாழ்வதாலும் நீர் யானை எனப் பெயர் பெற்றது. அந்த நீர் யானையும் குழந்தைப் பாடல்களில் பாடுபொருளானது.

‘‘நீரில் அசையும் நீர்யானை
............ ........ ...
நகரும் மலைபோல் வைத்திருக்கும்
நம்கண் அதன்மேல் மொய்த்திருக்கும்
.......... .............. .............. ...................
துதிக்கை யில்லை என்றாலும்
தோன்றும் ஒருமா மலைபோலும்’’[41]

மின்னூர் சீனிவாசனின் இந்தப் பாடல் நீர்யானையின் மாபெரும் உருவத்தை மலையாகச் சித்தரிக்கிறது.

இவ்வாறு அரிதாய்க் காணும் விலங்குகளை ஆர்வமாய் ரசிக்கிறது குழந்தை. ரசிக்கும்போது பாடி மகிழப் பாடல்களும் தந்துள்ளனர் குழந்தைக் கவிஞர்கள்.

**பறந்து திரியும் பறவைகள்:**

நம்மைச் சுற்றிப் பறந்து திரியும் பறவைகளைக் குழந்தைகள் ஆர்வத்துடன் பார்க்கின்றனர்.

**மயில்:**

மயிலின் அழகில் மயங்காதவர் இல்லை. குழந்தைகளும் விதிவிலக்கல்ல.

> ''அழகு மிக்க மயிலிது
> ஆடிக் களிக்கும் மயிலிது
> வழவ ழப்புத் தோகையில்
> வண்ணங் காட்டும் மயிலிது!
> அழகுக் கொண்டை தோகையும்
> ஆண் மயிலுக் குரியது!''[42]

அழகான மயிலை வர்ணிப்பதுடன், ஆண் மயிலுக்குத் தான் தோகையும் கொண்டையும் உண்டு என்ற செய்தியைக் கூறுகிறது பாடல்.

**குயில்:**

ஆடலுக்கு மயில் என்றால், பாடலுக்குக் குயில் என்போம்.

> ''கூவும் குயிலே எனைப்பாரு—உன்
> குரலின் இனிமை பழச்சாறு!
> ........ .......... ....................
> உருவம் கருமை யானாலும்—உன்
> உள்ளமும் குரலும் இனிமையன்றோ?''[43]

இப்பாடல் குயிலின் குரல் இனிமையைச் சொல்கிறது. உருவம் கருமை என்பதால் குறைவாகக் கருதக்கூடாது என்பதையும் பாடல் வழி தெரிவிக்கிறது.

**புறா:**

மணிப்புறா, மாடப்புறா எனப் பலவகைப் புறாக்களைக் கவிஞர்கள் பாடி இருக்கிறார்கள்.

> ''பறக்கும் புறாவைப் பிடித்துத் தர
> வேணுமாம்.
> பாப்பா இங்கே அழுவதைப் பார்
> அம்மா
> பச்சைப் புறா நீலப் புறா
> வேணுமாம்.''[44]

அறியாமையால் பச்சை, நீல வண்ணப் புறாக்களைக் கேட்டு அழும் குழந்தையின் இயல்பைப் பாடலாகத் தந்துள்ளார்.

**தூக்கணங்குருவி:**

தூக்கணங்குருவி என்றதும் அதன் அழகிய கூடு நம் நினைவிற்கு வரும். அந்தத் தூக்கணங்குருவிக் கூட்டைக் கவிஞர்கள் சிலர் பாடுபொருளாகக் கொண்டு பாடியுள்ளனர்.

> ''தூக்கணங் குருவிக் கூடு—பார்க்கத்
> தோப்புக் குள்ளே ஓடு.
> ஆக்கும் முறையோ அருமை—அந்த
> அழகுக் கூட்டின் பெருமை.
> ......... ............ ............. ..................
> அஞ்சறைப் பெட்டி போன்ற—நல்ல
> அழகுக் கூட்டுக் குள்ளே
> குஞ்சுப் பறவை சூழ—அன்பாய்க்
> குருவிக் குடும்பம் வாழும்''.[45]

இதுவரை தூக்கணங்குருவிக் கூட்டைப் பார்க்காத குழந்தைக்குப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எழும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.

**குருவி:**

குருவிகளில் பலவகை உண்டு. எந்த வகையானாலும் அவற்றின் சிறிய தோற்றமும் மாறுபட்ட வண்ணமும் குழந்தைகளுக்கு மகிழ்ச்சி தரும். அதிலும் சிட்டுக் குருவியைக் காண்பது அவர்களுக்குப் பேரின்பம் தரும்.

> ''சிட்டு சிறிய சிட்டு!
> செடியில் பாடும் சிட்டு!
> ........... ............ ............
> பூச்சி புழுவைத் தின்னும்
> புதரில் கூடு கட்டும்
> ஈச்சங் கொட்டை போல
> இடுமே முட்டை சிட்டு!''[46]

வாணிதாசனின் இந்தப் பாடல் சிட்டுக் குருவியைச் சித்தரிக்கிறது. அதன் செயல்களைச் சொல்கையில் ஈச்சங் கொட்டையை அதன் முட்டைக்கு உவமையாகச் சொல்கிறார் கவிஞர்.

**கிளி:**

பச்சை வண்ண உடலும் சிவப்பு வண்ண மூக்கும் உடைய கிளியை விரும்பாத குழந்தைகள் உண்டா? கிளியைப் பாடாத கவிஞர்களும் உண்டா?

> ''ரங்கா, கிளியின் வண்ணம் பார்;
> ............ ............ ........... .............
> பச்சைக் கிளியின் தலையைப் பார்;
> பஞ்ச வர்ணச் சிறகைப் பார்;
> முந்திரிக் கொட்டை மூக்கைப் பார்;
> பவள நிறத்தின் கோடு பார்;
> சொன்னதைச் சொல்லும் வண்ணம் பார்.''[47]

கிளியைப் படம்பிடித்துக் காட்டும் இந்தப் பாடல், நாம் சொல்வதைத் திருப்பிச் சொல்லும் ஆற்றல் கிளிக்கு உண்டு என்பதையும் சொல்கிறது.

**ஆந்தை:**

ஆந்தையை நேரில் காண்பது அரிது. இருந்தும் படங்கள் மூலம் அறிமுகமான ஆந்தையைக் குழந்தைகள் பாடி மகிழச் சில பாடல்கள் உள்ளன.

> ''ஆலமரத்து ஆந்தையே
> அலறுகின்ற ஆந்தையே!
> இமை உருட்டும் ஆந்தையே
> இரவில் விழிக்கும் ஆந்தையே!
> பறந்து செல்லும் ஆந்தையே
> பகலில் தூங்கும் ஆந்தையே!''[48]

ஆந்தை பகலில் தூங்கி, இரவில் விழிப்பதால்தான் நாம் அதனை எளிதாகப் பார்க்க முடிவதில்லை என உணரும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.

**நாரை:**

நாரையைக் காணும் வாய்ப்புப் பெற்ற குழந்தைகள் சிலர்தான்.

> ''நாரையக்கா! நாரையக்கா!
> நாணிக்கோணி கரையோரம்
> நிற்பதேனோ நாரையக்கா?
> நீண்ட மூக்கு நாரையக்கா
> ஒற்றைக் காலில் பொம்மைப்போல
> நிற்பதேனோ நாரையக்கா?''[49]

தன்னை விட உயரமாக இருக்கும் நாரையைக் குழந்தை 'நாரையக்கா' என அழைத்துப் பாடுவதாகக் கவிஞர் இயற்றியுள்ளார்.

**வாத்து:**

குளத்தில் வாத்தைப் பார்க்கும் குழந்தைக்குப் பலவித வினாக்கள் கேட்கத் தோன்றும். இதையே கவிஞர் பாடு பொருளாக்கிப் பாடல் தருகிறார்.

'குவாக் குவாக்' குள்ள வாத்தே
குளிக்கப் போறீரா?
...... ......... ............. ..................
ஆழக் குளத்தில் படகு போல
அழகாய்ப் போறீரே—நீச்சல்
அடிக்க எனக்கு ஆசை உண்டு
கற்றுத் தாரீரா?
தண்ணீர்க் குள்ளே தலையை விட்டு
என்ன தேடுறீர்—பச்சை
தவளை பாம்பு நண்டு கடிச்சு
தவிக்கப் போகிறீர்''[50]

*வாத்திடம் தோழமையுடன் வினா எழுப்பினாலும் மரியாதை நிமித்தம் 'அர்' விகுதி கொடுத்து குழந்தை பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

**மரங்கொத்தி:**

*குழந்தைப் பாடல்களில் மரங்கொத்தியைப் பாடுபொருளாகக் கொண்ட பாடல்கள் மிகச் சிலவே.*

''மரங்களிலே பொந்து செய்யும்
மரங்கொத்தியாரே!—அதில்
மகிழ்ச்சியுடன் வாழ்கிறாயா
மரங்கொத்தியாரே!
உரமிகுந்த உனதலகால்
மரங்கொத்தியாரே! மிக
ஊக்கமுடன் கொத்துவதேன்
மரங்கொத்தியாரே!''[51]

*கூர்மையான, வலிமை மிக்க அலகினால் மரத்தைக் கொத்திக் கொத்தி பொந்தமைத்து வாழ்வது மரங்கொத்தி என்ற செய்தியைப் பாடல் மூலம் குழந்தைகளுக்குச் சொல்கிறார் கவிஞர்.*

இன்னும் காக்கை, கோழி, கழுகு, பருந்து போன்ற பறவைகளைப் பற்றியும் குழந்தைகளுக்காக எழுதியுள்ளனர். பொதுவாக பறவையின் வடிவம், செயல், பயன் போன்றவற்றைச் சொல்லவும் பறவைகளின் பண்புகளைக் கூறவும் அவற்றைப் பாடு பொருளாக்கினர்.

**சுற்றி வாழும் சிறிய உயிர்கள்:**

நம்மைச்சுற்றி வாழும் சின்னஞ்சிறிய உயிரினங்கள் குழந்தைகளின் கவனத்தை ஈர்ப்பன. அவற்றையும் கவிஞர்கள் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளாக்கினர்.

**வண்ணத்துப்பூச்சி:**

மயக்கும் வண்ணங்களைக் கொண்ட வண்ணத்துப் பூச்சியைப் பற்றிப் பல கவிஞர்கள், குழந்தைப் பாடல்கள் இயற்றியுள்ளனர்.

''கண்ணினைக் கவரும் நல்ல
கவினுறு மலரில் மேவும்
வண்ணத்துபூச்சி யே! நீ
.....................................
தேனினை அதிக மாகக்
குடித்ததால் உனது நாக்கு
ஊனமாய்ப் போன தா?
.................. .............. ........
தேனினைக் குடிக்கும் ஈயும்
'சிவ்'வென்று பறக்கும் வண்டும்
கானமே புரியும் நீதான்
காதினால் கேட்டி டாயோ?''[52]

என்ற தணிகை உலகநாதனின் பாடல் வண்ணத்துப்பூச்சி ஒலி எழுப்பாத தன்மையைக் குழந்தைக்கு உணர்த்துகிறது. அத்துடன் ஒலி எழுப்பாமைக்குக் காரணம் என்னவாக இருக்கும் என்ற சிந்தனையைத் தூண்டுவதாகவும் அமைந்துள்ளது.

**ஈ:**

ஈக்கள் பற்றியும் சில கவிஞர்கள் குழந்தைப் பாடல்கள் இயற்றியுள்ளனர்.

> ''ஈயே ஈயே ஓடிப்போ
> எங்கள் வீட்டில் நிற்காதே.
> ....... ......... .......... ..........
> அசுத்தம் இருந்தால் ஈயிருக்கும்
> அசுத்தம் இருந்தால் நோயிருக்கும்
> அசுத்தம் ஒழிந்தால் இவை ஒழியும்
> அதனால் அசுத்தம் ஒழிப்பேன் நான்!''[53]

இப்பாடலில் ஈயைத் தூர ஓட்டுவதுடன் ஈ வருவதற்கான காரணம், வராமலிருக்க வழி ஆகியன கூறப்படுகிறது.

**கொசு:**

ஈயைப் போல தொல்லை கொடுக்கும் மற்றொரு உயிரினம் கொசு. கொசுவுக்கும் குழந்தைப் பாடல்களில் இடம் உள்ளது.

> ''ஙொய் ஙொய் கொசுவே!
> போ போ போ!
> நோய் வரும் உன்னால்
> போ போ போ!
> ....... ....... ....... .......
> நறுக் கெனக் கடித்தால்
> கொசுப் பயலே!
> நசுக் குவேன் உன்னை
> போ போ போ!''[54]

இந்தப் பாடலை அறிந்த குழந்தை, நிச்சயமாகக் கொசுவைக் கண்டதும் நசுக்கும்.

**எறும்பு:**

ஈயையும் கொசுவையும் போல் எறும்பும் நமக்குத் துன்பம் தரும். எறும்பு ஊர்ந்து செல்லும் வழியில் நாம் குறுக்கிட்டால், நம்மைக் கடிக்கும். சுவையான பண்டங்களை நமக்கும் முன்பாகச் சுவைத்துவிடும். இப்படிச் சில இடைஞ்சல்களை எறும்பு நமக்குத் தந்தாலும் அதனிடம் நாம் கற்க வேண்டிய பாடம் உள்ளது.

''சின்ன சின்ன சிற்றெறும்பே,
சேர்ந்து நடக்கும் சிற்றெறும்பே,
உன்னை ஒன்றும் செயமாட்டேன்;
ஒழுங்காய் ஊர்ந்து செல்வாயே!
புற்றில் மழைக்கு முன்னமே
பொருளைச் சேர்க்கும் அறிவுமே
பற்றும் ஒழுங்கு முறையுமே
பாரில் கற்க வேண்டுமே!''[55]

என்ற அ.கி.பரந்தாமனாரின் பாடல், எறும்பிடமிருந்து ஒழுங்கு முறையைக் கற்க வேண்டும்; எதிர்காலத்திற்குச் சேமிக்கும் பழக்கத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிறது.

**வண்டு:**

பலவித வண்ணங்களில் பலவகையான வண்டுகள் உள்ளன. அவையும் பாடு பொருளாகிக் குழந்தைகளைப் பாடி மகிழ வைக்கின்றன.

''சுற்றிச் சுற்றிப் பறந்தது
சின்ன வண்டு
சுறுசுறு வெனப் பாய்ந்தது
சின்ன வண்டு.
என்னை வட்டம் போட்டது
சின்ன வண்டு
இங்கும் அங்கும் தாவிற்று
சின்ன வண்டு.''[56]

வட்டமிடும் வண்டின் இயல்பைப் பாடுகிறது குழந்தை.

**மூட்டைப்பூச்சி:**

ஈ, கொசு, எறும்பு போலல்லாமல் ஒருசில வீடுகளில் மட்டுமே இருப்பது மூட்டைபூச்சி. அதையும் சில கவிஞர்கள் பாடுபொருளாக்கிக் கவிதை தந்தனர்.

''மூட்டைப் பூச்சியே! ரத்த
வேட்டைப் பூச்சியே!
வீட்டுக் குள்ளே
ஏன்புகுந்தாய்
மூட்டைபூச்சியே!
.......... ....... ..........
நசுக்க நசுக்க முளைத்திடுவாய்
மூட்டைபூச்சியே!
கொசுவை விடக்கொடிய பாவியே
மூட்டைபூச்சியே!''[57]

ரத்தத்தைக் குடிக்கும் மூட்டைபூச்சி கொசுவினும் கொடியது. நசுக்க நசுக்கத் தோன்றுவது என்பதைக் குழந்தைகள் தெரிந்து கொள்ளும் வகையில் பாடியுள்ளார் கவிஞர்.

**செல்:**

'செல்' என்பது புத்தகங்களை அரிக்கும் ஒரு வகைப்பூச்சி. இது பல குழந்தைகளுக்குத் தெரிய வாய்ப்பில்லை. எனினும் இதனைப் பாடுபொருளாக்கிப் பாடுகிறார் கவிஞர்.

''செல்லே! செல்லே! செல்வது மெங்கே?
சிறிதே நின்றிடுவாய்
...................................... .......
ஊசியை வாயில் வைத்துள் ளாயோ?
உயர்ந்த நூல்களையும்
பேசா ஊமையாய்ப் பஞ்சுபஞ் சாகப்
பிய்த்துத் தின்றனையே!

....... ............... ............... ..................

பண்பை வளர்க்கும் புத்தகங் களிலே

படை யெடுத் திடலாமோ?''[58]

என்று செல்லின் மூலம் புத்தகங்களுக்கு ஏற்படும் சேதத்தைச் சொல்கிறது இப்பாடல்.

**சிலந்தி:**

சிலந்தி வலை பின்னுவதைக் காணும் வாய்ப்புப் பெற்ற குழந்தைகள் நிச்சயம் அதனை ரசிப்பர்.

''தறியோ பாவோ இல்லாமல்,

சத்தம் எதுவும் செய்யாமல்,

சிறிய கைகள் கால்களினால்,

செய்யும் நெசவின் அழகைப்பார்!

....... ....... ....... ....... ....... .......

வயிற்றில் இருந்தே நூலாக்கி

வழவழப் புள்ள மெருகூட்டி

வெயிலின் ஒளியில் வலைபின்னும்

விந்தை அழகின் நெசவைப்பார்!

....... ....... ....... ....... ....... .......

மூலை, முடுக்கு, முள்வேலி,

முன்தாழ் வாரம், கதவிடுக்கில்

நூலைப் பூட்டி நெய்கின்ற

நுட்ப மான நெசவாளி!''[59]

இப்பாடலைப் படிக்கும் குழந்தைகள், இதுவரை சிலந்தியையும், சிலந்தி வலையையும் பார்க்காதவராயின் நிச்சயம் தேடித் தேடிப் பார்க்க நினைப்பர். அவர்களின் ஆவலைத் தூண்டும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.

**மின்மினிகள்:**

*இரவுநேரப் பயணங்களில் பறந்து வரும் ஒளி விளக்காம் மின்மினிப் பூச்சிகள் குழந்தைகளுக்கு மகிழ்ச்சியூட்டக் கூடியன.*

''மின்னல் விளக்கோ—சிறு
மின்னல் விளக்கோ—இரவில்
மின்னிப் பொலிந்திடும்
மின்மினிப் பூச்சி எலாம்!
விண்ணில் தெரியும்—நீல
விண்ணில் தெரியும்—சுடர்
விண்மீன்கள் கூடிஇம்
மண்ணுக்கு வந்தனவோ!''[60]

*மின் மினிப் பூச்சியை வியப்போடு பார்க்கும் குழந்தை பாடுவதற்கு ஏற்ற பாடல் இது.*

**மரவட்டை:**

*மழை காலத்தில் ஊர்ந்து திரிபவை மரவட்டை. அவற்றைப் பாடவும் கவிஞர் பாடல் இயற்றியுள்ளார்.*

''கரிய நீள மேனியிலே
கரையிட் டாற்போல் இருபுறமும்
சிறிய மஞ்சள் கோட்டுடனே
திகழும் சின்ன மரவட்டை''[61]

*மரவட்டையின் உருவத்தைச் சித்தரிப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

**மண்புழு:**

*'உழவர்களுக்கு உற்ற நண்பன்' என்று சொல்லக் கூடிய மண்புழுவும் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளானது.*

''தம்பி தம்பி இங்குவா
தரையில் என்ன என்றுபார்

கம்பி போல வளையுதே

கால்கள் இல்லை நகருதே.

வழவ ழப்பாய் இருக்குதே

வளைந்து நெளிந்து போகுதே

அழகு குன்றி இருக்குதே

அங்கும் இங்கும் நகருதே!

என்ன என்று தெரியுதா?

எதுவும் புரிய வில்லையா?

என்பி லாத புழுவிது

எளிய தான மண்புழு''[62]

மண்புழுவைப் பற்றிய புதிர்போல் அமைந்த பாடல் இது. மண்புழுவைப் பார்த்த குழந்தை முதல் இரு பத்தியைப் படித்தவுடன் 'மண்புழு' என்று விடை கூறிவிடும்.

**பச்சோந்தி:**

அறிவியல் பாடத்தில் படிக்கும் விந்தைமிகு பச்சோந்தியைப் பார்க்கும் வாய்ப்பு எல்லாக் குழந்தைகளுக்கும் கிடைப்பதில்லை.

''இருக்கும் இடத்தை போலவே

நிறத்தை மாற்றிக் கொள்கிறாய்!

நடந்து செல்லும் பூச்சியை

நாக்கை நீட்டிப் பிடிக்கிறாய்!

....... ....... ....... ....... ....... .......

முள்ளம் பன்றி போலவே

முடியை நீட்டிக் கொள்கிறாய்!

....... ....... ....... ....... ....... .......

இயல்பை மாற்றும் மனிதர்போல்

இருக்கிறாய் பச் சோந்தியே!''[63]

இப்பாடல் பச்சோந்தியின் இயல்பைச் சொல்கிறது. அத்துடன் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப மாறும் மனிதர்களையும் உவமையாக்குகிறது.

**நீர் வாழ் உயிரினங்கள்:**

*நீரிலும் நிலத்திலும் வாழும் உயிரினங்கள் பற்றியும் பல குழந்தைப் பாடல்கள் உள்ளன.*

**தவளை:**

*தமிழகத்தில் தவளையைப் பார்க்காத குழந்தைகள் இருக்கமுடியாது. எங்கும் காணும் தவளையை 'ஆர்' விகுதி கொடுத்துத் 'தவளையார்' என மரியாதையுடன் பாடும் பல பாடல்கள் உள்ளன.*

> ''தத்தித் தத்தித் தவளையார்
> 
> தாவி நீரில் பாயுறார்!
> 
> கத்திக் கத்தி இரவெல்லாம்
> 
> கண் விழித்துப் பாடுறார்!''[64]

*தத்திச் செல்வது, கத்திக் கொண்டிருப்பது, நீரில் தாவுவது எனத் தவளையின் இயல்புகள் இங்கே பாடலானது.*

**முதலை:**

*தவளையைப் போலவே நீரிலும் நிலத்திலும் வாழ்வது முதலை. ஊர்ந்து செல்லும் உயிரினத்தில் உருவத்தில் பெரிய முதலை குழந்தைகளை வியப்படையச் செய்யும்.*

> ''ஊர்வன பலவற்றுள்
> 
> பெரியதே முதலையாம்
> 
> ஊர்ந்து வரும் மண்மேலே
> 
> உடல் பெருத்த முதலையாம்
> 
> ....... ....... ....... ....... ....... .......
> 
> நீரினிலே இருக்கும் போது
> 
> வலிமை மிக்க முதலையாம்
> 
> ....... ....... ....... ....... ....... .......
> 
> பாறையுடன் பாறைபோன்று
> 
> படுத்தி ருக்கும் முதலையாம்!''[65]

நீரிலும், நிலத்திலும் முதலையின் வலிமை மாறுபடும் என்ற அறிவியல் உண்மையைச் சொல்கிறது இப்பாடல்.

**நண்டு:**

நண்டும் நீரிலும் நிலத்திலும் வாழக்கூடியது. நண்டின் உருவம் விநோதமானது. அதனைப் பாடு பொருளாக்கி மகிழ்விக்கும் குழந்தைப் பாடல்கள் சில உள்ளன.

> ''நண்டு மாமா! நண்டு மாமா—உங்க
> சுண்டு விரல் எங்கே மாமா?
> கூரை யில்லா வீட்டுக்குள்ளே
> வசிக் கின்ற நண்டு மாமா''[66]

என்ற பாடல் நகைச்சுவைப் பாடலாக அமைந்துள்ளது.

**ஆமை:**

நண்டைப் போலவே வலிமையான ஓட்டுக்குள் வாழும் உயிரினம் ஆமை. திருமால், ஆமை உருவெடுத்ததாகப் புராணம் சொல்கிறது. ஆமையைப்போல் ஐந்தடக்கல் வேண்டுமென்கிறார் வள்ளுவர்.

நிதானமும், விடா முயற்சியும் வெற்றியைத் தரும் என முயல் ஆமை கதை கூறும். அத்தகைய ஆமையின் நடையை வேடிக்கை நிறைந்த பாடலாகத் தருகிறார் கவிஞர்.

> ''ஆமையாரின் மாமியார்
> ஆடிமாதம் வரச்சொல்லி
> அஞ்சல் எழுதினார்
> ஆடிமாதம் புறப்பட்டே
> ஐப்பசியில் போய்ச்சேர்ந்தார்
> அன்பின் ஆமையார்''[67]

இந்தப் பாடலில் ஆடியில் புறப்பட்டு ஐப்பசியில் சென்றடைந்தது ஆமை என்பது நகைச்சுவைபோல் தோன்றுகிறது. இருந்தாலும் ஆமையின் விடா முயற்சியும், இலக்கை அடைவதில் உள்ள உறுதியும் புலப்படுகிறது.

**மீன்:**

*சங்க காலம் தொட்டு மீனைப் பாடாத கவிஞர்கள் இல்லை என்று சொல்லுமளவிற்கு மீனைப்பற்றிப் பலரும் பாடியுள்ளனர். வண்ணம் நிறைந்த வகை வகையான மீன்கள் குழந்தைகளின் எண்ணத்தை ஈர்ப்பன.*

''வட்ட மான குளத்திலே
எட்டு மீனு வலையிலே!
கெட்டி யாகப் பிடிக்கவே
சுட்டி மணி சென்றனன்!
எட்டில் ஒன்று மட்டுமே
கட்டி வலைப் பட்டது!
பட்ட மீனும் கையினை
கடித்து ஓடிச் சென்றது!''[68]

*வலை கொண்டு மீன்பிடிக்கச் சென்ற சிறுவனின் ஏமாற்றத்தைச் சொல்கிறது பாடல்.*

*மேற்கண்ட பாடல்கள் குழந்தைகளுக்கு அறிமுகமான உயிரினங்களைப் பாடி இன்புறவும் அறியாத உயிரினங்களை அறிமுகப்படுத்தவும் உதவுகின்றன. உயிரினங்களின் இயல்புகளைக் கூறி வியக்க வைக்கவும் விலங்குகளின் நல்லியல்புகளைப் பின்பற்றச் செய்யவும் வழி வகுக்கின்றன. மேலும் விலங்குகளைப் பற்றி அறியும் ஆர்வத்தைக் குழந்தைகளிடம் தூண்ட இத்தகைய கவிதைகள் உதவுகின்றன.*

*குழந்தைப் பாடல் நூல்கள் பலவற்றில் விலங்கு, பறவை, பூச்சி வகைகளுக்கென தனிப்பகுதி ஒதுக்கியுள்ளனர். 'பாப்பாவுக்கு மிருகங்கள்' என்ற கே.எஸ்.லஷ்மணன் இயற்றிய நூலில் 26 மிருகங்களைப்பற்றிய பாடல்கள் உள்ளன. ஒருபக்கம் மிருகத்தின் படம்; எதிரே பாடல் என்ற வகையில் அமைந்த நூலை வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

**பயிர் வகைகள்:**

உயிரினங்களின் உயிர் வாழ்விற்கும் பயிரினங்கள் மிகமிகத் தேவை என்பதை வளரும் குழந்தைகள் உணர வேண்டும். எனவே பாடல்கள் மூலம் குழந்தைகளுக்கு, இயற்கையின் கொடையாம் இனிய பயிரினங்களைப் பாடுபொருளாக்கிப் பல கவிஞர்கள் பாடல் புனைந்துள்ளனர். அவற்றை மரங்கள், பூக்கள், காய்கள், கனிகள் என்ற நிலைகளில் காணலாம்.

**மரங்கள்:**

உயர்ந்து நிற்கும் மரங்களும் அவற்றின் இலைகளும்,பூக்களும் காய்களும், கனிகளும் குழந்தைகளை மகிழ்விப்பன. எனவே இவை குழந்தைகளுக்கான பாடு பொருளாயின.

**வாழை:**

வீட்டுத் தோட்டத்தில் இடம் பெறக்கூடிய மரங்களுள் ஒன்று வாழைமரம்.

> ''வாழை நல்ல மரமாம்–நாம்
> வாழ எல்லாம் தருமாம்.
> ....... ....... ....... ....... .......
> வாழை யின்பல பாகங்கள்
> வாழ்வோர்க் கேஉப யோகங்கள்!
> வாழை போல முழுமையாய்
> வாழ்வோம் பிறருக் குதவியாய்!''[69]

இப்பாடல் வாழையின் பூ, காய், தண்டு, கனி, பட்டை, இலை என அனைத்தும் பலருக்கும் பல விதங்களில் பயன்படுவதைச் சொல்கிறது. அத்துடன் நாமும் வாழையைப் போல் பிறருக்கு உதவிட வேண்டும் என்ற கருத்தையும் சொல்கிறது.

**ஆலமரம்:**

நெடுஞ்சாலைகளிலும் பெரிய தோட்டங்களிலும் காணப்படும் ஆலமரம் குழந்தைகளை வியப்பில் ஆழ்த்தக் கூடியது. ஆலமரத்தைப் பற்றிச் சில கவிஞர்கள் பாடியுள்ளனர்.

''ஆலமரம் நல்ல ஆலமரம்
ஆற்றங் கரையில் ஆலமரம்
ஓங்கி வளர்ந்த ஆலமரம்
ஓய்வுக் கியற்கை தந்தவரம்!
.......... .......... .......... .........
விழுதுகள் தொங்கும் ஆலமரம்
விளையாட்டு ஊஞ்சல் ஆனதுவே
பழுதில் லாததோர் ஆலமரம்
பலருக்கும் வீடாய் ஆனதுவே!''[70]

ஆற்றங்கரையில் மிகுந்திருக்கும் ஆலமரம் ஓய்வுக்கானது என்றும் விழுதுகள் ஊஞ்சலாட உதவுவன என்றும் பாடல் வழி தெரிந்து கொள்கிறது குழந்தை.

**பப்பாளி:**

வீடுகளில் எளிதாகக் காணக்கூடிய மரம் பப்பாளி.

''அசையாது நிற்கும் சிறுமரத்தைப்பார்
மரம் நிறைய பப்பாளிபார்
தினமும் கொஞ்சம் தின்றுபார்
திடம் பெறும் உடலைப்பார்.''[71]

சிறிய மரத்திலும் மிகுந்து காய்க்கக் கூடியது பப்பாளி. அதன் காயும் கனியும் உடலுக்குத் திடம் தருவன என்ற செய்தியைக் கூறுகிறது பாடல்.

**தென்னைமரம்:**

தேங்காய், இளநீர், கயிறு போன்ற பொருட்களைத் தரும் தென்னை மரங்களை மக்கள் விரும்பி வீடுகளில் வளர்க்கின்றனர்.

''அன்னை போல அன்பாய் நிற்கும்
ஆசை யாய்க்கை வீசி நிற்கும்
தென்னந் தோப்புப் பாராய்!
தெரிகின்றது நேராய்!
மின்னும் ஓலைக் கைகள் நீட்டும்
மேலும் பாளைப் பற்கள் காட்டும்
...... .......... ......... .......... ...........
ஓலைக் கொத்தும் நீரும் காயும்
உள்ளந் துள்ள யார்க்கும் ஈயும்!''[72]

என்று வாழையைப் போல் முழுமையாய்ப் பயன்படும் தென்னையைப் பற்றிப் பாடுகிறார் கவிஞர். ஓலையைக் கைகளாகவும், பாளையைப் பற்களாகவும் உருவகம் செய்து பாடுகிறார்.

**ரப்பர் மரம்:**

எல்லோரும் எளிதாகப் பார்க்க முடியாத மரம் ரப்பர் மரம். அரிதாகக் காணக்கூடிய ரப்பர் மரம் குழந்தைகளுக்கான பாடுபொருளானது.

''நல்ல ரப்பர் மரங்கள் தான்
நமது நாட்டில் வளருது.
பள்ளம் மேடு எங்குமே
பயிராய் விளைந்து சிறக்குது.
பெரிய சிறிய கிளையுடனே
பெருத்து வளரும் மரங்களே
அரிய பாலைத் தந்துமே
அடுத்துப் பெருமை கூட்டுது.
தோட்ட மக்கள் வாழ்ந்திட
தோள் கொடுக்கும் மரங்களே
வாட்டம் நீக்கி நாமெல்லாம்
வாழ என்றும் உதவுது.''[73]

இது மலேயக் கவிஞர் எல்.எம்.பஹதூர் எழுதிய பாடல். அந்நாட்டு மக்களுக்கு வாழ்வளிக்கும் மரம் என்ற செய்தியைச் சொல்கிறது.

அத்துடன் ரப்பர் மரத்தின் தோற்றம், வளருமிடம், பயன் ஆகியவற்றைச் சொல்லும் பாடலாகவும் உள்ளது.

**மரங்களின் மகிமை:**

வெயிலின் கொடுமைக்கு இதமளிப்பது மரங்கள் என்பதைக் குழந்தைகள் உணரும் வண்ணம் சில பாடல்கள் புனையப் பட்டுள்ளன. அவற்றுள் சற்று வேறுபட்ட பாடல் ஒன்று கவிஞர் பொன்ராசனால் இயற்றப்பட்டது.

''வெயில் கடுமை மிக அதிகம்
ஆகி விட்டது.
........ ..........
ஐயோ இந்த அவதி எப்போ
தீரப் போகுது?
.............
ஆண்டவனே இதற்கு வேறு
மாற்றே இல்லையா? என
அரச மரப் பிள்ளையாரைக்
கேட்க ஓடினேன்.
மரத்தடியில் பிள்ளையாரைப்
பார்த்தவுடனே—என்
மனப் பரப்பின் இருள் விலகித்
தெளிவை உணர்ந்தேன்
வரம் கொடுக்கும் கடவுளுக்கே
நிழல் கொடுக்குதே—இந்த
வள்ளல் மரம் என்று பெரும்
வியப்பும் அடைந்தேன்.
ஆலிலை யில்குழந்தைக் கண்ணன்
படுத் திருப்பதும்—இந்த
அரசடியில் கணபதியார்
அமர்ந் திருப்பதும்
சோலை சூழ்ந்த இடத்தில் அன்னை
கோவில் கொள்வதும்—மிக

சூசகமாய் மரங்கள் பயன்

உணர்த் திடத்தானே!''[74]

**செடிகள்:**

*மரங்களாகும் செடிகளை நட்டு வளர்க்க வேண்டியது மக்களின் கடமை என்பதை உணர்த்த, குழந்தைகளே உணர்ந்து பாட ஏற்ற சிலபாடல்கள் உள்ளன. சான்றுக்கு ஒன்று கூறலாம்.*

''தாத்த வைத்த தென்னையுமே
தலையால் இளநீர் தருகிறது.
பாட்டி வைத்த கொய்யாவும்
பழங்கள் நிறையக் கொடுக்கிறது.
அப்பா வைத்த மாஞ்செடியோ
அல்வா போலப் பழம்தருது.
அண்ணன் வைத்த மாதுளையோ
கிண்ணம் போல பழுக்கிறது
சின்னஞ் சிறுவன் நானும்ஒரு
செடியை நட்டு வளர்ப்பேனே.''[75]

*அழ.வள்ளியப்பாவின் இந்தப்பாடல், செடி வளர்ப்பது வருங்கால சந்ததியினரின் வளமான வாழ்விற்கு வழி வகுக்கும் என்பதனைக் கூறுகிறது. தாத்தா, பாட்டி, பெற்றோர், அண்ணன் ஆகியோர் வைத்த செடிகள் வளர்ந்து பயன் தருவதுடன், அவர்கள் பெயரை நிலை நாட்டுகின்றன. அவற்றைப் போல நாமும் ஒரு செடி நடவேண்டும் என்ற எண்ணத்தைப் பிஞ்சு நெஞ்சங்களில் விதைக்கும் பாடலாக இது அமைந்துள்ளது.*

**காரணப் பெயர்கள்:**

*செடிகளின் பெயர்கள் சில, காரணம் கருதி அமைந்ததை மு.வைத்தியலிங்கத்தின் பாடல் வழி அறியலாம்.*

''தொட்டால் சுருங்கி ஒடுங்கும் செடியை
தொட்டால் சுருங்கி என்றனர் முன்னோர்.
ஆடும் ஆவும் தீண்டாச் செடியை

ஆடா தொடா என்பது பொருந்தும்.

......... ........... ............. ...........

வேல்போல் கூரிய முள்ளின் மரமே

வேலா மரமாம் தெரிந்திடு தம்பி''[76]

இப்பாடல் செடிகளுக்குப் பெயர் அமைந்த முறையை விளக்குவனவாக உள்ளன.

**காளான் குடைகள்:**

பயிர் வகைகளில் குழந்தைகளை வியப்பில் ஆழ்த்துவது காளான். அந்தக் காளானையும் கவிஞர்கள் பாடுபொருளாக்கிப் பாடியுள்ளனர்.

''சின்னச் சின்ன குடைகள்!

சிந்தைக் கினிய குடைகள்!

வட்ட மான குடைகள்!

வெள்ளை வண்ணக் குடைகள்!

...............

கண்ணுக் கினிய குடைகள்!

கையால் தொட்டால் உடையும்!''[77]

காளானைப் படம் பிடித்தது போல் காட்டும் பாடல் இது.

**புல்:**

'சிறிய புல்' என்று புல்லை ஒரு பொருட்டாகக் கருதாமல் இருந்துவிடலாகாது என்று அதன் மகத்துவத்தையும் குழந்தைப் பாடலின் பாடு பொருளாக்கியுள்ளனர்.

''புல்தானே என்றுநீ பாப்பா

புரியாமல் சொல்லாதே பாப்பா

....... ....... ....... ....... ....... .......

புல்லில்லா விடில்பல உயிர்கள்

புவியினில் வாழாது செல்லும்

....... ....... ....... ....... ....... .......

பாலைப்பொழிந்து தரும்

....... ....... ....... ....... ....... .......

அந்தப்

பசுவுக்குப் புல்தானே உணவு!''[78]

என்று புல்லின் பெருமை பாடப்படுகிறது. புல் பல உயிரினங்களுக்கு உணவு. பசுவுக்கும் புல் உணவாகி நமக்குப் பால் தருகிறது என்கிறார் கவிஞர்.

**வீட்டுத் தோட்டம்:**

வீட்டைச் சுற்றியிருக்கும் மண் பகுதியில் சிறிய தோட்டம் அமைக்கலாம். சின்னச் சின்னப் பயிர் வகைகளைப் பொருட் செலவின்றி, சிரமம் இல்லாமல் சிறுவர்களே உருவாக்கலாம்.

''வீட்டை ஒட்டித் தோட்டமிடு

வேண்டிய காய்கறி பறித்திடலாம்.

நாட்டுக் கதனால் நலமுண்டு

நல்ல வரவும் உனக்குண்டு!

....... ....... ....... ....... ....... .......

வெட்டி யழிப்போம் குரோட்டன்ஸை

வீணழ கதனை வெறுத்திடுவோம்.

நட்டு வளர்ப்போம் பயன்மரங்கள்

நாட்டின் வளத்தைப் பெருக்கிடுவோம்!''[79]

என்ற கொ.மா.கோதண்டத்தின் பாடல், வீட்டுத் தோட்டத்தின் பயனைக் கூறுவதுடன், வீணான அழகைக் காட்டிலும் பயன் தரும் தோட்டமே தேவை என்பதைக் கூறுகிறது.

**பூ:**

சிறிய தும்பைப் பூ முதல் பெரிய தாமரைப்பூ வரை மனதைப் பறிகொடுக்காத மனிதரில்லை. வயது வேறுபாடின்றி அனைவருக்கும் பிடித்த பூ வகைகள் பலவுண்டு. அவையும் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளாயின.

**மல்லிகைப் பூ:**

மலர்களிலே மணம் மிக்கது மல்லிகை; மங்கையர்கள் விரும்பி அணிவது மல்லிகை. பெண் குழந்தைகளுக்கு அழகுப் பொருளான மல்லிகை, ஆண் குழந்தைகளுக்கு வாசம் தரும் பொருளாகக் காட்சி அளிக்கிறது.

> ''குண்டு மல்லிகை கொடியிலே
> கொத்துக் கொத்தாய்ப் பூத்திடும்!
> வண்டு தேனை உண்டிட
> வாசம் வீசும் மல்லிகை!
> செண்டு செண்டு மல்லிகை
> சிரிக்கும் வெள்ளை மல்லிகை!''[80]

இப்பாடல் மல்லிகை, கொடியில் மலரும் மலர் என்பதையும் தேனும் வாசமும் நிறைந்த மலர் என்பதையும் சொல்கிறது.

**ரோஜாப்பூ:**

வண்ணத்திலும் மணத்திலும் மக்கள் மனங்களைக் கொள்ளை கொண்ட பூ ரோஜாப்பூ. அதுவும் பாடுபொருளாகிப் பிள்ளைகளை மகிழ்விக்கிறது.

> ''சிவப்பு ரோஜாப்பூ – மணங்கள்
> செறிந்த ரோஜாப்பூ
> சிவப்பு ரோஜாப்பூ–புகழில்
> சிரிக்கும் ரோஜாப்பூ.''[81]

என்ற பாடல் ரோஜாவின் மென்மை, அழகு, மணம் போன்றவற்றைக் கூறுவதாக உள்ளது.

**முல்லைப்பூ:**

தொல்காப்பியர் காலந்தொட்டு இலக்கியத்தில் இடம் பிடித்த முல்லைப்பூ குழந்தைப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது.

''பாப்பா பாப்பா பாருமுல்லை—உன்
பல்லைப் போலே நிறம் வெள்ளை
காலையில் அரும்பாய் இருந்திடுமே
மாலையில் மலராய் விரிந்திடுமே.
மணத்தை எங்கும் பரப்பிடுமே
மனத்தில் மகிழ்ச்சி நிரப்பிடுமே.''[82]

குழந்தையின் பல்லைப் போல முல்லை என்ற உவமையுடன் துவங்கிய கவிஞர், காலையில் அரும்பி,மாலையில் மலர்ந்து மணம் பரப்பும் முல்லையின் இயல்பைக் கூறுகிறார்.

**தாமரைப்பூ:**

தண்ணீரில் இருப்பது; அளவில் பெரியது; கண்ணைக் கவருவது தாமரைப்பூ. தெய்வங்கள் எழுந்தருளியிருப்பது தாமரைப்பூவில் என பக்தி இலக்கியங்கள் கூறும். குழந்தைகளுக்கு வியப்பளிக்கும் தாமரைப் பூவைப் பாடுபொருளாக்கிப் பல பாடல்கள் தந்துள்ளனர் கவிஞர்கள்.

''கண்ணைக் கவரும் தாமரைப் பூவே!
காலையில் மலரும் தாமரைப் பூவே!
தண்ணீருக்குள் காலை ஊன்றி
தவமே செய்யும் தாமரைப் பூவே!
....... ....... ....... ....... ....... .......
தடுமன் பிடித்துக் கொள்ளா திருக்கும்
தத்துவம் என்ன தாமரைப் பூவே!
தாமரைத் தண்டே உன்னைக் கண்டே
தண்ணீர்க் குழாயை உண்டாக் கினரோ!''[83]

இந்தப் பாடல் தாமரையின் அழகைச் சொல்கிறது. மேலும் தண்ணீருக்குள் இருந்தால் தடுமன் பிடிக்கும். ஆனால் தாமரைக்குத் தடுமன் பிடிக்காமலிருக்க என்ன காரணம் எனக் குழந்தைக்கே உரிய இயல்பில் வினா எழுப்புவதாக அமைந்துள்ளது. அத்துடன் தண்ணீர் குழாய் உருவாகத் தாமரைத் தண்டுதான் காரணமோ என வியக்க வைக்கிறது.

**சூரிய காந்தி:**

சூரியனை வடிவத்தில் ஒத்திருப்பதாலும் சூரியனை நோக்கியே இருக்கும் பூ என்பதாலும் சூரியகாந்தி எனப்பெயர் பெற்றது. சூரிய காந்தியின் வடிவம், பயன் பற்றிக் கவிஞர்கள் சிலர் பாடல் எழுதியுள்ளனர்.

''மஞ்சள் வண்ணம் ஏற்றி
மலரும் சூரிய காந்தி!
தஞ்சம் என்று சூரியன்பக்கம்
சாயும் சூரிய காந்தி!
தங்க வட்டக் குடையைப்போல
தலையைத் தூக்கும் பூவே!
தாவர எண்ணெய் எடுப்பதற்குத்
தகுந்த வண்ணப் பூவே!''[84]

இப்பாடல் சூரியகாந்திப் பூவின் இயல்பும் பயனும் கூறுகிறது.

**பூங்கா ராயா:**

இதுவரை கூறிய பூக்களை நம் குழந்தைகள் கண்டு ரசித்திருக்கிறார்கள். 'பூங்கா ராயா' என்ற மலர் மலேசியா நாட்டு தேசிய மலர். அதனைக் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்தும் பாடல் ஒன்றுள்ளது.

''பூங்கா ராயா எனும் மலராம்!
பூத்துக் குலுங்கும் எழில் மலராம்!
....... ....... ....... ....... ....... .......
பச்சை இலைகள் பூவுடனே
படர்ந்து வளரும் திருமலராம்!
ஐந்திதழ் விரித்துச் செண்டுடனே
அழகாய் மலரும் தனிமலராம்
நந்திரு நாட்டின் புகழ் தன்னை
நன்றாய் நிலைக்கச் செய்திடுமாம்.''[85]

மலேசியக் கவிஞர் எல்.எம்.பஹதூர் எழுதிய இப்பாடல் மலேசிய தேசிய மலரினைப் படம்பிடித்துக் காட்டுவதாக உள்ளது.

**பூ:**

தனித்தனியாக மலர்களைப் பற்றிய பாடல்கள் இருந்தாலும் பொதுவாக பூ பற்றியும் சில பாடல்கள் உள்ளன.

> 'பூவே முதலில் அரும்பாமே;
> அரும்பே வளரின் முகையாமே;
> முகையே பருத்தால் போதாமே;
> போதே கொழுக்கில் மலராமே;
> மலரே விரியின் அலராமே;
> இத்துணை பருவம் இயைந்தாலே
> வாசனை வீசும் பூவாமே!''[86]

பூவின் பல்வேறு பருவங்களைப் பட்டியலிட்டு, குழந்தைகளுக்கு பல்வேறு மலர் தொடர்பான சொற்களை அறிமுகப்படுத்துகிறார் கவிஞர் நடேசன்.

பூவின் பல்வேறு பருவங்களை அறிந்த குழந்தைக்குப் பூவின் வண்ணமும் மணமும் வியப்பைத் தருகிறது. பல்வேறு வினாக்களை எழுப்பச் செய்கிறது.

> ''பூவே உன்னைப் படைத்தவர் ஆர்?
> புதுமணம் உள்ளே நுழைத்தவர் ஆர்?
> பலபல நிறங்கள் பண்ணவர் ஆர்?
> பார்க்க அழகு தந்தவர் ஆர்?
> உன்னைச் செய்தவன் வல்லவனே
> உலகுக் கெல்லாம் நல்லவனே!''[87]

என்ற மணி திருநாவுக்கரசரின் பாடல் குழந்தைகளின் இயல்பான வினாக் கேட்கும் பாணியில் அமைந்துள்ளது. நிறைவாக விடையையும் கூறுவதாக அமைந்துள்ளது.

**காய்கள்:**

பூக்களைப் பாடி மகிழ்ந்த குழந்தை காய்களைப் பார்த்துப் பாட பாடல் வேண்டுமல்லவா? அதற்காகவே கவிஞர்கள் காய்கள் பற்றியும் பாடல் இயற்றியுள்ளனர்.

**பறங்கிக்காய்:**

காய்கறிகளில் அளவில் பெரியது பூசணிக்காயும், பறங்கிக்காயும். பறங்கிக்காயின் வண்ணமும் வடிவமும் சுவையும் அறிந்த குழந்தைக்கு அதைப்பற்றி ஒரு பாடல் தருகிறார் கவிஞர்.

> ''பறங்கிக் காய் பறங்கிக்காய்
> மஞ்சள் நிற பறங்கிக்காய்.
> கொடியில் காய்க்கும் பறங்கிக்காய்
> பெரிய பெரிய பறங்கிக்காய்
> உயிர்ச்சத்து 'ஏ'யைக் கொடுக்குமாம்
> கண் நோய்களை அகற்றுமாம்.''[88]

பறங்கிக்காய் சுவையில் மட்டுமின்றி பயனிலும் சிறந்து விளங்குகிறது. கண்நோய் தீர்க்கும் உயிர்ச்சத்து'ஏ' நிறைந்தது பறங்கிக்காய் என்பதைக் குழந்தை அறிய வாய்ப்பாக உள்ளது.

**இன்பமாக உண்ணலாம்:**

காய்கள் பலவற்றைப் பற்றியும் ஒரே பாடலில் பாடுகின்ற முறையையும் குழந்தைப் பாடல்களில் காணலாம்.

> ''வாழைக்காய் வேணுமா?
> வறுவலுக்கு நல்லது.
> கொத்தவரை வேணுமா?
> கூட்டுவைக்க நல்லது.
> பாகற்காய் வேணுமா?
> பச்சடிக்கு நல்லது
> புடலங்காய் வேணுமா?
> பொரியலுக்கு நல்லது.

தக்காளி வேணுமா?

சாம்பாருக்கு நல்லது.

....... ....... ....... .......

இத்தனையும் வாங்கினால்

இன்றே சமையல் பண்ணலாம்.

இன்றே சமையல் பண்ணலாம்

இன்ப மாக உணலாம்!''[89]

எந்தக் காயை எந்தவிதம் சமைக்கலாம் என்பதற்கான பாடலாக அழ.வள்ளியப்பா பாடல் அமைந்துள்ளது.

காய்களை ருசியாகச் சமைக்கும் விதம் பற்றி மேற்கூறிய பாடல் சொன்னது. அந்தக் காய்களை நாமே விளைவிக்கலாம் என்பதற்கும் பாடல் உள்ளது.

''கத்திரிக்காய் கடைகளிலே

காய்த்த தில்லையே–மனிதர்

கடும் உழைப்பால் வளர்ந்தசெடி

தந்த தல்லவா?

முருங்கக் காயும் சந்தையிலே

முளைத்ததில்லையே– மனிதர்

முயற்சியாலே வளர்ந்த மரம்

தந்த தல்லவா?

....... ....... ....... ....... .......

சத்து மிக்க காய்கறிக்குச்

சந்தை ஏனையா?

சக்தி கொண்டே தோட்டமிட்டு

விளைக்க லாமையா.''[90]

சத்துமிக்கக் காய்களை நாமே விளைவிக்கலாம் என்ற எண்ணத்தைக் குழந்தை மனதில் உருவாக்கும் பாடல் இது.

**கனிகள்:**

காய்கள் கனிந்தால் கனியாகும். அந்தக் கனியின் சுவையோ இனிதாகும். கனிமட்டுமா இனிமை. கனியைப் பற்றிய பாடலும் குழந்தைக்கு இனிமை தரும்.

**முக்கனிகள்:**

நம் தமிழகத்தில் 'முக்கனிகள்' எனச் சிறப்பித்துக் கூறப்படுவது மா, பலா, வாழை. இவற்றைப் பாடு பொருளாக்கிச் சில கவிஞர்கள் குழந்தைப்பாடல்கள் இயற்றியுள்ளனர்.

''எத்திக்கும் விழை முப்பால்
இன்பம் பெருகுவ தைப்போல்
தித்திக் கும்முக் கனிகள்
தேமா பலா வாழைகள்''[91]

இப்பாடலில் முக்கனிகளுக்கு உவமையாகத் திருக்குறளைக் கூறுகிறார் கவிஞர்.

**மாம்பழம்:**

மாம்பழத்தை விரும்பாத குழந்தை இம் மண்ணுலகில் உண்டா? விண்ணுலகிலேயே மாம்பழத்திற்காக பாலமுருகனும் பால கணபதியும் போட்டியிட்டதாகப் புராணம் சொல்கிறது. அத்தகைய மாம்பழத்தைப் பாடாத குழந்தைக் கவிஞர்களைக் காண்பது அரிது.

''மஞ்சள்நிற மாம்பழம்
மல்கோவா மாம்பழம்!
தித்திக்கும் மாம்பழம்
திகட்டுகிற மாம்பழம்!
சத்துள்ள மாம்பழம்
சந்தையிலுள்ள மாம்பழம்!''[92]

என்ற பாடலில் மாம்பழத்தின் நிறம், வகை, சுவை, பயன், கிடைக்கும் இடம் என அனைத்தையும் சொல்கிறார் கவிஞர்.

**நெல்லிக்கனி:**

*அதியன் ஔவைக்குத் தந்த நெல்லிக்கனி நீண்ட வாழ்நாளுக்கு வழி வகுப்பது என்பதை இலக்கியம் காட்டும். அத்தகைய நெல்லிக் கனியைக் குழந்தைப் பாடலில் காணலாம். நெல்லிக் காயை விரும்பும் குழந்தைகள், நெல்லிக் கனி பற்றிய பாடலையும் விரும்பிப் பாடுவர்.*

''கண்ணுக் கதிகம் பலன்தருவேன்
சூட்டைப் போக்கிக் குளிர்தருவேன்.
உண்பவர் நெஞ்சை வலுவாக்கி
உடலைத் தேக்கு நிலையாக்கி
விலையோ மிகவும் குறைவாகி
விளையும் பயனோ நிறைவாகி
உலவித் திரியும் என்பெயரோ
ஒப்பில் நெல்லிக் கனியாகும்.''[93]

*நெல்லிக்கனியின் பயனை அதுவே கூறும் பான்மையில் அமைந்த பாடல்.*

**மாதுளை:**

*ஒரு கிண்ணத்துள் கொட்டி வைத்த வண்ண முத்துக்கள் போன்ற மாதுளை குழந்தைப் பாடல்களில் இடம் பிடித்துள்ளது.*

''மாதுளை யாம் மாதுளை
மலர்ந்து காய்க்கும் மாதுளை
மருத்து வமும் பண்ணலாம்
மகிழ்ச்சி யோடு உண்ணலாம்
ஓடு போட்ட மூடிக்குள்
ஒன்றாய்க் குவிந்த முத்துக்கள்.''[94]

*மாதுளையின் வடிவமும் பயனும் கூறும் பாடல் இது.*

*மேலும் வாழைப்பழத்தின் வகைகள், ஆப்பிள், அன்னாசி, திராட்சை போன்ற பாடல்களையும் கவிஞர்கள் பாடியுள்ளனர்.*

இவ்வாறு பயிர்வகைகள் பற்றிய பல்வேறு தகவல்களைக் குழந்தைகளுக்கு எளிமையும் இனிமையும் நிறைந்த பாடல்களாய்த் தந்துள்ளனர் கவிஞர்கள்.

**பிற வகையின:**

இயற்கையின் படைப்பில் உயிர்வகை மற்றும் பயிர்வகை குழந்தைகளைக் கவரும் பாடு பொருளானது. அதுபோலவே சூரியன், நிலவு, வானவில் ஐம்பூதங்களான நீர், நிலம், நெருப்பு, காற்று, வானம், போன்றவையும் பாடுபொருளாயின.

**சூரியன்:**

காலையில் தோன்றும் கதிரவனைக் கண்டு மகிழாத குழந்தை இல்லை. கிழக்கு வானில் தோன்றி மேற்கு வானில் மறையும் சூரியன் பற்றிப் பள்ளியில் படிக்கும் குழந்தை பாடி மகிழச் சூரியனைக் குழந்தைப் பாடல்களின் பாடு பொருளாக்கினர்.

''காலை நேரம் வானிலே
கட்டித் தங்கம் போலவே
கோள வடிவில் ஆதவன்
குதூக லமாய் வருகிறான்!
பட்டப் பகலில் வெள்ளியைப்
பரப்பி வைத்தாற் போலவே
எட்டுத் திசையும் ஆதவன்
இனிதே காட்சி தருகிறான்!''[95]

திருச்சி பாரதன், காலை நேரத்தில் தங்கமாய் தகதகக்கும் சூரியன், பகலில் வெள்ளியாய் மின்னுவதாய்க் காட்டுகிறார். சூரியன் எட்டுத் திசையும் காட்சி அளிப்பதையும் கூறுகிறார்.

**நிலா:**

நிலவைக் காட்டி உணவூட்டும் பழக்கம் சங்க காலம் தொட்டு இருந்து வருவது முதலியலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அன்று தொட்டு இன்று வரை அம்புலி காட்டி உணவூட்டும் பழக்கம்

அன்னையரிடம் இருந்து வருகிறது. நிலவை அன்போடும் ஆசையோடும் ஏக்கத்தோடும் வியப்போடும் குழந்தைகள் காண்பார்கள்.

''பால்போல் வெளுத்திருக்கும் வெண்ணிலவே—நீ
பகலெல்லாம் எங்கிருந்தாய் வெண்ணிலவே?
கண்ணுக் கழகளிக்கும் வெண்ணிலவே—நீ
காணாமற் போவதென்ன வெண்ணிலவே?
வானத்தில் நீ இருந்தால் வெண்ணிலவே—எங்கள்
வாட்டமெல்லாம் தீர்ந்திடுமே வெண்ணிலவே.
வேண்டி வேண்டி அழைக்கிறோம் வெண்ணிலவே—நீ
விளையாட வருவாயோ வெண்ணிலவே.''[96]

என்ற மணி திருநாவுக்கரசரின் பாடல் குழந்தையின் இயல்போடு எழுப்பப்படும் வினாக்களைக் கொண்டதாக உள்ளது. 'நிலா பால் போல் வெண்மை; பகலில் மறைகிறது; கண்ணுக்கு அழகு தருகிறது; காணாமல் போய்விடுகிறது. இத்தகைய வியப்பூட்டும் வெண்ணிலவு நம்மோடு விளையாடுமா?' என ஏங்குகிறது குழந்தை.

சூரிய சந்திரர்களை இணைத்தும் வேறுபடுத்தியும் பாடும் குழந்தைப் பாடல்களும் சில உள்ளன.

''பகலிலே நாம் முழுப் பலத்துடன் உழைக்க
பகலவன் துணையாய் வந்திடுகிறான்.
இரவிலே நாமே அயர்ந்துமே தூங்க
என்றும் மதிசந்திரன் உதவிடுகிறான்''.[97]

உழைப்பிற்குச் சூரியன் உறக்கத்திற்குச் சந்திரன் உதவுவதைக் குழந்தைக்கு உணர்த்தும் பாடலாக அமைந்துள்ளது.

**வானம்:**

உயர்விற்கு எல்லையாய் இருந்தது வானம். அதன் நீல வண்ணம், பரந்த பரப்பு வியப்பூட்டுவதாய் அமைந்து, குழந்தைப்பாடலின் பாடுபொருளானது.

''நீலக் குடையின் கீழே
நீயும் நானும் பாப்பா!
மெத்தப் பெரிய குடையாம்.
மேதினிக் கெல்லாம் குடையாம்,
....... ....... ....... ....... .......
கண்ணுக் கினியக் காட்சி
கணக்கில் லாமல் காட்டும்
வண்ணக் குடையாம்; இதுவே
வானம் என்னும் குடையாம்!''[98]

வானத்தை நீலக்குடையாகக் காட்டுகிறார் கிருஷ்ணன் நம்பி. மிகப் பெரிய குடை, கண்ணுக்கு இனிய காட்சி நல்குவதாகப் பாடுகிறார்.

**மேகம்:**

வானத்தில் தோன்றும் மேகம் வகை வகையான உருவம் காட்டும். மேகத்தை ரசிக்கத் தெரிந்த குழந்தை அதைப் பாடி மகிழ ஏற்ற பாடல்கள் சில உள்ளன.

''வானம் ஆடி ஓய்ந்ததோ
மேகம் காண இல்லையே!
நானும் தேடிப் பார்க்கிறேன்
மேகம் காண இல்லையே!
சிங்க மாக யானையாக
சிறுத்தை யாகத் தோன்றுமே!
தங்கமாக மின்னும் அந்த
மேகம் எங்கு சென்றதோ!''[99]

மேகத்தைப் பல வடிவங்களாகக் கற்பனை செய்து பாடும் குழந்தையின் இயல்பைக் காட்டுகிறது இப்பாடல்.

**மழை:**

மழை குழந்தைகளுக்குப் பெருமகிழ்ச்சி தரக்கூடியது. அந்த மழையைப் பாடிக் குழந்தையை மகிழ்விக்கின்றனர் கவிஞர்கள்.

''வானின் அமுதே! வள்ளல் மழையே
எங்கே சென்றாயோ!—உன்
வண்ண எழிலின் முகத்தைக் கொஞ்சம்
காட்ட மாட்டாயோ!
....... ....... ....... ....... ....... .......
அகில மெல்லாம் செழித்து வாழ
அருள்வாய் தேன்மழையே!—அன்பாய்
அருள்வாய் தேன்மழையே!
....... ....... ....... ....... ....... .......''[100]

என்ற பாடல் வான் அமிழ்தான மழையைத் தேன் மழையாய்க் காட்டுகிறது. அகிலம் வாழ மழை அவசியம் என்ற செய்தியைக் குழந்தைக்குத் தெரிவிக்கிறது.

**வானவில்:**

மழை வந்தால், வானவில்லின் வர்ண விந்தையைக் காணலாமே! வானவில்லைக் காண குழந்தைகள் வரிந்து கட்டிக் கொண்டு வருவார்களே!

''வானில் தெரியுது—பல
வண்ண வண்ண ஓவியம்
வந்து பார்த்திடு தம்பி!
ஏழு நிறங்கள்—கண்ணை
எட்டிப் பறித்திடும் அந்த
எழிலைப் பார்த்திடு தம்பி!''[101]

**மலை:**

மலை மகத்தானது; உயர்ந்தது; வியப்பூட்டுவது. மலையைக் கண்டு மலைக்காத குழந்தையில்லை. மலைக்க வைக்கும் மலையுமே குழந்தைப் பாடலின் பாடுபொருளானது.

''நீண்டு நிமிர்ந்த மலையே!
நிகரே இல்லா மலையே!

ஆண்டு ஆண்டு காலமாய்

அசையா திருக்கும் மலையே!

....... ....... ....... ....... ....... .......

ஏலம் இலவங்கம் மிளகும்

இனிக்கும் தேயிலை காப்பியும்

சீல மாகத் தந்துமே

சிறந்து விளங்கும் மலையே

....... ....... ....... ....... ....... .......''[102]

ஏலம், இலவங்கம், மிளகு, தேயிலை, காப்பி போன்றவற்றை விளைவிக்கும் மலை, செல்வவளம் மிக்கது என்பதை அழகு பழனிச்சாமி பாடல் மூலம் குழந்தைகள் அறிவார்கள்.

**காற்று:**

கண்ணால் காண இயலாத காற்றை, உணர்வால் உணர முடிந்த காற்றைக் கவிதைப் பொருளாக்கிக் குழந்தைகளுக்குப் பாடினர் கவிஞர்கள்.

''உருவம் இல்லாதது காற்று

உணர வைப்பது காற்று

பருவங்கள் வந்து போகப்

பாரில் நிறைந்தது காற்று.

வாடையாய் வருவது காற்று.

வசந்தமாய்த் திரிவது காற்று.

கோடையில் காய்வது காற்று.

புயலாய் அடிப்பதும் காற்று.''[103]

இப்பாடல் காற்றின் தன்மையைச் சொல்வதுடன், வாடைக்காற்று, வசந்தக் காற்று, கோடைக்காற்று, புயல்காற்று என காற்றின் வகைகளையும் சொல்கிறது.

**புயல்:**

காற்றின் சீற்றம் புயல். அதனையும் குழந்தைக்குச் சொல்கின்றனர் கவிஞர்கள்.

''எப்போதோ வருகின்றாய்!
ஏன்தொல்லை தருகின்றாய்?
வருகின்ற போதேல்லாம்
வருத்தத்தை அளிக்கின்றாய்!
உனக்குவரும் பெரும்பசிக்கு
உயிர்களையே குடிக்கின்றாய்!''[104]

*புயலால் தொல்லை, வருத்தம், உயிர்ப்பலி ஏற்படுவதைப் பாடுகிறார் கவிஞர்.*

**சுனாமி:**

*இயற்கையின் சீற்றத்தால் ஆழிப்பேரலை (சுனாமி) புகுந்து விளைவித்த துயரங்கள் எண்ணிலடங்கா. அதையும் குழந்தைக்குத் தெரிவிக்க கவிதையாக்கினர் கவிஞர்கள்.*

''எல்லாம் தாண்டி வந்தாயே
எமனாய் உயிரை எடுத்தாயே
பிஞ்சுக் குழந்தை சிறுவர்களை
பிணமாய் ஆக்கிப் பார்த்தாயே!
குடிசைக் குள்ளே கடல்வந்தால்
குலையும் நடுங்கச் செய்யாதோ!
....... ....... ....... ....... ....... .......
சுனாமி என்ற பெயரில்வந்து
சுற்றம் முழுக்க அழித்தாயோ!
கடலைப் பார்க்கவே பயம்வருது!
கஞ்சி இனிமேல் யார்தருவார்!''[105]

*என்ற மு.நடராசன் பாடல் சுனாமியால் ஏற்பட்ட அவலத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. தொலைக்காட்சி வழியே சுனாமியை அச்சத்துடன் கண்ட குழந்தை இந்தப் பாடலைப் பொருத்திப் பார்க்கும்.*

**பனி:**

காலங்களில் ஒன்றான பனிக்காலம் நாட்டுக்கு நாடு மாறுபட்டுக் காணப்படும். பனிச்சாரலாக, பனி மழையாக, பனிக் கட்டியாக, பனிப் பாறையாக விளங்குகிறது.

''பனித் துளியைப் பார்—அழகு
பனித் துளிைப் பார்.
இரவில் வானம் விட்டே
இறங்கி யிங்கே வந்தது ;
பரவி யெங்கும் காணுது ;
பளப ளப்பாய் மின்னுது ;
....... ....... ....... ....... .......
புல்லின் நுனியில் தங்கியே
நல்ல முத்தாய்த் தெரியுது ;
....... ....... ....... ....... .......
வெயிலின் ஒளியைத் தாங்கியே
விசித்தி ரங்கள் காட்டுது''.[106]

பனியின் அழகினைக் குழந்தைகள் ரசிக்கத் தூண்டும் பாடலிது.

**கானல் நீர்:**

கானல்நீர் குழந்தைகளுக்கு வேடிக்கையான ஒன்று. கொளுத்தும் வெயிலில் வேதனைப்படும் குழந்தை கூட கானல்நீரைப் பார்த்து விட்டால் மகிழும்.

''கோடை வெயிலில் தோன்றி
கொள்ளை இன்பம் நல்கும்
கானல் நீரைக் கண்டால்
களிப்பால் உள்ளம் துள்ளும்''[107]

இப்பாடல், கானல்நீர் கண்டு துள்ளும் குழந்தையின் உள்ளத்தைக் காட்டுகிறது.

இவ்வாறு நிலைத்த இயற்கைச் செல்வங்களையும் அவ்வப்போது வரும் மழை, புயல், வானவில், சுனாமி, பனி, கானல்நீர் அனைத்தையும் குழந்தைப் பாடல்களில் கவிஞர்கள் பாடுபொருளாக்கினர். குழந்தைகளுக்கு அவற்றின் தன்மைகளைத் தெரிவிப்பனவாகவும் அழகினை வியப்பனவாகவும் பாடல்கள் அமைந்துள்ளன.

**நீர்:**

'நீரின்றி அமையாது உலகு' என்பது வள்ளுவர் வாய்மொழி. ஆற்றங்கரையிலே அன்றைய வாழ்வு அமையக் காரணம் நீர்தானே. நீரின்றி நிலத்தில் எதுவும் இயங்காது,இயலாது என்பது உறுதி. அத்தகைய நீர் ஆதாரங்களான ஆறு, ஏரி, ஊருணி, அருவி, கடல் போன்றவை பற்றிக் குழந்தைப் பாடல்கள் மிகப்பல வந்துள்ளன.

**ஆறு:**

பண்டைய காலத்தில் மனிதர்கள் குழுக்களாய் வாழத் தொடங்கியதும் நாகரிகங்கள் வளர்ந்ததும் ஆறுகளின் கரைகளிலேதான். ஓடிவரும் நீரே ஆறாம். அந்த ஆறு புனிதமானது, வழிபடு இடமாய்ப் போற்றப்படுவது. 'நல்ல நாட்கள்' என்று போற்றப்படும் நாட்களில் நதிக்கரையில் மக்கள் கூடி வழிபடுவது இந்தியப் பண்பாடு. நாடு செழிக்க ஆறு தேவை.

> ''மலைமேல் இருந்து
> மண்மேல் இறங்கி
> வருகின்றாய் ஆறே!
> ....... ....... ....... .......
> பயிர்கள் வளரத்
> தண்ணீர் கொண்டு
> பாய்ச்சுவாய் ஆறே!
> உயிர்கள் வாழ
> உதவி செய்தே
> ஓடுவாய் ஆறே!''[108]

ஆற்றின் பிறப்பிடத்தைச் சொல்லும் இப்பாடல் உயிர்வாழ, பயிர் செழிக்க ஆறுகள் உதவுகின்றன என்பதையும் சொல்கிறது.

**ஊருணி:**

ஊர் மக்கள் உண்பதற்காக ஊரின் நடுவே தோண்டப்பட்டது தான் ஊருணி (ஊர் + உண் + நீர்). இந்த நீர்நிலை மக்களுக்குப் பொதுவானதாக அமையும்.

ஒப்புரவாளன் செல்வம் ஊருணி நீர்போல் அனைவருக்கும் பயன்படும் என்கிறார் வள்ளுவர். ஊருணி நீர் யாருடைய அனுமதியுமின்றி யார் வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் அமைக்கப் பட்டது. ஊருணியை நகர்புறத்துக் குழந்தைகள் காண்பது அரிது.

''ஊருணி யாம் ஊருணி
உன்னத மாம் ஊருணி
....... ....... ....... .......
மிகப் பெரிய ஊருணி
மீன்கள் வாழும் ஊருணி
எவர் வரினும் குளிக்கவே
ஏற்ற மாகப் படித்துறை
சுவர்கள் எல்லாம் கற்களாம்
சுத்தம் மிக்க ஊருணி.''[109]

'ஊருணி' என்பது உன்னதமானது என்கிறது இப்பாடல். காரணம் பெரும்பாலான ஊருணிகள் கோவில்களுடன் இணைந்து 'குளம்' என்ற பெயரில் வழங்கி வருகின்றன.

**ஏரி:**

ஏரி என்பது சற்றே பெரிய நீர்நிலை. சுற்றுச்சுவர், படிகள் இன்றி பரந்த நிலப்பரப்பில் அமைவது ஏரி.

''ஏரி பெரிய ஏரி இது எங்கள் ஊரு ஏரி.
ஏரி நீரைக் காக்க பெரிய கரைகள் உள்ள ஏரி.

கரையை சுற்றிப் பனைமரங்கள் கவர்ச்சி தரும் ஏரி.

காலமெலாம் நீர்நிரம்பி காட்சி தரும் ஏரி.

....... ....... ....... ....... ....... .......

கால்நடைகள் சென்றுலவி மேய்ந்துவரும் ஏரி.

கணக்கில்லா நன்மைதரும் கருணைமிக்க ஏரி.''[110]

பனைமரங்களால் சூழப்பட்ட எழிலான ஏரி, கால்நடைகளுக்கும் பயன்தருகிறது என்பதை இப்பாடல் காட்டுகிறது.

**அருவி:**

கோடைக்கேற்ற கொண்டாட்டமாய், குழந்தைகள் விரும்பிச் செல்லும் இடம் அருவி. அருவியின் வேகத்தைக் கண்டு அஞ்சும் குழந்தைகூட, ஓர் ஓரமாய் நின்று மெலிதாய் விழும் தண்ணீரில் குளிக்க ஆசைப்படும்.

''சலசல வென்றே அருவி வரும்!

மலைமே லிருந்தே தாவி விழும்!

கலகல வெனவே பாடி வரும்!

குளுகுளு வென்றே உடலில் விழும்!

....... ....... ....... ....... ....... .......

பொங்கிப் பொங்கி ஓடிவரும்!

பளபள வென்றே மின்னிவரும்!''[111]

அருவி பற்றிய இப்பாடல் குழந்தையின் மனதில் மளமளவெனப் பதிந்து விடும். இரட்டைக் கிளவியோடு இன்பம் தரும் இப்பாடலில், அருவியின் தன்மைகள் கூறப்பட்டுள்ளது.

**கடல்:**

உலகின் இரண்டாவது மிகப்பெரிய கடற்கரை தமிழகத்தில் உள்ளது. இருந்தும் தமிழகத்தின் சில பகுதிக் குழந்தைகள் இன்னும் கூட கடலைப் பார்த்ததில்லை.

''கடலை நீயும் பார்த்த துண்டோ

செல்லத் தம்பியே—அதன்

கரையில் நின்று மகிழ்ந்த துண்டோ
செல்லத் தம்பியே!
மணலைக் காலின் அடியில் தண்ணீர்
அரிக்கும் போதிலே—தம்பி
மகிழ்ந்து நீயும் குதித்த துண்டோ
செல்லத் தம்பியே!''[112]

கடல் என்பது காண வேண்டிய ஒன்று. பாடிப் புரிந்து கொள்வதிலும், பார்த்து அனுபவிப்பதே சிறப்பு எனக் குழந்தையைச் சிந்திக்க வைக்கும் பாடலாக உள்ளது.

**அலைகள்:**

கடல் என்றாலே ஓயாது அடிக்கும் அலைகள் நினைவுக்கு வரும். அந்த அலைகளும் அதன் ஆரவாரமும் பாடு பொருளாயின.

''என்றும் இந்த அலைகளுக்கு
ஏனோ ஓய்வு இல்லை?
உருண்டு திரண்டு ஓசையிட்டு
உன்னை நோக்கி வருமே.
....... ....... ....... ....... ....... .......
கடலின் அலையைக் கரையில் நின்று
காணக் காண இன்பம்''[113]

அலைகளுக்கு ஓய்வே இல்லையா? என்று குழந்தைகளுக்கே உரிய வினாவுடன் துவங்கும் பாடல், அலையின் ஓசையையும் அழகையும் சொல்கிறது.

**கூவம்:**

ஆறாக இருந்த கூவம் இன்று சேறாகச் சிறுமைப்பட்டுக் கிடக்கிறது. எனினும் அதுவும் குழந்தைப் பாடலின் பாடு பொருளானது.

''சீர்மிகு சென்னை
தெருக்களில் கிடக்கும்

அழுக்கை உடலில்

அணிந்த வாறு

குறுக்கும் நெடுக்கும்

கூவம் ஆறு

கொண்டு செல்லும்

குப்பை பாரு''[114]

கவிஞர் அழுக்கை உடலில் அணிந்து செல்லும் கூவம் என உருவகப்படுத்திப் பாடியுள்ளார்.

நீர்நிலைகள் பற்றிய பாடல் கிணறு, குட்டை, நீர்த்தொட்டி,நீச்சல் குளம், குழாயடி என நீண்டு கொண்டே செல்கின்றன. சான்றுக்குச் சில கண்டோம்.

**நெருப்பு:**

நெருப்பு என்பது அச்சம் தருவது என்றாலும் நெருப்பின்றி வாழ்வில்லை. நெருப்பு பற்றிய பாடல்கள் குழந்தை இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

''நெருப்பு என்றால் பதைக்கின்றோம்

நினைப்பில் அச்சம் கொள்கின்றோம்!

....... ....... ....... ....... ....... .......

ஆக்கம் தருவது நெருப்பென்றால்

அறிவு அங்கே மிகுந்திருக்கும்

ஏக்கம் தருவது நெருப்பென்றால்

ஏதோ குற்றம் நிகழ்ந்திருக்கும்.''[115]

அச்சம் தரும் நெருப்பு ஆக்கத்திற்கும், அழிவிற்கும் காரணமானது. அத்துடன் ஆக்கத்திற்கு அறிவு காரணம்; அழிவிற்கு குற்றம் புரியும் எண்ணமே காரணம் என்றும் உறுதியாகக் கூறுகிறார் கவிஞர்.

கவிஞர்கள் மேற்கண்ட இயற்கை எழிலில் திளைத்து, அதனைப் பாடலாகத் தந்துள்ளனர். இயற்கைக்கு இயைந்த உவமைகளைத் தந்துள்ளனர். இயற்கையை மக்கள் வாழ்வுடன் பொருத்தி, அதனை ஒரு

கருவியாகக் கொண்டு நல்ல கருத்துக்களையும் நீதிகளையும் புகட்டியுள்ளனர்.

**2.2.2. மனிதர்கள்:**

இயற்கையின் படைப்பில் சிந்தனைத் திறன் மிக்க மனிதன் சிறந்தவனாகக் கருதப்படுகின்றான். மனித உறவுகளையும் மனிதருள் மகத்தான சாதனை படைத்த சான்றோரையும் போற்றுகிறோம். இயற்கைக்கு வடிவம் கொடுத்து, தெய்வமாக வழிபடுகிறோம். மனிதர் மேற்கொள்ளும் தொழில் அடிப்படையில் பிரித்துக் காண்கிறோம். இத்தகைய மனிதர்களையும் தெய்வங்களையும் வளரும் குழந்தைக்கு வழிகாட்டியாக்கப் பாடுபொருளாக்கிப் பாடினர் கவிஞர்கள்.

**மனித உறவுகள்:**

குடும்பம் என்பது சமுதாய அமைப்பு. அதற்கும் மேலாக முகம் பார்க்கத் தொடங்கும் காலம் முதல் குழந்தைக்கு அறிமுகமாகி குழந்தையுடன் விளையாடி, குழந்தை நலனில் அக்கறை கொள்ளும் உறவுகள் நிறைந்தது குடும்பம். அன்றைய நாளில் கூட்டுக் குடும்பமாக வாழ்ந்தனர். பெற்றோருக்குப் பல பிள்ளைகள் இருந்தனர். கால மாற்றத்தால் தனிக்குடும்பமும், பெற்றோருக்கு ஒரே பிள்ளை என்ற நிலையும் உருவானது.

பெற்றோர், பெரியோர், உடன்பிறந்தோர், உறவினர் என்று அனைவரும் குழந்தைப் பாடலில் பாடு பொருளாயினர்.

**கூட்டுக் குடும்பம்:**

''எங்கள் குடும்பம் பெரிது.
எடுத்துச் சொல்வேன் இனிது.
அப்பா உண்டு அம்மா உண்டு
அன்பு மிக்க அண்ணன் உண்டு.
தங்கை உண்டு அக்கா உண்டு.
தங்க மான தம்பி உண்டு.
மாமா உண்டு மாமி உண்டு.
மாமி பெற்ற பெண்ணும் உண்டு.

தடியைத் தூக்கும் தாத்தா உண்டு.

தங்கப் பல்லுப் பாட்டி உண்டு.

இவர்க ளோடு நானும் உண்டு.

எண்ணிப் பார்த்தால் பன்னி ரண்டு.''[116]

கூட்டுக் குடும்பம் பற்றிய இந்தப் பாடலைப் படிக்கும் குழந்தை, 'நம் வீட்டில் பன்னிரண்டு பேரில்லையே. நான்கில் ஒரு பங்காக மூன்று பேர்தானே இருக்கிறோம்?' என்ற வினாவை எழுப்பும்.

**அம்மா, அப்பா:**

'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்று வரிசைப்படுத்தி வணங்குவதும், 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று வாழ்வதும் இந்திய மரபு.

''அன்னை தந்தை தெய்வம்!

அன்பாய் வணக்கம் செய்வோம்!

நம்மை ஈன்ற தெய்வம்

நம்முன் கண்ட தெய்வம்;

நம்மை வளர்த்த தெய்வம்;

நாளும் வணக்கம் செய்வோம்!''[117]

என்ற வாணிதாசனின் பாடல்,வளர்த்து ஆளாக்கிய தாய் தந்தையரே தெய்வம். அவர்களை வழிபடுவது பிள்ளைகளின் கடமை எனச் சொல்கிறது.

**அம்மா:**

''அம்மா என்னை அன்புடனே

அணைத்தே அனைத்தும் தருவாயே.

....... ....... ....... ....... ....... .......

அன்னம் ஊட்டி உடல் வளர்ப்பாய்.

ஆர்வம் ஊட்டி திறம் வளர்ப்பாய்.

அன்பை ஊட்டி மனம் வளர்ப்பாய்.

அன்னை உன்னை மறவேனே.''[118]

**அப்பா:**

''பொங்கும் அன்பால் உழைத்துப்
பொருளைத் தேடி, நாங்கள்
பங்கம் இன்றி வாழப்
படிப்புச் செல்வம் அளிப்பீர்!
எங்கள் நன்மை எண்ணி
எத்துணை இன்னல் ஏற்பீர்!
உங்கள் அன்பைப் போற்றி
உயர்வோம் அப்பா! வணக்கம்!''[119]

**குழந்தை:**

*குடும்ப உறவுகளில் குழந்தை அனைவர்க்கும் மகிழ்ச்சி தரும் ஒன்று. எனவேதான் பாரதியார்,*

''பிள்ளைக் கனியமுதே– கண்ணம்மா
பேசும் பொற் சித்திரமே!
....... ....... ....... ....... ....... .......
சொல்லு மழலையிலே–கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்திடுவாய்!
முல்லைச் சிரிப்பாலே–எனது
மூர்க்கந் தவிர்த்திடுவாய்.''[120]

*என்று பேசும் பொற்சித்திரமான குழந்தை, துன்பங்கள் தீர்க்கும் மாமருந்து என்கிறார்.*

''சிறுவிழி குறுநகைச் சுவைதரும் மழலையின்
சொல்லே இசைதரும் வீணையே–எழில்
சிலைநிகர் வடிவே தேனலைக் கடலே
என்ன என்ன இன்பந்தரும் வண்ண மலரமுதே!''[121]

*என்ற கண்ணதாசனின் பாடல் குழந்தையின் மழலை வீணையாய், வடிவம் சிலையாய், வண்ணம் மலரமுதாய் இருப்பதனைச் சுட்டுகிறது.*

“பிஞ்சு நிலவே! பெருநாள் திருவிளக்கே!
....... ....... ....... ....... ....... .......
ஐயிரண்டு திங்கள் அமைந்து வளர்ந்தெழுந்த
மெய்யழகுக் கன்றே விருப்பூறும் என்மகவே!
தேனார்ந்த உந்தன் சிறுமழலைப் பாட்டுக்கு
வானார்ந்த எங்கள் வளர்தமிழும் ஈடாமோ?”[122]

*என்ற பாடல் சாலை இளந்திரையன் இயற்றியது.*

**தம்பி, தங்கை:**

*வளர்ந்த குழந்தைகளில், ஆண்குழந்தையைத் தம்பி என்றும் பெண் குழந்தையைத் தங்கை என்றும் அழைத்துப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன.*

“எங்கள் தம்பி நல்லவன்.
எதையும் செய்யும் வல்லவன்.
காலை எழுந்து படிப்பான்
கடவுளை எண்ணித் துதிப்பான்
வேலை எல்லாம் முடிப்பான்
வெற்றிப் பாதை நடப்பான்.”[123]

*என்று தம்பி பற்றிப் பாடப்பட்டுள்ளது.*

“முன்னம் பிறந்தான் உன்னுடன் வளர்ந்தான்
உன்னை விட்டே என்றும் பிரியான்.
அண்ணன் அவன்தான் அண்ணன்!
அருமைத் தம்பி என்றே அழைப்பதில்
பெருமை கொள்வேன் என்பான் அண்ணன்.”[124]

*இப்பாடல் அண்ணனின் அன்பைச் சொல்கிறது.*

“தைதை என்றே ஆடு கின்றாள்
தங்கை மீனா ஜோராய்—என்
தங்கை மீனா ஜோராய்—அவள்

கையைக் காலை ஆட்டுகின்ற

காட்சி தன்னைப் பாராய்''.[125]

என்ற தங்கை பற்றிய பாடல், பெண் குழந்தைகள் ஆடிப்பாடுவதில் வல்லவர்கள்; கண்ணனாக, நடராசராக, குறத்தியாக ஆடிப்பாடி மகிழ்விப்பதாகக் காட்டுகிறார் கவிஞர்.

''அக்கா வந்து அப்பம் கேட்டாள்

அம்மா விடத்திலே!

அழுது அழுது அக்கா கேட்டும்

அம்மா கொடுக்க லே—எங்க

அப்பா வந்து எனக்குத் தந்தார்

அம்மா தடுக்க லே!

அக்கா அழ எனக்கும் கூட

அப்பம் கிடைத்த தே!—இந்த

அவனிக் குள்ளே இப்படியே

அனைத்தும் கிடைக்கு மோ!''[126]

அக்காவின் முயற்சியால் தங்கை பயனடைந்ததைக் காட்டுகிறது இப்பாடல்.

**தாத்தா, பாட்டி:**

தாத்தாவும் பாட்டியும் குழந்தைகளின் மதிப்பிற்கும் பாசத்திற்கும் உரியவர்கள். தாத்தா, பாட்டியின் செல்லக் குழந்தைகளாய் இருப்பதில், குழந்தைகளுக்குப் பேரின்பம். பாட்டியின் மருத்துவமும் கதை சொல்லும் பாங்கும் குழந்தைகளைக் கவர்கின்றன. தாத்தாவோ, விளையாட்டுத் தோழனாகவும் விடுகதை நாயகனாகவும் நல்லாசானாகவும் குழந்தைகளுக்குக் காட்சி தருகிறார்.

''பாட்டி கதைகள் சொல்லிடுவாள்;

பற்கள் இன்றிச் சிரித்திடுவாள்;

வேட்டிக் காரத் தாத்தாவோ,

விடுகதை சொல்லி மகிழ்ந்திடுவார்''.[127]

**மாமா:**

சமுதாய நடைமுறையில், சிறப்பான உறவாகவும் சீர் செய்யும் உறவாகவும் விளங்கும் மாமா குழந்தைப்பாடல்களிலும் இடம் பிடித்துள்ளார்.

''பட்டணத்தைப் பார்க்கப் போகும்
சின்ன மாமா—இந்தப்
பையனை நீ மறந்திடாதே
சின்ன மாமா
....... ....... ....... ....... .......
எனக்கு ஒருசைக்கிள் வண்டி
சின்ன மாமா
இல்லை என்றால் விடவேமாட்டேன்
சின்ன மாமா''[128]

என்று குழந்தைகள் உரிமையோடு கேட்கும் உறவாக மாமா அமைந்துள்ளார் என்பதைக் காட்டுகிறது.

**சான்றோர்:**

குடும்ப உறவுகளைப் பாடி மகிழ்ந்த குழந்தை,இலக்கியம் படைத்த சான்றோர்களைத் தெரிந்து கொள்வது அவசியம். எனவே உலகப்பொதுமறை தந்த வள்ளுவர் தொடங்கி, இன்றைய கவிஞர்கள் வரை பலரைப் பற்றிய பாடல்கள் குழந்தைப் பாடல்களாக உள்ளன.

''யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவன்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை.''[129]

என்று பாரதி புலவர்களைப் போற்றியது போல் குழந்தைப் பாடல்களிலும் கவிஞர்கள் போற்றப்பட்டனர்.

''வையம் போற்றும் மொழிதனிலே
வள்ளுவர் தந்த திருக்குறளாம்.

....... ....... ....... ....... ....... .......

நல்ல இராம கதையொன்றை

நமக்குக் கம்பர் தந்தாரே.

நல்ல ஆத்திச் சூடியொன்றை

நமக்கு அவ்வை தந்தாளே!''[130]

என்ற பாடல் புலவர்களையும், அவர்கள் படைத்த இலக்கியங்களையும் குழந்தைகட்குச் சொல்கின்றன.

''செங்குட்டுவனின் தம்பியவர்

சிலப்பதிகாரம் செய்தவரே

இங்கிதமாக அறம் மூன்றை

இனிய தமிழில் படைத்தவரே.''[131]

என்று இளங்கோவடிகளையும் அவர் தந்த இலக்கியத்தையும் குழந்தைகட்குச் சொல்கிறார் கவிஞர்.

'பா' ரதத்தைச் செலுத்திய பாரதியாரைக் குழந்தைகள் அறிய வேண்டும்.

''சுதந்திரச் சங்கை ஊதியவர்

சுப்பிர மணிய பாரதியாம்!

சுதந்திர தாகம் கொண்டவராம்!

சுந்தரத் தமிழில் வல்லவராம்!

....... ....... ....... ....... ....... .......

எட்டைய புரத்தில் பிறந்தவராம்

இளமை முதலே எழுதியவராம்!

கட்டு மீசை உள்ளவராம்

கவிதை மன்னர் பாரதியாம்!''[132]

இன்றைய குழந்தைப் பாடல்களுக்கு வித்திட்டவர் கவிமணி.

''சின்னக் குழந்தை அறிந்துணர

சிறந்த நீதிக் கருத்துக்களை

சின்னச் சின்னப் பாட்டாக

சிறக்க அமைத்தார் கவிமணியே.

....... ....... ....... ....... ....... .......

'மலரும் மாலை' எனும்நூலை

மாண்பாய் ஆக்கித் தந்தவராம்.

மாசில் லாத கவிமணியை

மனத்தால் நினைத்து மகிழ்வோமே!''[133]

'தமிழ்த் தாத்தா' என்று போற்றப்பட்ட உ.வே.சாமிநாத அய்யரைத் தமிழ்க் குழந்தைகள் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும்.

''செந்தமிழ்த் தாத்தா சாமி நாதர்

சிறப்புத் தெரியுமா? – அவர்

முந்து தமிழைத் தேடி எடுத்த

முயற்சி தெரியுமா?

எங்கும் வருந்தி யலைந்து பழைய

ஏடுகள் சுமந்தே – அவர்

சங்க கால நூல்கள் பதித்துத்

தந்தவர் மகிழ்ந்தே!''[134]

'தமிழ்த் தென்றல்' என்று போற்றபட்ட திரு.வி.கல்யாண சுந்தரனாரையும் குழந்தைகள் தெரிந்து கொள்ளவேண்டும்.

''தமிழ ரெல்லாம் போற்று கின்ற

தாத்தா எங்கள் தாத்தா.

....... ....... ....... ....... ....... .......

அமிழ்தே எனினும் அயலார் மொழியை

அடுத்துக் கற்றிடு; முதலில்

அறிந்திடு தமிழை என்றே சொன்ன

தாத்தா எங்கள் தாத்தா.''[135]

'தனித்தமிழ் இயக்கத் தந்தை' என்று போற்றப்படுபவர் மறைமலை அடிகள். அவரைப் பற்றியும் குழந்தைகள் அறியப் பாடல் உள்ளது.

''மறைமலை அடிகளை மறவாயே.

மனதில் உயர்வாய் நினைப்பாயே!

நிறையும் தமிழைக் காத்திடவே

நித்தம் உழைத்த பெரியவராம்.

....... ....... ....... ....... ....... .......

தனிமைத் தமிழைப் பேணுங்கள்.

தக்க வின்பம் காணுங்கள்.''[136]

**குழந்தைகளுக்காகப் பாடல் எழுதியோர்:**

*சொ.அடைக்கலம் என்ற கவிஞர் குழந்தைகளுக்காகப் பாடல்கள் எழுதியோரைக் குழந்தைகள் அறிய வேண்டுமென,*

''உங்களுக்குப் பாட்டெழுதி உயர்ந்தவர்கள் சொல்லவா?
உணர்ந்தவரை நினைவுகூர்ந்து மதிப்பளிப்பீர்கள் அல்லவா?
சங்கத்தமிழ் காலத்திலே வாழ்ந்திருந்த ஔவையும்
சிங்கத்தமிழ் மன்னன் அதிவீர ராம பாண்டியனும்
'மலரும்மாலை' படைத்தளித்த மாகவிஞன் கவிமணியும்
'மலரும் உள்ளம்' உமக்குத்தந்த அழ.வள்ளியப்பாவும்
பலரும் போற்றும் பாரதியும் பாவேந்தர் பாரதிதாசனும்
மயிலை சிவமுத்துவும் பெரிய சாமித் தூரனோடு
தமிழழகன், பூவண்ணன், லெமனுடனே, திருச்சிபாரதன்
தமிழ்முடி, ஆதவன், செல்ல கணபதி
குழ.கதி ரேசனோடு சொ.அடைக்கலம், அழகனாரும்,
ஆலந்தூர் மோகன ரங்கம் அடுத்தும்பலர் உள்ளாரே.''[137]

*என்று எழுதினார்.*

**தலைவர்கள்:**

*சமுதாயம் சீர்பெற உழைத்த தலைவர்கள் பற்றிக் குழந்தைகள் தெரிந்து கொள்வது அவசியம். எனவே கவிஞர்கள் பலர்,தலைவர்கள் பலரைப் பற்றி பாடினார்கள்.*

*'கப்பலோட்டிய தமிழர்' என்று போற்றப்பட்ட வ.உ.சியைப் பற்றிய பாடல்,*

''கற்பன நன்றே கற்றிட்டு;

கவினுற பட்டம் பெற்றிட்ட

விற்பனர் வ.உ.சிதம் பரனார்;

விடுதலைக் குழைத்த பெருமகனார்!

நாட்டின் விடுதலை தனை எண்ணி

நாளும் முழக்கம் செய்திட்டார்.

செக்கை இழுத்தார் மாடுகள்போல்

சித்திர வதைகள் ஏற்றிட்டார்!''[138]

*இலக்கியப் படைப்பாளியாகவும் மக்கள் தலைவராகவும் தமிழக முதல்வராகவும் விளங்கியவர் பேரறிஞர் அண்ணா.*

''கருணையிலே சிறந்தவரே அறிஞர் அண்ணா

காஞ்சியிலே பிறந்தவரே அறிஞர் அண்ணா

பொறுமையிலே புத்தர்எங்கள் அறிஞர் அண்ணா

புகழ்வாய்ந்த பேச்சாளர் அறிஞர் அண்ணா.

அண்ணன்–தம்பி முறையாலே அறிஞர் அண்ணா

அனைவரோடும் உறவுகொண்டார் அறிஞர் அண்ணா.

கண்ணியமும் கடமையும் கட்டுப்பாடும்

காத்துநின்ற புகழ்முதல்வர் அறிஞர் அண்ணா.''[139]

*இந்தியாவின் கவர்னர் ஜெனரலாகவும், தமிழக முதல்வராகவும் விளங்கிய ராஜாஜி, குழந்தைகளுக்கான குட்டிக் கதைகள் எழுதியவர். அவரைப் பற்றிக் குழந்தைகள் பாடி மகிழ,*

''கல்கத் தாவில் ராஜாஜி

கவர்ன ரானபின்

களிப்பை ஊட்டும் செய்தி யொன்று

வெளியில் வந்ததே.

....... ....... ....... .......

சிறுவர் தம்மை மாளி கைக்கு

அவர் அழைத்தனர்.

தித்திப் பான பண்டத் தோடு

விருந்து வைத்தனர்

விருந்து கவர்னர் அளித்த தாலே
பெருமை கொண்டனர்''[140]

என்ற அழ.வள்ளியப்பாவின் பாடல், ராஜாஜி குழந்தைகளுக்கு இலக்கிய விருந்து படைத்ததுடன், இனிய உணவை விருந்தாக்கியதைத் தெரிவிக்கிறது.

கல்விக் கண் கொடுத்த காமராசரின் பிறந்த நாளை இன்று 'கல்வி வளர்ச்சி நாளாக'க் கொண்டாடுகிறோம். அவரைப் பற்றியும் பலர் பாடல் எழுதியுள்ளனர்.

''அண்ணல் காந்தி அன்பு வழியில் வளர்ந்தவர்
அனுபவமே கல்வியாகப் பயின்றவர்.
கண்கள் அனையக் கல்விச் சாலைகள் திறந்தவர்.
....... ....... ....... ....... ....... .......
மதிய உணவுத் திட்டம் கண்ட நல்லவர்''[141]

'பெரியார்' என எல்லோராலும் அழைக்கப் பெற்ற ஈ.வெ.ராமசாமி, புரட்சிக்காரர்; பலவற்றை மறுத்தும் வெறுத்தும் பேசியவர். ஆனால் மனிதர்களை நேசித்தார்; சிந்தனைகளை வளர்த்தார்; கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்தார்.

''சாதிகளை வெறுத்தார்
சாத்திரத்தை மறுத்தார்
வேதங்களை வெறுத்தார்
பேதங்களை மறுத்தார்
சடங்குகளை வெறுத்தார்
கடவுள்களை மறுத்தார்
மடமைதனை வெறுத்தார்
அடிமைத்தளை அறுத்தார்
சிந்தனையை வளர்த்தார்
தந்தை பெரியாரு.''[142]

தமிழகத்துச் சான்றோர்கள், தலைவர்களைப் பாடியது போல் இந்தியச் சான்றோர்களையும் தலைவர்களையும் பாடி, குழந்தைகளை 'இந்தியர்' என்று பெருமை கொள்ளச் செய்கின்றனர் கவிஞர்கள்.

இராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடராய்,உலகம் போற்றிய துறவியாய் வாழ்ந்த விவேகானந்தரின் பெருமையைக் குழந்தைகள் உணரக் கவிதையாய்த் தந்தனர் கவிஞர்கள்.

> ''இளமை வயதில் துறவு பூண்ட
> விவேகா நந்தர்
> இந்து சமய மேன்மை தன்னைத்
> தெளிவாய் உரைத்தார்.
> ....... ....... ....... ....... ....... .......
> உலகம் வியக்க சிக்கா கோவில்
> முழக்கம் செய்தார்!
> ஒப்பு நோக்கி அனைத்து சமயக்
> கருத்தை மதித்தார்.''[143]

'பூமிதான இயக்கத் தந்தை' வினோபாவின் உயர்ந்த கொள்கையை எளிமையான பாடலில் குழந்தைகளுக்குச் சொன்னார் கவிஞர்.

> ''பூமி தானம் என்ற ஓர்
> புரட்சி இருக்கு நாட்டிலே
> சேமித் திருக்கும் பெருநிலம்
> சேரும் ஏழைக் கிவர்வழி!
> ....... ....... ....... ....... .......
> மனிதர் யாரும் சமமென
> மக்கள் வாழ வாழ்ந்தநம்
> புனிதர் வினோபா வழிதனைப்
> போற்றிச் சேவை ஆற்றுவோம்''.[144]

'தேசத் தந்தை' காந்தியடிகளைப் பற்றிப் பாடாத குழந்தைக் கவிஞர்கள் இல்லை என்று சொல்லும் அளவிற்குப் பலரும் பாடியுள்ளனர். 'பாட்டிலே காந்தி கதை' என்று காந்தியின் வாழ்வைக் கவிதையாகத் தந்துள்ளார் அழ.வள்ளியப்பா.

''காந்தித் தாத்தா போலே—நீ

கண்ட துண்டோமண் மேலே

சாந்தம் தவழும் முகமும்—மிகச்

சாதா ரணமாய் உடையும்

அமைதி உண்மை அன்பும்—இங்கே

அவர்போல் யாருக் குண்டு?

நமையெலாம் அடிமையில் இருந்து மீட்ட

நல்ல தலைவர் அவரே.''[145]

'சாந்தி நிகேதன்' மூலம் அறிவுக்கண் கொடுத்த தாகூர் பற்றிக் குழந்தைகளுக்குத் தெரிவிக்கப் பாடல்கள் உள்ளன.

''தாகூர் என்னும் ஒரு தாத்தா

தாடி வைத்தே இருப்பாராம்

வங்க நாட்டில் பிறந்தவராம்

தங்கக் கதைகள் தந்தவராம்

சிறுவர் கற்றிட விழைந்தாராம்

சாந்தி நிகேதன் அமைத்தாராம்!''[146]

விடுதலை இந்தியாவின் முதல் பிரதமராகக் குழந்தைப் பிரியராக, ரோஜா அணிந்த ராஜாவாக விளங்கிய நேரு மகானைப் பற்றி பெரும்பாலான கவிஞர்கள் பாடியுள்ளனர். 'நேரு தந்த பொம்மை' என்று அழ.வள்ளியப்பாவும், 'நேரு காவியம்' என்று துரை. மாலிறையனும் நேருவின் வாழ்வியலைச் சிறுவர்க்குப் பாடல் வடிவில் தந்துள்ளனர்.

''மோதிலால் பெற்ற வைரம் நேருமாமா

முடிசூடா மன்னரான நேருமாமா

ஆசியாவின் சோதிஎங்கள் நேருமாமா

அறிவுலக மேதை எங்கள் நேருமாமா

....... ....... ....... ....... ....... .......

'குழந்தைகளே தெய்வம்' என்ற நேருமாமா

குழந்தைகளின் தெய்வமான நேருமாமா.''[147]

இந்திய அரசியல் சட்டத்தை வடிவமைத்தவர் டாக்டர் அம்பேத்கார். அவரின் இயற்பெயர் பீமாராவ் ராம்ஜி. தனக்கு உதவிய

ஆசிரியரின் பெயரையே தம் பெயராக்கிக் கொண்டு ஆசிரியருக்குப் பெருமை சேர்த்தார். தாழ்த்தப்பட்ட சமூகம் என்று ஒதுக்கப்பட்ட மக்களை உயர்நிலைக்குக் கொண்டுவரப் பாடுபட்டார்.

''இந்தியச் சட்டம் வகுத்தவராம்
ஏழ்மை போக்க உழைத்தவராம்
....... ....... ....... ....... ....... .......
சமூக விடுதலை கண்டவராம்
சமத்துவம் தழைத்திட வந்தவராம்
அமோக வாழ்வைப் பாமரரும்
அகிலத்தில் கண்டிடச் செய்தவராம்.''[148]

விடுதலைக்குப் போராடிய தலைவர்கள்,இந்தியாவை வடிவமைத்த சிற்பிகள் பற்றி அறிந்த குழந்தைகள் முந்தைய வரலாற்றையும் அறிய வேண்டும். அதற்காக மன்னர்கள் பற்றியும் மன்னராட்சி பற்றியும் சில பாடல்கள் உள்ளன.

**மன்னர்கள்:**

படையில் வீரமும்,கொடையில் சிறப்பும் நிறைந்த மன்னர்கள் வாழ்ந்த நாடு இந்தியா. இந்திய மன்னர்களை இளம் குழந்தைகளுக்கு எளிய பாடல்வழி அறிமுகப்படுத்தினர்.

''சேர சோழ பாண்டியர்கள்
சேர்ந்த மூன்று மன்னர்கள்
வீரம் செறிந்த வரலாற்றின்
விளக்கம் பெற்ற தமிழ்நாடு
வில்லும் புலியும் மீனென்று
விண்ணில் பறந்த கொடியெல்லாம்
வெல்லும் தமிழ்த்தாய் பெற்றெடுத்த
வேந்தர் மூவர் கொடியாகும்.''[149]

சக்கரவர்த்தியாய், பேரரசராய்ப் புகழ்பெற்ற அசோகன் போரின் விளைவுகளைக் கண்டு மனம்மாறிய நிகழ்ச்சியைக் குழந்தைகள் மனதில் கவிதை வழி பதியச் செய்துள்ளனர்.

''சந்திர குப்தன் மகன்–பிம்பி
சாரன் புகழ் சிறந்தான்
வந்தனன் அவன் மகனாம்–அசோகன்
வளர்பிறைச் சந்திரன் போல்
....... ....... ....... ....... ....... .......
கலிங்கத்தை வென்றதுவும்–போர்க்
களத்தினைப் பார்த் தயர்ந்தான்.
எத்தனைப் பேரைக் கொன்றேன்–அந்தோ
ஏதுக்கிவ் வெறி யெனவே
கத்தியை விட்டெறிந்து–புத்தர்
கருணையைச் சரண் புகுந்தான்''.[150]

சுத்தானந்த பாரதியின் இப்பாடல் அசோகனின் மனமாற்றத்தையும் வாழ்வின் திருப்பு முனையையும் கூறுகிறது.

மராட்டிய வீரர் சத்ரபதி வீரசிவாஜியின் வெற்றிச் சிறப்புக்களைக் குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டும். அன்னை ஜீஜீபாய் கூறிய கதையால், வீர உணர்வு பெற்ற சிவாஜி போல் குழந்தைகளும் நல்ல கருத்துக்களால் உருவாக்கப்பட வேண்டும். எனவே சிவாஜி பற்றி குழந்தைப் பாடல் இயற்றினர்.

''சிறுவனான சிவாஜி
அரசனானது எப்போது?
சிறுமை கொண்ட மொகலாயரின்
செருக் கடக்கிய அப்போது!
குமர னான சிவாஜி
கோட்டையைப் பிடித்த தெப்போது?
குவலயமே வாழ்த்தப் பெருங்
குருவைப் பெற்ற அப்போது''[151]

**அயல்நாட்டு ஆன்றோர்கள்:**

இந்தியர்களின் ஏற்றமிகு வாழ்வை அறிந்த குழந்தைகள் அயல்நாட்டு ஆன்றோர்களைப் பற்றியும் அறிய பல பாடல்களை எழுதினர். சான்றுக்குச் சில.

''கள்ள மற்ற குழந்தைகள்

கல்வி கற்கப் பள்ளிக்குத்

துள்ளி ஓடி வந்திடத்

தூய வழியைத் தந்தவர்

கடின மான கணக்குமே

கரும்பு போல இனித்திடப்

படிக்கும் முறையைக் காட்டினார்.

பழைய முறையைப் பூட்டினார்.''[152]

இப்பாடல் மாண்டிசோரி அம்மையாரின் கல்வி முறையைக் கூறுகிறது. இன்று விளையாட்டு மூலம் கற்றல், செயல்வழிக் கற்றல் என்ற முறைகள் மீண்டும் கல்வியாளர்களால் பின்பற்றப்படுகிறது. இதற்கான அடித்தளம் அமைத்தவர் மாண்டிசோரி அம்மையார் என்பதைக் குழந்தைகள் உணர வேண்டும்.

தத்துவ மேதை பெர்னாட்ஷா பற்றி குழந்தைகள் முழுவதுமாக உணர இதோ ஒரு பாடல்.

''இலக்கிய மேதை பெர்னாட்ஷா

என்றே உலகம் புகழ்ந்திடுமாம்

தலைக்கன மாகப் பேசிடினும்

தர்ம சிந்தை உள்ளவராம்

நகைச்சுவை யாகப் பேசுவதில்

நல்ல திறமை யுடையவராம்.''[153]

அமெரிக்காவில் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்து, நூல்களைக் கற்று அறிவினை விரிவு செய்தவர் ஆப்ரகாம் லிங்கன். அவர் தோல்விகளையே வெற்றிக்கான படிக்கட்டாக்கியவர்.

''அமெரிக் காவின் சிங்கமாம்

ஆப்ரகாம் லிங்கனார்

இமயம் போல வாழ்ந்தவர்

இனவெறியைச் சாய்த்தவர்''.[154]

உலகில் உயர்ந்த இமயமலையின் சிகரத்தைத் தொட்ட ஹில்லாரியும் டென்சிங்கும் போற்றுதலுக்குரிய சாதனையாளர்கள் என்பதால் அவர்களும் குழந்தைப் பாடலின் பாடுபொருளாயினர்.

> ''இமயமலை பெரியமலை;
> இதனுயரம் உலகிலில்லை;
> ....... ....... ....... ....... .......
> அதன் சிகரம் எவரஸ்டாம்;
> அதை எவரும் கண்டதில்லை;
> ....... ....... ....... ....... .......
> பத்துமுறை முயன்றார்கள்;
> பதினொன்றில் வென்றார்கள்;
> ....... ....... ....... ....... .......
> ஹில்லாரி என்பவரும்
> இணையான டென்சிங்கும்
> சொல்லரிய துன்பமுற்றும்
> சூடினரே பெரும்புகழும்.''[155]

அல்பேனியா நாட்டில் பிறந்தவர் தெரசா. தாய்நாட்டை விட்டு இந்திய நாட்டிற்குத் தாயாய் வந்து சேவை புரிந்தவர்.

> ''ஏழை நாடு பாரதம்!
> 'என்றன் இதயம்' என்றவர்!
> ....... ....... ....... ....... .......
> நோயில் வீழ்ந்த மக்களை
> நொந்து போன மனிதரை
> தாயின் அன்பு கொண்டுமே
> தாங்கிக் கொண்ட தாயவர்!
> நன்றி யோடு ஞாலமே
> நாளும் போற்றும் தெரசா.''[156]

திருவள்ளுவர் தொடங்கி பெர்னாட்ஷா வரை இருபத்தெட்டுச் சான்றோர்கள் பற்றி நாரா.நாச்சியப்பன் 'சான்றோர்' என்ற நூலில் பாடல்கள் பாடியுள்ளார்.

சான்றோர்கள், ஆன்றோர்கள், மன்னர்கள், தலைவர்கள் போன்றோரின் வரலாற்றைக் கவிதையாய்ப் படிக்கும் குழந்தைகள் பாடி மகிழ்வதுடன்,அவர்களைப் பற்றி மேலும் பல தகவல்களை அறிய ஆவல் கொள்வார்கள். பெரியோர்களின் வாழ்வியல் நிகழ்ச்சிகள் சில குழந்தைகளின் வாழ்வில் திருப்புமுனையாக அமையவும் வாய்ப்புண்டு.

**2.2.3. தெய்வம்:**

நம்நாட்டில் குழந்தைகளைத் தெய்வபக்தியுடன் வளர்க்கிறோம். காலை, மாலை வேளைகளில் கடவுளைத் தொழும் பழக்கத்தையும் கற்றுக்கொடுக்கிறோம். சிறு குழந்தைகள் தங்களுக்குத் தெரிந்த எளிய சொற்களால் பாடித் தெய்வங்களை வழிபட ஏற்ற பாடல்கள் உள்ளன.

**யானை முகன்:**

''யானை முகத்தை உடையவனே
யாரிலும் நீமிக வல்லவனே
பானை வயிற்றை உடையவனே
பரமேஸ் வரனின் முதல்மகனே!''[157]

**முருகன்:**

''வண்ணமயில் மீதிருப்பான்
எங்கள் பாலமுருகன்–கையில்
வடிவேலும் வைத்திருப்பான்
எங்கள் பாலமுருகன்
....... ....... ....... ....... ....... .......
கள்ளமில்லா உள்ளம் கொண்டால்
எங்கள் பாலமுருகன்–நம்மைக்
காத்தருள்வான் காத்தருள்வான்
எங்கள் பாலமுருகன்.''[158]

**கண்ணன்:**

''நீல நிறத்து மேனியனே
நெஞ்சில் உறையும் நேரியனே

ஆலம் இலையில் துயில்பவனே

அழகுக் கண்ணா வாவாவா!

அடைமழை பொழிந்த வேளையிலே

குடையென மலையைப் பிடித்தவனே

படையும் நடுங்கும் பாம்பினது

படத்தை மிதித்தாய் வாவாவா!''[159]

**அய்யப்பன்:**

''அய்யன் அப்பன்

அவன்புகழ் போற்றுவோம்

உய்யும் வழிக்காய்

உணர்ந்தே போற்றுவோம்.

....... ....... ....... ....... ....... .......

வையம் வாழ

வளமாய்ப் போற்றுவோம்.

....... ....... ....... ....... ....... .......

சலியாதுனக்கே துணைநின்று

ஜகத்தில் வாழ உதவிடுவான்''[160]

**பராசக்தி:**

''மகிஷா சுரனை எதிர்த்திடுவாள்

மாதா அன்னை பராசக்தி

மகிமை போற்றித் துதித்திடுவாய்

மேன்மை வாழ்வு பெற்றிடுவோம்.''[161]

**சரஸ்வதி:**

''சரஸ்வதித் தாயே

சகலகலா வல்லி

....... ....... ....... .......

வெள்ளைமலர் மேலே

வீற்றிருக்கும் தாயே

....... ....... ....... .......

கல்விதரும் தாயே
கண்ணிரண்டு போலே
நல்லறிவு தேறி
நாமுயர வைப்பாய்''.[162]

**புத்தர்:**

''ஆசைதான் துன்பத் திற்கே
ஆணிவேர்! அதனால் அந்த
ஆசையை ஒழித்துப் பாரில்
அகமகிழ இன்பம் நல்கும்
தேசுறு ஞானம் தந்த
செகம் புகழ் ஆசியஜோதி
மாசறு புத்த தேவன்
மலரடி சரணம் செய்வாம்.''[163]

**ஏசு:**

''உலகெனும் வீட்டினில் ஒளிவிடும் ஜோதியாம்
ஏசு எழுந்து வந்தார்—எங்கும்
உலவிடும் தென்றலாய் நிலவிடும் அமைதியாய்
மாசு களைந்து வந்தார்.''[164]

**அல்லா:**

''அன்பு மிகுந்த ஆண்டவனே
அல்லாஹ் உனைநான் வேண்டுவனே!
நானோ மிகவும் சிறியவனே!
நாயகன் நீதான் பெரியவனே!''[165]

**நபிகள் நாயகம்:**

''அமைதி என்றே கைகாட்டி
அன்பை அருளை அதில்கூட்டி
சமைத்தார் சிறந்த இஸ்லாமே!
சத்திய நபிஇறை தூதருமே!

உண்மை வேதம் நிலைத்திடவே
உரைத்தார் ‘குர்ஆன்’ தழைத்திடவே!’’[166]

*மதங்கள் மாறுபடலாம். தெய்வங்களின் பெயர்கள் வேறுபடலாம். ஆனால் இறைநம்பிக்கை என்பது குழந்தைகளுக்கு அவசியம்.*

‘‘உண்மை வடிவே தெய்வம்—அது
உறையும் உள்ளம் கோயில்
அன்பே அழகு தீபம்—அங்கு
அறிவே அறியும் சுடராம்.’’[167]

**2.2.4. தொழில் அடிப்படையில் மனிதர்கள்:**

*நமக்குச் சேவை செய்யும் வகையில் பலமனிதர்கள் பலவிதத் தொழில்களை மேற்கொண்டுள்ளனர். அவர்களைப் பற்றிக் குழந்தைகள் தெரிந்து கொள்வது அவசியம்.*

**ஆசிரியர்:**

‘‘கல்விச் செல்வம் தருவார்
கற்கும் வழிகள் சொல்வார்
சொல்லில் உயர்வு செய்வார்
சுவையாய் மொழியைத் தருவார்!
......... .......... ......... ............
அறிவின் சுடரை வளர்ப்பார்
ஆனந்தப் பாதை அமைப்பார்
நெறியில் நடக்க வைப்பார்
நிதமும் ஆசான் நமையே!’’[168]

**இராணுவவீரர்:**

‘‘அடர்ந்த பனியிலும்—மிக
உயர்ந்த மலையிலும்
நிற்பார்—காவல்
ஏற்பார்.
கலவர இடத்திலும்—கொடும்

புயலின் இழப்பிலும்

காப்பார்—அமைதி

காப்பார்.''[169]

**மருத்துவர்:**

''மருத்துவர் வருகிறார்—நல்ல

மருத்துவர் வருகிறார்.

....... ....... ....... ....... .......

நாடித் துடிப்பை அறிந்து

நல்ல மருந்து தருவார்

வாடிப் போன உடலை

வளப்படுத்த வருவார்.''[170]

**தபால்காரர்:**

''தபால் காரர் வருகிறார்.

தகவல் எல்லாம் தருகிறார்

கார்டு கவர்கள் எடுத்துக்கொண்டு

கையில் பையைச் சுமந்துகொண்டு

கதவை கதவைத் தட்டிக்கொண்டு

கடிதங் களைக் கொடுத்துக்கொண்டே

தபால் காரர் வருகிறார்

தகவல் எல்லாம் தருகிறார்.''[171]

**உழவர்:**

''உழவே தொழிலில் உயர்வு

உழுவோன் பணியே மேன்மை

....... ....... ....... ....... ....... .......

பயிர்த் தொழில் புரியும் உழவன்

பாரில் உயர்ந்த நல்லோன்''.[172]

**குயவர்:**

''உழைத்தால் நன்மை உருவாகும்
உண்மை என்றே களிமண்ணைக்
குழைத்து நன்றாய்த் திகிரியிலே
கொண்டு வைத்தான் ஒருகுயவன்
சுற்றும் திகிரி அதன்மேலே
சுழலும் மண்ணைக் கையாலே
ஏற்று எடுத்தே ஒரு பானை
உருவம் செய்தான் அக்குவயன்.''[173]

மேற்கண்டவர்களின் பணி சமுதாய நலனுக்கானது என்பதைக் குழந்தைகள் புரிந்து கொள்ள இத்தகைய பாடல்கள் உதவுகின்றன. மேலும் குழந்தைகளின் மகிழ்ச்சிக்காகப் பணிபுரிவோர் பற்றிய பாடல்களும் உள்ளன.

**மிட்டாய்க்காரன்:**

''கண கணவென மணியடிக்கும்
சத்தம் அதோ கேட்குதம்மா
கட்டிப் பாலில் செய்த அந்த
மிட்டாய் போலத் தோன்றுதம்மா.
பாம்பு மிட்டாய் பாதாம்மிட்டாய்
என்று அதோ கூவுகிறான்.
....... ....... ....... ....... .......
பத்துப் பைசா தந்தீரானால்
நானும் வாங்கித் தின்பேனம்மா!''[174]

ஏழ்மையில் வாடி, பிழைக்க வழியின்றி பிச்சையெடுப்போரும் பிள்ளைப் பாடல்களின் பாடுபொருளாயினர்.

**பிச்சைக்காரன்:**

''வானம் என்னும் கூரைக்கீழ்
வாழும் பிச்சைக் காரன்நான்

தானம் பண்ணும் தாராளர்

தயவை எண்ணி வாழுகிறேன்.''[175]

## 2.2.5. விழாக்கள்:

*விழாக்களைக் குழந்தைகள் விரும்பி வரவேற்பார்கள். விழா நாட்களை ஆவலுடன் எதிர்பார்ப்பதும், அந்த நாள் வந்ததும் அளவிலா மகிழ்ச்சியுடன் கொண்டாடி மகிழ்வதும் குழந்தைகளின் இயல்பு.*

*விழாக்கள் இருவகைப்படும். தெய்வம் சார்ந்த விழாக்கள், தேசிய விழாக்கள்.*

**தெய்வம் சார்ந்த விழாக்கள்:**

*புராணங்களின் அடிப்படையிலும், முன்னோரைப் பின்பற்றி வழிவழியாகவும் பல விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.*

**தீபாவளி:**

*நரகாசுரன் மறைந்த நாளைத் தீபாவளியாகக் கொண்டாடுகிறோம். புத்தாடை, பலகாரம், வெடி எனப் பலவகையிலும் மகிழ்ச்சிதரும் தீபாவளி குழந்தைகளின் உளம் கவர்ந்த விழா.*

''தோசை வடையே சுட்டிடும் வாசனை

ஆசைப் பட்டாடை அணிந்து மகிழ்ந்து

எண்ணெய் தேய்த்துத் திருவிளக் கெரித்து

எல்லோரும் மகிழும் இன்பத் திருநாள் தீபாவளியே.''[176]

**பொங்கல்:**

*தீபாவளிக்கு அடுத்தபடி பொங்கல் திருநாள் குழந்தைகளுக்குப் பிடித்தமான நாள். கரும்பைப் போல் இனிக்கும் திருநாள். இயற்கையை வழிபட்ட மக்கள் சூரியனை வணங்கி வழிபடும் விழா பொங்கல்.*

''பரிதி தந்த பொங்கல்

பால் கலந்த பொங்கல்

கரும்பு வைத்துப் படைக்கும்

கனிவு மிக்க பொங்கல்

அமிழ்தம் இந்தப் பொங்கல்

ஆடிப் பாடித் தின்போம்!''[177]

**நவராத்திரி:**

*ஒன்பது நாள் விழாவாக வருவது நவராத்திரி. சிறுவர்க்கு மிகுந்த மகிழ்ச்சி தருவது. கோவிலிலும் வீடுகளிலும் கொலு வைப்பர்.*

''ஒன்பது இரவும் திருவிழா

உள்ளம் மகிழும் திருவிழா

....... ....... ....... ....... .......

வல்லமை கொடுக்கும் காளியை

வாழ்த்தி வணங்கும் திருவிழா.

கல்வியை ஊட்டும் வாணியைக்

கருதிப் பணியும் திருவிழா.

விரிந்த தாமரைப் பூவிலே

மேவிய திருமகள் தன்னையும்

பரிந்து போற்றும் திருவிழா''.[178]

**கிறிஸ்துமஸ்:**

*ஏசுவின் பிறந்த நாள் கிறிஸ்துமஸ் திருநாளாகக் கொண்டாடப் படுகின்றது.*

''குழந்தையேசு பிறந்தநாள்

கொண்டாட வாருங்கள்

உலகினிலே சமாதானம்

உருவாகும் அற்புதநாள்

கோயிலிலே மணியோசை

தூரத்தில் ஒலிக்கிறதே

கோமகனாம் ஏசுவைநாம்

கையெடுத்துக் கும்பிடுவோம்.''[179]

**மிலாடிநபி:**

அல்லாவின் தூதராய் வந்துதித்த நபிகளின் பிறந்த நாளை மிலாடிநபியாய்க் கொண்டாடுகிறோம்.

''மக்கம் பிறந்த நபி நாதா –இந்த
மாநிலமே புகழும் வேதா–மக்கம்
....... ....... ....... ....... ....... .......
அல்லாஹுவே தெய்வம் அவனே சரணமென்று
எல்லோரும் துதிக்கச் செய்த –இந்த
ஞாலமே போற்றும் நபி நாதா.''[180]

**கோவில் திருவிழாக்கள்:**

கோவிலில் குடியிருக்கும் தெய்வங்களுக்கு, ஆண்டிற்கொருமுறை 10 நாட்கள் தொடர்ந்து திருவிழாக்கள் நடைபெறுவதுண்டு. அவ்விழாவும் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளாயின.

''கோயிலிலே திருவிழா
கும்பிடலாம் ஈசனை
ஆயிரங்கால் பந்தலாம்
அதிர்வெடிகள் இசைகளாம்
ஆனைகுதிரை தேரின்மீதும்
அமர்ந்து வருவார் ஈசனார்!''[181]

**தேசிய விழாக்கள்:**

விடுதலைநாள், குடியரசுநாள், ஆசிரியர்தினம், குழந்தைகள் தினம், தொழிலாளர் தினம் எனப்பல விழாக்கள் தேசிய விழாக்களாகக் கொண்டாடப்படுகின்றன. அவையும் குழந்தைப் பாடல்களின் பாடு பொருளாகி குழந்தைக்கு இன்பமூட்டுவன. சான்றுக்குச் சில பாடல்கள்.

**விடுதலைநாள்:**

''சொந்த மான நமது கொடியை
ஏற்றிடு வோமே–அதைச்

சுற்றி நின்று கூட்ட மாகப்

போற்றிடு வோமே.

இந்த நாளே அடிமை வாழ்வு

தொலைந்த தென்றுநாம்—ஒற்றுமை

எங்கும் முரசு முழங்கக் கொடியை

ஏற்றிடு வோமே.''[182]

**குடியரசுநாள்:**

''நம்மைநாமே ஆள்கின்ற நல்லரசை எய்தோம்—அதை

நாட்டுகின்ற உரிமையினை இந்நாளில் செய்தோம்

....... ....... ....... ....... ....... .......

விளங்குகின்ற வாய்ப்புதனைப் பேணிடுவோம் இன்று—பெருமை

விளைகின்ற குடியரசுப் பொன்னாளில் நன்று!''[183]

**தொழிலாளர் திருநாள்:**

''மே முதல்நாள் வந்தது

வெற்றி முழக்கம் தந்தது.

தூ மழைபோல் வாழ்வளிக்கும்

தொழிலாளர்கள் விழிப்படைந்திட

மே முதல் நாள் வந்தது''[184]

இத்தகைய விழாக்களைப் பற்றிய கவிதைகளைப் படிக்கும் குழந்தைகள் முன்வரலாறுகளை அறிய ஆவல் கொள்வர்.

**2.2.6. ஒழுக்கம்:**

இலக்கியத்தின் பயன் இருவகைப்படும்.

1. இன்பம் பயப்பது 2. நல்வழிப்படுத்துவது.

'' 'விளையும் பயிர் முளையிலே தெரியும்', 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்னும் பழமொழிகள் ஓர் உண்மையை விளக்குகின்றன. சமுதாயம் திருந்த வேண்டுமானால் குழந்தைப் பருவத்திலிருந்து நல்ல மனப்பான்மை ஏற்படவேண்டும் என்ற உண்மையை விளக்குகின்றன''[185] என்கிறார் மு.வ.

சிறந்த சமுதாயத்திற்கான கூறுகளில் ஒன்று ஒழுக்கம். நாற்றங்கால்களான குழந்தைகள் நன்கு வளர்க்கப்பட்டால் எதிர்கால சமுதாயம் சிறப்பானதாக உருவாகும். குழந்தைகளின் உள்ளம் ஈரக்களி மண்ணுக்குச் சமமானது. ஒழுக்க நெறிகளின் துணையுடன் அதற்குச் சரியான வடிவம் கொடுக்க வேண்டும். இளம் வயதில் கடைபிடிக்கப்படுவது இறுதி வரை நிலைத்திருக்கும். எனவே குழந்தைப் பருவத்தில் விதைக்கப்படும் ஒழுக்கம் சீரான வாழ்விற்கு வழிவகுக்கும் என்பதில் மாற்றுக் கருத்தில்லை.

ஒழுக்க நெறிகளை இலக்கியத்தின் வழி இரு வகையாகக் கூறலாம். 1. வெளிப்படையாகக் கூறுதல் 2. குறிப்பாகப் புலப்படுத்தல்.

குழந்தைப் பாடல்களில் ஒழுக்கம் வலியுறுத்தப்படுமானால் அது குழந்தைகளுக்குச் சுமையானதாகவும் சுவையற்றதாகவும் அமைந்து விடும். எனவே குழந்தை இலக்கியத்தில் ஒழுக்க நெறிகளை இன்பமாக மகிழ்ச்சியுடன் குழந்தைகள் பாடும் வகையில் அமைக்க வேண்டும். அதன்வழி குழந்தைகளுக்கு, ஒழுக்கநெறி மனப்பதிவாகிப் பின்பற்ற ஏதுவாகும்.

ஒழுக்க நெறியைப் பாடுபொருளாகக் கொள்ளும் கவிஞர்கள் இருவகையில் குழந்தைப் பாக்களைத் தருகின்றனர். 1. ஒழுக்கத்தைப் பற்றி நேரடியாகப் பாடுதல் 2. பல பொருள்களைப் பாடுகையில் ஒழுக்கம் பற்றிய குறிப்புக்களைத் தருதல்.

**ஒழுக்கம் பற்றி நேரடியாகப் பாடுதல்:**

''பொய்யைப் பேசல் கூடாது.
பொல்லாச் செயல்கள் கூடாது.
வைதல் என்றும் கூடாது.
வாய்மை தவறக் கூடாது.
தீய நடத்தை கூடாது.
திருடு வதுமே கூடாது''.[186]

**வேறு பொருள் பற்றிய பாடலில் ஒழுக்கத்தைக் கூறல்:**

பனை மரத்தின் பல்வேறு பயன்பற்றிக் கூறி முடிவில்,

> ''நல்லபனை மரம்போல்
>
> நன்றிகாக்க வேண்டும்.
>
> வல்லவனாய் நாட்டை
>
> வாழவைக்க வேண்டும்''.[187]

எனப் பாடியுள்ளார்.

**2.2.7. விளையாட்டு:**

பொழுதை இனிதாக்குவது விளையாட்டு. விளையாட்டு என்பது வேடிக்கையும் மகிழ்ச்சியும் நிறைந்தது. விளையாட்டால் உடல்நலம் மட்டுமன்றி உள்ள நலமும் மேம்படும். எனவே விளையாட்டு என்பது குழந்தைகளுக்கு அவசியமான ஒன்று.

''ஒரு சமூகம் எவ்வளவுக்கெவ்வளவு நாகரிகமும் முன்னேற்றமும் அடைந்துள்ளதோ, அவ்வளவுக்கவ்வளவு அச்சமுதாயத்தில் வாழும் குழந்தைகளது விளையாட்டுகளும் பலதிறப்பட்டவையாக இருக்கும்.''[188]

வாழ்க்கையைப் பிரதிபலிப்பது இலக்கியம். எனவே வாழ்வில் மகிழ்ச்சி தரும் விளையாட்டு, இலக்கியத்திலும் இனிய இடத்தைப் பிடித்துள்ளது. குழந்தைகளைக் கவரும் விளையாட்டுகள் குழந்தைப் பாடலின் பாடு பொருளானதில் வியப்பில்லை. குழந்தைகள் பிறந்தது முதல் பல்வேறு விளையாட்டுக்களில் ஈடுபடுகின்றனர். இவ்விளையாட்டுக்கள் பால் அடிப்படையிலும் வயது அடிப்படையிலும் வேறுபடுவதைக் காணலாம்.

**மிகச்சிறு குழந்தைகளுக்கு:**

> ''கைகொட் டம்மா கைகொட்டு
>
> கண்ணே மணியே கைகொட்டு
>
> ....... ....... ....... ....... ....... .......

உடம்பை வளைத்து ஆடம்மா

உல்லா சமாய் ஓடம்மா''[189]

**பொருட்களை அறியும் பருவம்:**

''ராஜா பொம்மை பாரடி நீ

ராணி பொம்மை பாரடி நீ

....... ....... ....... ....... ....... .......

வாயைப் பிளக்கும் புலியைப்பார்

தாயைப் பிரியாக் கன்றைப்பார்.''[190]

**ஊஞ்சல்:**

''ஊஞ்சலாட வாவா

உடனேஓடி வாவா

....... ....... ....... .......

புன்னைமரக் கிளையிலே

சின்னஊஞ்சல் தொங்குது.

....... ....... ....... .......

இருவருமாய் அமர்ந்துமே

இங்குமங்கும் ஆடுவோம்''.[191]

**புகைவண்டி:**

''வீதியிலே ரயில் போகுது

வேடிக்கை பார்க்க வாங்க!

....... ....... ....... .......

நெட்டை உள்ள பையனாம்

நீலமேகம் எஞ்சினாம்–மிகக்

குட்டை உருவ கோபாலன்

கடைசி ரயிலுப் பொட்டியாம்.''[192]

**பட்டம்:**

''திட்ட மிட்ட படியே–வானில்

பட்டம் பறக்குது பார்பார்!

....... ....... ....... .......

கட்டுக் காவல் இல்லா வானில்

குட்டிக் கரணம் போடும்!

எட்டும் தூரம் சென்று—தானே

சிட்டுப் போலப் பேசும்.''[193]

**பம்பரம்:**

''நல்ல நல்ல பம்பரம்

நல்ல மரப் பம்பரம்

கல்லின் மீது ஆடிடும்

கருமை யான பம்பரம்

வரியாம் கோடு உடம்புதான்

வட்டம் போட்டு ஆடுமாம்.''[194]

**பந்து:**

''உருண்டை யான பந்து!

உதைத்து ஆடும் பந்து!

எடை குறைந்த பந்து!

இதுதான் ரப்பர் பந்து.''[195]

**கிரிக்கெட்:**

''பந்தைச் சுழற்றி வீசி

பாய்ந்து அடிப்பேன் நானே

அந்தக் கிரிக்கெட் ஆட்டம்

அடடா பெருங்கொண் டாட்டம்!

விரைந்து வீசும் பந்தை

வேக மாக அடிப்பேன்.

துரித மாக ஓடி

ஓட்டம் நூறு குவிப்பேன்!''[196]

**சடுகுடு:**

''மாம்பட்டை மருதம் பட்டை
மன்னார்குடி தென்ன மட்டை
காசுக்கு ரெண்டு மட்டை
சலாம் சடுகுடு! சடுகுடு!''[197]

இவ்வாறு பல்வேறு பாடல்கள் குழந்தைகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. மேலும் பலவகை விளையாட்டுக்களை ஒரே பாடலில் பாடும் பாங்கையும் பார்க்க முடிகிறது.

''பாண்டி விளையாடலாம்
பம்பரங்கள் சுழற்றலாம்
பந்து விளையாடலாம்
முந்தியோடி எடுக்கலாம்.
குச்சிப்புள்ளை அடிக்கலாம்.
கோடு கீறித் தாண்டலாம்
பட்டமதனைப் பறத்தலாம்
திட்டமிட்டுச் சாடலாம்
சடுகுடாட்ட மாடலாம்
தந்திரமாய்த் திரும்பலாம்.''[198]

**ஒலிம்பிக்:**

உலக விளையாட்டுப் போட்டியான ஒலிம்பிக்கும் குழந்தைப் பாடல்களில் பாடுபொருளானது.

''விளையாட்டில் திறமை வாய்ந்த
வேறுவேறு நாட்டு வீரர்
சளைக்காமல் ஆடி ஓடி
தாய்நாட்டுப் பெருமை கூட்டப்
பிரான்சிலே பிறந்த மேதை
'பெரன்பியர்டி கோபர்டிஸ்' என்பார்
கிரேக்கத்தில் தொடங்கி வைத்தார்
கீர்த்திமிகு ஒலிம்பிக் ஆட்டம்''.[199]

குழந்தைகளின் மனதை மகிழ்விக்கும் விளையாட்டை விளையாடும் போது பாடி மகிழவும், புதிய விளையாட்டுக்களைப் பற்றி அறிந்து கொள்ளவும் விளையாட்டு பற்றிய குழந்தைப் பாடல்கள் துணை நிற்கின்றன.

**2.2.8. அறிவியல்:**

மனிதர்கள் சிந்திக்கத் தொடங்கிய நாளிலிருந்தே அறிவியல் வளரத் தொடங்கியது. இருந்தும் கடந்த மூன்று நூற்றாண்டுகளாக மிக ஆக்கபூர்வமான வளர்ச்சி பெற்று வருகிறது. அறிவியல் வளர்ச்சியால் அகிலம் அடைந்த நன்மைகள் பற்பலவாகும். அறிவியலே புறநாகரிக வளர்ச்சிக்குக் காரணம். அறிவியலின் அதிவேக வளர்ச்சியையும் அதன் பயனையும் போற்றாதார் இலர்.

அறிவியலின் அருமை பெருமைகளைக் குழந்தைகளுக்கு எடுத்துரைப்பது பெரியோர்களின் கடமை. அதனைப் பாட்டு வடிவில் குழந்தைகளுக்குச் சொல்லி மனப்பதிவாக்குவது கவிஞர்களின் கடமை. இவ்வுண்மையை உணர்ந்த குழந்தைக் கவிஞர்கள் அறிவியலைப் பாடு பொருளாக்கினர். அரு.சோமசுந்தரத்தின் 'சிறுவர்க்கு விஞ்ஞானம்', மு.சாயபு மரைக்காயரின் 'அறிவியல் அறிஞர்கள்' ஆகிய நூல்கள் முழுவதுமாக அறிவியல் பற்றிய கவிதை நூல்கள்.

அறிவியலைப் பாடுபொருளாகக் கொண்ட குழந்தைப் பாக்களை இருவகைப்படுத்தலாம்.

1. போக்குவரத்துச் சாதனங்களான வாகனங்கள் 2. வாழ்க்கை வசதிக்கான ஏனைய பொருட்கள்.

**போக்குவரத்துச் சாதனங்கள்:**

உலகமயமாக்கல் நிகழப் போக்குவரத்துச் சாதனங்களே பெருங்காரணம் எனலாம். ஆற்றல் சான்ற அறிவியல் கண்டுபிடிப்புகளில் அனைத்து மக்களுக்கும் பயன்படும் அரிய, எளிய வாகனங்கள் பற்பல உள்ளன. அவை பற்றிய பாடல்களை இனிக் காணலாம்.

**சைக்கிள்:**

''தங்கையே பார்! தங்கையே பார்!
சைக்கிள் வண்டி இதுவே பார்!
சிங்கார மான வண்டி
சீமையிலே செய்த வண்டி
....... ....... ....... ....... .......
தீயில்லை புகையும் இல்லை
தீவிரமாய்ச் சென்றிடும் பார்''.[200]

**பேருந்து:**

''பேருந்து பேருந்து
அழகு மிக்க பேருந்து.
....... ....... ....... ....... .......
சிறுவர் ஏறும் பேருந்து
சுற்றுலா செல்லும் பேருந்து
பாம்பாம் மென்றே போகுமே
பட்டண மெல்லாம் போகுமே''.[201]

**மகிழுந்து:**

''நல்ல நல்ல மகிழுந்து
நான் விரும்பும் மகிழுந்து
தொல்லை இல்லா மகிழுந்து
தொலைவாய்ச் செல்லும் மகிழுந்து
ஆமை போல வடிவிருக்கும்
அழகாய் ஓடும் படியிருக்கும்''.[202]

**ரயில்:**

''ரயிலே ரயிலே கொஞ்சம்நில்!
ராத்திரி பகலாய் ஓடுவதேன்?
....... ....... ....... ....... .......
மனிதர் மற்றும் சரக்குகளை
மடியில் ஏற்றி இறக்கிதினம்

இனிதாய்ப் பயணம் செய்திடும்உன்
இலட்சியப் பயணம் எங்கேயோ?''[203]

குழந்தைகள் நிலத்தில் ஓடும் வாகனங்களைக் கண்ணால் பார்த்தும் பயணம் செய்தும் மகிழ்ந்திருப்பர். குழந்தைகள், பார்க்கவும் பயணம் செய்யவும் அரிதான வாகனங்களையும் பாடுபொருளாக்கினர் கவிஞர்கள்.

**படகு:**

''அலை கடலில் ஆடிவரும் என்படகு–ஐலசா
ஆனந்த ஊஞ்சலடா என்படகு–ஐலசா
....... ....... ....... ....... ....... .......
முயற்சியினால் முன்னேறும் என்படகு–ஐலசா
மூவர்ணக் கொடிபறக்கும் என்படகு–ஐலசா''.[204]

**கப்பல்:**

''கப்பல் நல்ல கப்பல்
கடலின் மேலே கப்பல்
ஒப்பில் லாத கப்பல்
உலகம் சுற்றும் கப்பல்
....... ....... ....... .......
ஏழு கடலும் செல்லும்
எல்லா நாடும் ஏகும்.
வாழும் மாந்தர்க் கெல்லாம்
வாணிகம் செய்யும் கப்பல்''[205]

**ஆகாய விமானம்:**

நீரில் மிதக்கும் வாகனங்களை வியப்புடன் கண்ட குழந்தை, வானில் பறக்கும் விமானத்தையும் வியந்து பார்க்கிறது.

''விஞ்ஞானப் பறவையில் விண்ணில் பறந்தேன்.
விதவிதமாய்க் கண்ணுக்குப் பற்பல காட்சிகள்
....... ....... ....... ....... ....... .......

விந்தை மனிதர்கள் கண்டு பிடித்த

விசித்திர மான ஊர்தி உயரப்

பறந்து சுற்றிடும் அழகே அழகு.

....... ....... ....... ....... ....... .......

கழுகு சுற்றிப் பறப்பது போன்று

சிறகை விரித்த வான ஊர்திகள்

உயரப் பறந்து உலகைச் சுருக்கின''.[206]

**ஒரு பாடலில் பல வாகனங்கள்:**

''நீர்மேல் செல்லும் கப்பல் பார்!

நீந்திநீந்திச் செல்லும் வேகம் பார்!

....... ....... ....... ....... ....... .......

வானில் பறக்கும் விமானம் பார்!

வட்டமிட்டுச் சுழலும் விமானம் பார்!

சிடுசிடு ரயில்வண்டி போகுது பார்!

சிக்னல் கொடுத்ததும் ஓடுது பார்!''[207]

**வசதியான வாழ்விற்கான பொருட்கள் சில:**

*'அறிவியலின் அரிய கண்டுபிடிப்பான மின்சாரம் இன்றி இன்றைய உலகு இயங்காது' என்று சொல்லுகின்ற அளவு நம் வாழ்விற்கு மின்சாரம் இன்றியமையாததாகிறது.*

''இன்றைய உலகில் மின்சாரம்

இல்லாமல் எதுவும் நடக்காது.

ஒன்றையும் இயக்கிட முடியாது

ஒளியும் ஒலியும் கிடையாது.

விளக்குகள் எரியவும் மின்சாரம்

விசிறிகள் சுழலவும் மின்சாரம்

திரைப்படம் காணவும் மின்சாரம்

தேவையின் முதலிடம் மின்சாரம்.

....... ....... ....... ....... ....... .......

தாமஸ் ஆல்வா உலகினுக்கே

தந்திட்ட பரிசிந்த மின்சாரம்''.[208]

*மின்சாரத்தால் இயங்கும் வீட்டு உபயோகப் பொருட்கள், வாழ்விற்குத் தேவையான கருவிகள், நாட்டு நலனுக்கான கருவிகள் என்ற வகையில் அறிவியல் கண்டுபிடிப்புகள் சிலவற்றைப் பற்றிய சிறுவர் பாடல்களைக் காண்போம்.*

**வானொலி:**

''எங்கோ நடக்கும் நிகழ்ச்சியை
இல்ல மிருந்தே கேட்கலாம்.
பங்கு கொள்ளும் நண்பர்கள்
பாட்டைப் பேச்சைக் கேட்கலாம்.
நாட்டுத் தலைவர் உரையினை
நல்ல வர்கள் பேச்சினை
வீட்டில் இருந்த வண்ணமே.
விருப்ப முடனே கேட்கலாம்.''[209]

**தொலைக்காட்சி:**

''தொலைக் காட்சி பார்த்தியா—அதில்
தோன்றும் படம் பார்த்தியா?
....... ....... ....... ....... ....... .......
நாடகமும் பார்க்கலாம்—நல்ல
நாட்டியமும் பார்க்கலாம்
பாடங்களும் கேட்கலாம்—வயல்
பசுமைகளும் பார்க்கலாம்.''[210]

**குளிர் பதனக் கருவி:**

''பழங்கள், காய்கள், கிழங்கெல்லாம்
பதனம் செய்யும் குளிர்க்கருவி
விலையில் உயர்ந்த மருந்தெல்லாம்
விரும்பிக் காக்கும் மின்கருவி
கலைஞன் ஜேக்கப் பெர்கின்சு
கண்டு பிடித்த பொன்கருவி''[211]

**கணிப்பொறி:**

''மனிதன் சிந்தனை விளைந்திருக்கும்
மாபெரும் கருவி கணினியடா!
இனிமை புதுமை வாய்ந்திட்ட
எத்தனை செயல்கள் செய்குதடா!
....... ....... ....... ....... ....... .......
பூமியில் இருந்தே விண்ணகத்தில்
பொறிகள் நன்கு செலுத்துதடா
....... ....... ....... ....... ....... .......
அச்சுத் தொழிலைச் செய்வதற்கும்
ஆலைகள் தம்மை இயக்குதற்கும்
மெச்சும் கருவி கணினியடா!''.[212]

**எந்திரமனிதன்;**

''எந்திர மனிதன் ரோபோ நான்
என்னை நீங்கள் அறிவீரோ?
எத்தனை அரிய பணிகளையும்
எளிதாய் நொடியில் செய்திடுவேன்
....... ....... ....... ....... ....... .......
சொல்லிக் கொடுத்த செயல்மட்டும்
செய்வேன் சிறிதும் பிழையின்றி
சொந்த மாகச் சிறுபணியும்
செய்திட என்னால் முடியாது.''[213]

**தட்டச்சு இயந்திரம்:**

''தட்டெ ழுத்து இயந்திரம்
....... ....... ....... ....... .......
தட்டித் தட்டி எழுத்தினை
தாளில் நன்கு பதிக்கலாம்.
....... ....... ....... ....... .......
தட்டெ ழுத்துப் பயிற்சியில்
தக்க தேர்வுப் பெற்றதும்

அலுவ லகப் பணியிலே
அமர்ந்து வேலை புரியலாம்''.[214]

**அச்சு இயந்திரம்:**

''அழகாய் அச்சடிக்கும்
அச்சு யந்திரம்
புத்தகங்கள் அச்சடிக்கும்
புதிய யந்திரம்''.[215]

**தையல் இயந்திரம்:**

''சின்னஞ் சிறிய இயந்திரம்
சிறந்த தையல் இயந்திரம்
வண்ண வண்ண ஆடையை
விரைந்து தைக்கும் இயந்திரம்''.[216]

**தொலைபேசி:**

''வீட்டில் இருந்தே பேசிடலாம்
விருப்பம் போல பேசிடலாம்;
நாட்டைத் தாண்டி பேசிடலாம்
நாட்டுக் குள்ளும் பேசிடலாம்
....... ....... ....... ....... ....... .......
அரிய அந்தத் தொலைபேசி
அறிஞர் கிரஹாம் பெல்லரின்
அறிவால் விளைந்த பயனாகும்.''[217]

**புகைப்படப்பெட்டி:**

''கண்கள் இருக்கும் சிறுபெட்டி
கைக்குள் அடங்கும் ஒருபெட்டி
விண்ணென விசையைத் தடவிவிடின்
விரைந்து கவர்ந்தே படம்பிடிக்கும்''.[218]

**இராக்கெட்:**

''வானில் பறக்கும் இராக்கெட்டில்
வருவோம் நாங்கள் நிலவிற்கு
கானில் தெரியும் பறவைகளைக்
கண்டு களித்தே ஆடிடுவோம்''[219]

**ராடார்:**

''புயல்சூழும் நேரம் பனிப்பெய்யும் வேளை
பொழிகின்ற மழையின் தோற்றம்
அயல்நின்று சொல்லும் அறிவாற்றல் உள்ள
அரிதான கருவி ராடார்!
....... ....... ....... ....... ....... .......
போர்க்காலம் வந்தால் ராடாரின் சேவை
பொழுதெல்லாம் தேவை யாகும்!''[220]

இத்தகைய அறிவியல் கண்டுபிடிப்புகளைப் பற்றிய பாடல்கள், கருவிகளை அறிமுகம் செய்வதுடன் அவற்றின் பயன்களை விளக்குகின்றன. மேலும் குழந்தைகளிடம் புதியன கண்டுபிடிக்க வேண்டுமென்ற ஆவலை ஏற்படுத்துகின்றன.

''ஆழ்ந்துபடி அகன்றுபடி
அறிவியலை நன்குபடி
கண்டுபிடி கண்டுபிடி
கண்ணே புதியன கண்டுபிடி.
....... ....... ....... ....... ....... .......
வெறியை நீக்கும் மனமருந்தை
விரைவாய்க் கண்ணே கண்டுபிடி
குறுகிய உணர்வை மாற்றுகிற
குளிர்ச்சி மருந்தைக் கண்டுபிடி.''[221]

'ஆழ்ந்த அகன்ற படிப்பால் புதியன கண்டுபிடிக்கலாம்'. என்று கூறுவதுடன் வன்முறைக்குக் காரணமான வெறியையும் குறுகிய

மனப்பான்மையையும் நீக்க மருந்து கண்டுபிடிக்க வேண்டியதன் அவசியத்தைக் கூறுகிறார்.

### 2.2.9. கற்பித்தல்:

பசுமரத்தாணி போல் படித்தவை, கேட்டவை மனதில் பதியும் பருவம் குழந்தைப் பருவம். அக்குழந்தைப் பருவத்தில் கற்றல் மிகமிக அவசியமானது. அதையும் பாடல்வழி கற்பது மகிழ்ச்சி தரும்.

**எண்ணும் எழுத்தும்:**

எண்ணும் எழுத்தும் கல்வியின் இருபெரும் அடிப்படைகள். ''எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்''[222] என்பது ஔவைமொழி. கண்களை ஒத்த எண்ணையும் எழுத்தையும் கவிஞர்கள் பாடு பொருளாகக் கொண்டு பாடியுள்ளனர்.

**எழுத்து:**

''அழகு மிக்க தமிழ்மொழி
ஆசை யாகப் படிக்கலாம்!
இன்பம் கொடுக்க வல்லதாம்
ஈடில் லாத தமிழ்மொழி
உள்ளம் தன்னில் நன்மையை
ஊற்றுப் போலப் பெருக்கிடும்.
எண்ணில் லாத இலக்கணம்
ஏற்ற மான இலக்கியம்
ஐயம் இன்றிக் கொண்டது!
ஒப்பில் லாத அன்பினால்
ஓம்பித் தமிழைக் காத்தவர்
ஔவை போலப் பற்பலர்!''[223]

என்று உயிர் எழுத்தைக் கற்பிக்கிறார் கவிஞர்.

''செக்குக்கு நடுவெழுத்தே க்
சங்குக்கு நடுவெழுத்தே ங்
....... ....... ....... ....... .......

கண்ணுக்குப் பின்னெழுத்தே ண்

....... ....... ....... ....... .......

தேர் என்றால் பின்னெழுத்தே ர்

....... ....... ....... ....... .......

மான் என்றால் பின்னெழுத்தே ன்''[224]

என்று மெய்யெழுத்து பதினெட்டையும் சொல்லுடன் கற்பிக்கிறார் பாரதிதாசன்.

''க் மேலே அகரம் ஏற
இரண்டும் மாறிக் 'க' ஆகும்.
க் மேலே ஆ ஏற
இரண்டும் மாறிக் 'கா' ஆகும்''.[225]

என்று உயிர்மெய் எழுத்து உருவாகும் விதத்தையும் பாரதிதாசன் குறிப்பிடுகிறார்.

''வாய்திறந்தால் பிறந்திடுமே அகரம்–அது
வையத்து மொழிக்கெல்லாம் முதலாம்
நெஞ்சுவழிப் பிறந்திடுமே வல்லினம்–கசட
தபறஎன ஆறாகும் இவ்வினம்.''[226]

என்று எழுத்துக்களின் பிறப்புப் பற்றிக் கூறும் பாடல் இது. எழுத்துக்களைப் பாடிய கவிஞர்கள் தமிழ் மொழியின் மேன்மைகளையும் குழந்தைகளுக்குக் கற்பிக்கின்றனர்.

''இலக்கியங்கள் நிறைந்தது
இலக்கணத்தில் சிறந்தது.
....... ....... ....... ....... .......
சங்கம் மூன்றும் வளர்த்தது.
சரித்தி ரங்கள் புகழ்ந்தது.''[227]

''தமிழின் மாண்பைக் காத்திடும்
சங்கம் வளர்த்த இலக்கியம்
தமிழின் வளத்தைக் காட்டிடும்
தன்னே ரிலாத இலக்கியம்''.[228]

*சங்கம் வைத்து வளர்க்கப்பட்ட தமிழில், இலக்கிய இலக்கணங்கள் நிறைந்து காணப்படுகிறது.*

**எண்:**

*மிகச் சிறு குழந்தைகளுக்கு ஒன்று, இரண்டு என்று எண்களைக் கற்பிக்கும் போதே, ஒன்று என்பது எது? இரண்டாவது எது? என்பதைக் குழந்தைகள் உணரும் வண்ணம் பல கவிஞர்கள் பாடல் இயற்றியுள்ளனர்.*

''ஒன்றே தலையும் ஒன்று!
இரண்டே கைகால் இரண்டு!
முக்காலிக் கால்கள் மூன்று!
நாற்காலிக் கால்கள் நான்கு
ஒருகை விரல்கள் ஐந்து
வண்டின் கால்கள் ஆறு
ஞாயிறு முதற்சனி ஏழு.
திசையும் திசையும் எட்டு
தானிய வகைகள் ஒன்பது
இருகை விரல்கள் பத்தே!''[229]

''வட்டமான தட்டு
தட்டு நிறைய லட்டு
லட்டு மொத்தம் எட்டு
எட்டில் பாதி விட்டு
எடுத்தான் மீதம் கிட்டு
மீதம் உள்ள லட்டு
முழுதும் தங்கை பட்டு
போட்டாள் வாயில் பிட்டு
கிட்டு நான்கு லட்டு
பட்டு நான்கு லட்டு
மொத்தம் தீர்ந்த தெட்டு
மீதம் காலித் தட்டு''.[230]

*என்ற பாடலில் கூட்டல் கழித்தல் கணக்குகள் அமைந்து குழந்தைகளுக்கு லட்டுபோல் இனிக்கின்றது.*

''பட்டணம் செல்ல ஒருராஜா
பயணம் வைத்தார் அவருடனே
ஒன்றாய்ச் செல்ல அவருடைய
ஒன்பது மனைவியர் புறப்படவே
ஒவ்வொரு மனைவியின் பின்னாலும்
ஒன்பது குழந்தைகள் சென்றனராம்
ஒவ்வொரு குழந்தையின் பின்னாலே
ஒன்பது நாய்கள் புறப்படவே
ஒவ்வொரு நாயின் பின்னாலும்
ஒன்பது குட்டிகள் சென்றனவாம்
பட்டணம் செல்ல ராஜனுடன்
பயணம் வைத்தவர் மொத்தத்தில்
எத்தனை என்று சரியாக
என்னிடம் சொல்வாய் 'பட்'டென்று

★ ★ ★ ★ ★ ★

தெரிந்திட வில்லை யானாலோ
திருப்பிடு இதனைத் தலைகீழாய்!''[231]

*பெரிய குழந்தைகளுக்கான புதிர்ப்பாடல் இது. பாடல் இடம் பெற்றுள்ள நூலில், பாடல் முடிவில் விடை தலைகீழாக அச்சிடப்பட்டுள்ளது. (விடை: 6562)*

''நல்லதை என்றும் கூட்ட வேண்டும்!
அல்லதை நீக்கிக் கழிக்க வேண்டும்!
திறமை வளர பெருக்க வேண்டும்!
தேர்ந்த கொள்கை வகுக்க வேண்டும்!''[232]

*கணக்குக் குறியீடுகளை வாழ்வின் செயல்பாட்டில் பயன்படுத்தும் விதம் குறித்த பாடலாக இது அமைந்துள்ளது.*

**வினா எழுப்புதல்:**

''என்ன? ஏன்?எதற்கு?
எங்கே? எப்படி?என்று
சின்னத் தம்பி கேளு!
சிறந்த கேள்விகள் கேளு!
கேட்டால் அறிவே வளரும்
கேள்வியில் உன்திறன் தெரியும்.''[233]

*வினா எழுப்புவதால் அறிவு வளரும். அத்துடன் எழுப்புகின்ற வினா குழந்தையின் திறனை வெளிப்படுத்தும் என்று பாடுகிறார் கவிஞர்.*

**நிறங்கள்:**

''பறக்கும் கொக்கு வெள்ளை
பாலின் நிறமும் வெள்ளை
சிறந்த முல்லை வெள்ளை
திகழும் பல்லும் வெள்ளை
கத்தும் காகம் கறுப்பு
கண்ணின் மையும் கறுப்பு''.[234]

*இவ்வாறு சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம் ஆகிய வண்ணங்கள் ஒவ்வொன்றிற்கும் 4 வகைச் சான்றுகள் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

**திசைகள்:**

''சூரியன் உதிப்பது கிழக்கு–அது
சூடாறி மறைவது மேற்கு.
நேராய்க் கிழக்குதிசை நோக்கு–நீ
சீராகக் கைகளையும் தூக்கு
வலக்கை காட்டும் திசை தெற்கு.
....... ....... ....... ....... ....... .......
இடக்கை காட்டும் திசை வடக்கு.''[235]

இப்பாடல் திசைகள் நான்கினைக் கூறுவதுடன், திசைகளை அறியும் விதத்தையும் கூறுகிறது.

**மாதங்கள்:**

''சித்திரை மாதம் செடியொன்று நட்டேன்!
வைகாசி மாதம் வளர்ந்தது கொஞ்சம்!
ஆனி மாதம் அசைந்தது மெள்ள
ஆடி மாதம் ஆடொன்று பார்த்தது''.[236]

இதுபோல் சிலர் மாதங்கள் பற்றி எழுதியுள்ளனர்.

தமிழ் மாதங்கள் போலவே புழக்கத்தில் உள்ள ஆங்கில மாதங்களும் குழந்தைப் பாடல்களின் பாடு பொருளாயின.

''ஜனவரி மாதம் வருடம் பிறக்கும்;
பிப்ர வரிதான் மாதத்தில் சிறிது;
மார்ச் மாதம் யார்க்கும் படிப்பு;
ஏப்ரல் மாதம் இறுதித் தேர்வு;
மேமாதம் வந்து விடுமுறை தந்திடும்''[237]

இதுபோன்று பன்னிரண்டு மாதங்கள் குறித்துச் சிலர் பாடியுள்ளனர்.

**கிழமை:**

''ஞாயிற்றுக் கிழமை நகையைக் காணோம்
திங்கட் கிழமை திருடன் கிடைத்தான்
செவ்வாய்க் கிழமை ஜெயிலுக்குப் போனான்
புதன் கிழமை புத்தி வந்தது''.[238]

இவ்வாறு கதை போன்ற அமைப்பில் கிழமைகளை நினைவு கொள்ளும் வகையில் எளிய பாடலாகக் கவிஞர் பாடியுள்ளார்.

**பொருள் விளக்கப் பாடல்:**

''அம்மி என்பது அரைக்க உதவும்
இம்மி என்பது அளவிற் சிறியதாம்
டிம்மி என்பது வெள்ளைத் தாளாம்''.[239]

சொல்லுக்கான பொருளை இப்பாடல் விளக்குகிறது.

தமிழ் இலக்கணத்தில் காரண, இடுகுறிப் பெயர்களுக்கான பொருளை விளக்கும் பாடல் உள்ளது.

> ''காரணம் உள்ள சொல்லைக்
> காரணப் பெயராய்க் கொள்ளுவார்
> ....... ....... ....... ....... .......
> காரண மின்றி இட்டுரைத்தால்
> கல்வியில் இடுகுறிப் பெயரென்பார்''[240]

**புவியியல்:**

> ''பூமியைச் சுற்றி ஒருவேலி
> போட்டது போல பெரியகடல்
> அந்த பூமியில் எத்தனையோ
> அதிசய மான வேடிக்கை!
> ....... ....... ....... ....... .......
> காஷ்மீர் என்னும் ஊரினிலே
> காணக் காணப் பூந்தோட்டம்!
> 'அரேபியா' என்னும் நாட்டினிலே
> ஐயோ! அதிகம் வெய்யிலடா!''[241]

> ''கிழக்கே பெரிய கடல்
> நீலம் நிறைந்த கடல்
> மேற்கே பெரிய மலை
> நீண்ட தொடர்ச்சி மலை
> தெற்கே குமரி முனை
> தரையின் மூக்கு முனை
> வடக்கே திருப் பதியாம்!
> வாழ்ந்த தமிழ்ப் பதியாம்!''[242]

என்று உலக அமைப்பு பற்றியும், தமிழக எல்லைகள் பற்றியும் பாடியுள்ளனர். மேலும் 'உலக சுழற்சி'[243] பற்றி சி.இரத்தினவேலுவும், 'மேற்குத் தொடர்ச்சி மலை'[244] பற்றி இராசமாணிக்கனாரும், 'ஐவகை

நிலங்கள்'[245] பற்றி வே.இரா.சிவஞான வள்ளலும் பாடியுள்ள பாடல்கள் குழந்தைகளுக்குப் புவியியல் அறிவை ஊட்டக்கூடியன.

**வரலாறு:**

குழந்தைகள் இந்திய வரலாற்றையும் உலக வரலாற்றையும் அறிய வேண்டும். நம் நாட்டைப் பற்றியும் உலகைப் பற்றியும் மக்களைப் பற்றியும் அறிவதன் மூலம் குழந்தைகள் அறிவில் சிறந்தவராக உருவாக முடியும்.

சான்றோர்கள், அரசர்கள், ஆன்மீகவாதிகள், மக்களுள் மாறுபட்டோர் போன்றோரின் வரலாறும் குழந்தைப் பாடலின் பாடு பொருளாயின. இத்தகைய வரலாறு குழந்தைகளின் வழிகாட்டியாக அமையும்; வடிவமைக்க உதவும். மேலும் போராட்டங்களும் வரலாற்றுப் பாடலில் இடம் பிடித்துள்ளன.

''கூர்த்த மதிமிகுந்த–ஆங்கிலக்
கும்பினிக் காரர் வந்தார்.''[246]

''தின்றமனைக் கிரண்டு செய்யும் குண்டுணிகள்
திருடனுக்கு உளவு சொல்லும் திருவிலிகள்
நன்றிகெட்ட துரோகிகளின் சேட்டையினால்
நாடிழந்தோம், பீடிழந்தோம், வீடிழந்தோம்''.[247]

''மீரட்டில் கான்பூரில் டில்லியிலே
வீரப்போர் வென்றுவெறி கொண்டவரை
பீரங்கி வாயினிலே பிணமாக்கப்
பெருங்கலகம் ஒடுக்கினரே பிரிட்டிஷார்''.[248]

சுத்தானந்த பாரதியார், ''இந்திய சரித்திரக்கும்மி'' என்ற நூலில் விடுதலைப் போராட்டம் பற்றிப் பாடியுள்ள பாடல் இது. அழ.வள்ளியப்பா 'சுதந்திரம் பிறந்த கதை' என்ற நூலில் விடுதலை போராட்டத்தையும், விடுதலை பெற்றதையும் பாடலாக எழுதியுள்ளார்.

''பெற்றபொன் னாட்டினிலே—வந்து

மற்றவர் ஆளுவது

முற்றும் அநீதியன்றோ?—நாட்டை

மீட்க வேண்டுமன்றோ?

அறிஞர்கள் கூடினரே—கூடி

அமைத்தனர் காங்கிரசை

உரிமைகள் கேட்டனரே—சுதந்திர

உணர்ச்சி ஊட்டினரே''.[249]

**பல்லவர் கலைத்திறம்:**

''மா மல்ல புரம்

ஒரே கல்லில் ரதம்

ஐந்து பேர்க்கு ரதம்

கலைஞர் கை அற்புதம்

மலை ஒன்றில் சிலை

சிலை ஒன்றில் தலை

தலை ஒன்றில் கலை

கலைக் கில்லை விலை''.[250]

*அக்கால அரசர்களின் சிற்பக்கலைச் சிறப்பைக் கவிஞர், குழந்தைகள் ரசிக்கும் வண்ணம் பாடியுள்ளார்.*

**கோட்டை:**

''தோழியிது பாழடைந்த கோட்டை—இதில்

சோழமன்னர் ஆண்டு வந்தார் நாட்டை

சூழவும் வருவதிந்த வீதி—இதைச்

சுற்றிவந்து பார்த்திடலாம் வாடி''.[251]

*இது பழங்காலக் கோட்டைகளைச் சுற்றிப்பார்க்கும் ஆவலைத் தூண்டுகிற பாடல்.*

**வாழ்க்கை வரலாறு:**

''நஞ்சைக் கொடுத்த கொடியோர்க்கும்
நன்றி சொன்னார் சாக்ரட்டீஸ்.
நெஞ்சை உலுக்க சிலுவையிலே
நெரித்தோர்க்கு ஏசு அருள்கேட்டார்.
குண்டால் உடலைத் துளைத்தவரை
கும்பிட் டிறந்தார் நம்காந்தி''.[252]

என்று பகைவருக்கருளிய பண்பாளர்கள் வரலாற்றைப் பாடுபொருளாக்கினார் கவிஞர்.

**2.2.10 சமூக முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள்:**

மக்கள் சமுதாயத்திற்குப் பயன் விளைவிக்கும் இடங்கள் குழந்தைப் பாடல்களில் இடம் பெற்றன.

**பள்ளி:**

''எங்கள் பள்ளி நல்ல பள்ளி
ஏற்ற மானது.
இதில் படிக்கும் எங்கள் கல்வி
இன்ப மானது''.[253]

''கோவிலான பள்ளி நோக்கி
ஓடி வாருங்கள்
உயர்ந்த பெருஞ் செல்வமான
கல்வி தன்னையே
உங்கள்வச மாக்கிக் கொள்ள
ஓடி வாருங்கள்''.[254]

**நூலகம்:**

''நல்ல அறிவைப் பெருக்கும்
நாட்டின் வாசக சாலை
தெள்ளு தமிழ்ச் சரிதை
தந்து போற்றும் சாலை''.[255]

**சர்க்கஸ்:**

''சர்க்கசுக்குப் போகலாம்

....... ....... ....... .......

சிங்கம்புலி சிறுத்தையும்

சொன்னபடி செய்யுமாம்

சாட்டை கொண்ட மனிதனிடம்

சலாம் போட்டு நிற்குமாம்.''[256]

**உயிர்க்காட்சி சாலை:**

''காட்சி சாலை செல்லுவோம்.

கரடி புலியைக் காணுவோம்

மாட்சி உள்ள சிங்கமும்

மந்தி யோடு யானையும்

....... ....... ....... ....... .......

கண்டு மகிழச் செல்லுவோம்''.[257]

**துறைமுகம்:**

''தெப்பம் போலக் கப்பல்கள்

சென்று திரும்ப வகையுள்ள

கப்பல் தங்கும் துறைமுகத்தைக்

கண்ணைப் போலக் காத்திட்டார்''.[258]

**வயல்:**

''பயிர்கள் தழைக்கும்

பச்சை வயலே

நெல்லும் கரும்பும்

நிறைந்த வயலே

....... ....... ....... .......

வாழை கோதுமை

வளரும் வயலே''.[259]

இவ்வாறு சமூக முக்கியத்துவம் வாய்ந்த கோயில், பேருந்து நிலையம், கடைவீதி,பொருட்காட்சி பற்றிச் சில பாடல்கள் குழந்தைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

**2.2.11. பழக்க வழக்கம்:**

கல்வி சார்ந்த செய்திகளைக் கற்பிப்பதுடன், வாழ்விற்கான நல்ல பழக்க வழக்கங்களையும் குழந்தைகளுக்குக் கற்பிப்பதைக் கவிஞர்கள் தங்கள் நோக்கமாகக் கொண்டுள்ளனர்.

''காலை எழுந்து
கடவுளைத் தொழுது
பல்லை விளக்கி
முகமதைக் கழுவி
பாலைக் குடித்தபின்
பாடம் படித்து''.[260]

''சிற்றுண்டி முடித்திட்ட பின்னே பள்ளிச்
சீருடை அணிந்திடு பாப்பா.
கற்றிடும் பள்ளிக்குத் தினமும் குறித்த
காலத்தில் சென்றிடு பாப்பா.''[261]

நல்லபல பழக்கங்களைப் பாடலாய்த் தந்த கவிஞர்கள், தவறான பழக்கங்களால் ஏற்படும் விளைவுகளையும் சொல்லும் பாடல்கள் சில உள்ளன.

''பாடம் படியா ஒருபையன்
பள்ளி செல்லா ஒருபையன்
மூடன் ஆனான் முன்னாலே!
மூட்டை சுமந்தான் பின்னாலே!
சொல்லைக் கேளா ஒருபையன்
துள்ளித் திரிந்த ஒருபையன்

கல்லான் ஆனான் முன்னாலே!
கட்டை சுமந்தான் பின்னாலே!''[262]

''வாயைத் திறந்து தூங்கிடும்
வழக்கம் இருந்து வந்திடின்
நோயைக் கொண்டு சேர்த்திடும்
நிம்ம தியைக் கெடுத்திடும்.''[263]

குழந்தைப் பருவத்தில் அறிமுகப்படுத்தவேண்டியவற்றையும், கற்பிக்க வேண்டியவற்றையும் குழந்தைக் கவிஞர்கள் தாயாக, ஆசானாக இருந்து பாடல் வழி கற்பிக்கின்றனர்.

**2.2.12. கற்பனை:**

மனித வாழ்க்கைக்குக் கற்பனை இன்றியமையாதது. இறந்த கால அனுபவங்கள், எதிர்கால விளைவுகளுக்கு அடித்தளமாக அமைய வேண்டும். இவை இரண்டிற்கும் இடைப்பட்ட எண்ணங்களே கற்பனை. கலைஞர்களும் கவிஞர்களும் கற்பனைக்கு வடிவம் கொடுக்கின்றனர். கண்களால் காண்பது காட்சி; அகக்கண்களால் காண்பது கற்பனைக் காட்சி.

குழந்தைப் பருவத்தில் கற்பனை வளமாக உள்ளது. அது அவர்களின் இயல்பு. அந்தக் கற்பனையே அவர்களின் வாழ்விற்கு வழியமைத்துக் கொடுக்கிறது.

'' 'கலைக்களஞ்சியம்' கூறுவதுபோல், குழந்தை வீரனாகப் போர்புரியும்; குருவியாகத் தானியம் பொறுக்கும்; புல்லாய் வளரும்; நீதிபதி போல் பார்த்துக் கொண்டிருக்கும். ஆனால் யாரையும் தண்டிப்பதில்லை''[264] என்கிறார் அகமது பஷீர்.

கற்பனா சக்தி மிக்கக் குழந்தைகள் பொய்சொல்லும் பழக்கம் கைவரப் பெற்றவராக இருக்கலாம். ''நம் குழந்தைகள் பொய் சொல்லும் போது அவர்களைத் தண்டிப்பதற்குப் பதிலாகத் திருத்த முயல வேண்டும். ஏனெனில் குற்றவாளி அவன் அல்ல. குழந்தையின் கற்பனா சக்தியை வளர்ப்பதற்கு நாம் அதற்குரிய உற்சாகம் தராமல் இருந்து விடக்கூடாது. சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டால் அது

விருத்தியாகிறது என்பதை மட்டும் பார்த்துக் கொள்ளுங்கள்''[265] என்கிறார் ப்ளோரா எச்.வில்லியம்ஸ்.

''அழகு வானம் மீதிலே
ஆட்டுக் கூட்டம் ஓடுது.
ஆட்டுக் கூட்டம் யாவுமே
யானைக் கூட்டம் ஆகுது.
யானைக் கூட்டம் ஆவது.
மேகக் கூட்டம் அல்லவோ?
மேகக் கூட்டம் எப்போது
வேக மழை ஆகுமோ?''[266]

மேகக் கூட்டங்களைப் பலவிதமாகக் கற்பனை செய்வது குழந்தைகளின் இயல்பு.

''கூனல் கிழவி கோலை ஏந்தி
வானம் பார்க்கச் சென்றாள்–அவள்
வானம் பார்க்கச் சென்றாள்.
வானக் கிழவன் அவளைத் தூக்கி
நிலவில் வைத்து நின்றான்–அவன்
நிலவில் வைத்து நின்றான்''.[267]

என்ற பாடலில் நிலாப்பாட்டி பொழுது போக்க ராட்டையில் நூல் நூற்பதாகச் செல்கிறது பாடல். மேலும் பெரியவனானதும் தான் என்னவாகப் போகிறோம்? அதன்மூலம் மக்களுக்கு என்ன செய்யப் போகிறோம்? என்பன போன்ற கற்பனை எல்லாக் குழந்தைகளுக்கும் உண்டு. இவற்றையும் பாடுபொருளாக்கிக் குழந்தைகளின் ஆர்வத்தை வளர்த்தனர் கவிஞர்கள். அழ.வள்ளியப்பாவின், ''நானாக இருந்தால்''[268], எல்.எம்.பஹதூரின், ''அரசனைப் போல் நானானால்''[269] போன்ற பாடல்கள் குழந்தைகளின் கற்பனையை வெளிப்படுத்தும் கவிதைகள்.

### 2.2.13. உணவு:

குழந்தைகளின் உள்ள வளர்ச்சி, உடல் வளர்ச்சிக்கான செய்திகளைக் கவிஞர்கள் பாடலாக்கினர். அதே நேரம் ''சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுத வேண்டும்.'' என்பதையும் மறந்தார்களில்லை. நலமான உடலில்தான் நற்பண்பும் நல்லறிவும் வளரமுடியும். எனவே அறுசுவை உணவுகளில் குழந்தைகள் விரும்புவன வற்றையும், அவர்களுக்கேற்ற நல்ல உணவு வகைகள் பற்றியும் பல கவிதைகளைக் கவிஞர்கள் தந்துள்ளனர்.

**அறுசுவை:**

''கரும்பு இனிக்கும் கேள் தம்பி;
கசக்கும் பாகற்காய் தம்பி
விரும்பா கார்ப்பு மிளகாயாம்;
விரிகடல் உப்போ உவர்ப்பாமே!
மாங்காய் புளிப்புச் சுவைதானே
மறவாய் பாக்கு துவர்ப்பாமே.
பாங்காய் அறுசுவை அறிவீரே;
பக்குவம் எல்லாம் தெரிவீரே''[270]

**அரிசி:**

''அரிசியைப் பொரித்தால் பொரியாகும்
அரிசியைப் பொடித்தால் மாவாகும்
அரிசியை இடித்தால் அவலாகும்
அனைத்தும் நமக்கு உணவாகும்''.[271]

**சோளம்:**

''சத்து மிக்க சாப்பா டெல்லாம்
சோளத் துக்குப் பின்
சொத்து மிக்கோர் எல்லாம் உனைச்
சுவைத்தால் நோய் இல்லை''[272]

**கீரை:**

''பச்சைக்கீரை பசலைக்கீரை நாளும் எங்கள் உணவு
இரத்த ஓட்டம் விரைவு செய்யும் உணவு இதுவாமே.
....... ....... ....... ....... ....... .......
அரைக்கீரை, அகத்திக்கீரை, முளைக்கீரை, முருங்கைக்கீரை,
பருப்புக்கீரை, தண்டுக்கீரை , வெந்தயக்கீரை
காசுமிகவும் குறைவு கிடைக்கும் வழியும் சுளுவு.
பக்குவமாய்ச் சமைத்திட்டால் சத்து மிகவுண்டு''.[273]

**பிட்டு:**

''மாமி சுட்ட பிட்டு
மடியில் வாங்கிக் கட்டு
சீனி சர்க்கரை இட்டு
சிறிது நெய்யும் கொட்டு
உண்டு ஏப்பம் விட்டு
ஓடி வாநீ பட்டு''[274]

**இட்டலி:**

''இட்டலி வேண்டுமா இட்டலி பூப்போல்
இருக்கும் வீட்டின் இட்டலி.
உளுந்தம் பருப்பைக் கூட்டி
உரலில் மாவாய் ஆட்டி—மிதமாய்ப்
புளித்த பின்னே, பாட்டி— இட்டலி
சுட்டாள் காலை நீட்டி''[275]

**தோசை:**

''தோசை நல்ல தோசை —அம்மா
சுட்டுத் தந்த தோசை
ஆசையாக எனக்கே—என்
அம்மா தந்த தோசை
வட்ட மான தோசை—அது
மாவில் சுட்ட தோசை.''[276]

**ஆப்பம்:**

‘‘அம்மா சுட்ட ஆப்பம்
ஆளுக் கொரு ஆப்பம்
இனிப் பான ஆப்பம்
ஈமொய்க் காமல் பார்ப்போம்!’’[277]

**வடை:**

‘‘வட்டமான வடையிது
வாசமுள்ள வடையிது!
உளுத்தமாவு வடையிது
உனக்குப்பிடித்த வடையிது!
ஓட்டையுள்ள வடையிது
ஊட்டமுள்ள வடையிது!’’[278]

**அதிரசம்:**

‘‘அரிசிமாவை வெல்லப்பாகில்
அமுக்கி வைத்த அதிரசம்.
அளவைப்பார்த்து ஏலம்சுக்கை
அரைத்துப் போட்ட அதிரசம்’’[279]

**சின்னச்சீடை:**

‘‘சின்னச் சின்னக் கோலி போல
சீடை இருக்கு வீட்டிலே
....... ....... ....... ....... .......
அள்ளி அள்ளித் தின்னபோதும்
ஆசை மட்டும் குறையலே’’.[280]

*இவைபோன்று லட்டு, ஜாங்கிரி, முறுக்கு,தேன்குழல், குளிர்பான வகைகள் பற்றிப் பல குழந்தைப் பாக்கள் உள்ளன. உணவு என்பது உடல் வளர்ச்சிக்கானது. சில நேரங்களில் உடல்நோய்க்கும் உணவு காரணமாகிறது.*

''நச்சுத் தீனித் தின்னாதே

நல்ல உடம்பைக் கெடுக்காதே.

....... ....... ....... ....... ....... .......

பாதை ஓரம் விற்கின்ற

பண்டங்கள் எதையும் வாங்காதே''.[281]

உணவின் சுவை, தன்மை, நன்மை, தீமை அனைத்தையும் குழந்தைகள் அறியும் வண்ணம் பாடலாகத் தந்துள்ளனர்.

### 2.2.14. குறள்:

உலகப் பொதுமறையான குறளையும் இயற்றிய திருவள்ளுவரையும் அவர்தம் கருத்துக்களையும் குழந்தைக் கவிஞர்கள் பாடுபொருளாக்கிப் பாடினர்.

''வையம் உள்ள வரைக்கும் நம்

வளர் தமிழ் நின்றிடும்

வானம் உள்ள வரை திரு

வள்ளு வரும் நிற்பாரே!''[282]

என்று பொன்ராசன் வள்ளுவரைப் போற்றியுள்ளார். 'குறள் விளக்கக் குழந்தைப் பாடல்கள்', என்ற நூலைப் புலமைப்பித்தனும் 'வள்ளுவர் வழியில் குழந்தைப்பாடல்கள்' என்ற நூலைத் திருச்சிபாரதனும் இயற்றியுள்ளனர். மேலும் குழந்தைக் கவிஞர்கள் பலரும் குறள் கூறும் கருத்துக்களை எளிய பாடலாகத் தந்துள்ளனர்.

''மறதி இருந்தாலே—நம்

மனது சோர்ந்து விடும்.

மறதி வளர்ந்தாலே—நம்

மாண்பு குறைந்து விடும்

....... ....... ....... ....... .......

எண்ணி வருந்தாமல் —மறதி

இன்றே அகற்றிடுவோம்''.[283]

இப்பாடல் 'பொச்சாவாமை' அதிகாரத்தை விளக்குகிறது.

'' 'பிறன் இல் விளையாமை' என்ற அதிகாரத்தைக் குழந்தைகளுக்கு ஏற்ற வகையில், மற்றவர் பொருளின் மீது ஆசைப்படுதல் தவறு''[284] என்று எழுதியுள்ளார் பாரதன்.

''வெள்ளத்(து) உயரம் போலவே
 விரைந்து வளரும் பூவைப்போல்
உள்ளத்(து) ஊக்கம் போலவே
 உயர முடியும் வாழ்விலே!''[285]

என்ற புலமைப்பித்தனின் பாடல் 'வெள்ளத்தனைய மலர்நீட்டம்' என்ற குறள் கருத்தைக் கூறுகிறது. பாடலின் முடிவில் குறளும் கொடுக்கப்பட்டுள்ளது.

''இப்பிறப்பில் நாம் முயன்று
 தேடிப் பெற்றிடின்—அது
எப்பிறப்பும் தொடர்ந்து வந்து
 சிறப்புச் சேர்க்குமாம்''.[286]

வெள்ளத்தில் அழியாது; கொடுக்கக் குறையாது; அதனைப் பெறத் துடிக்கிறேன். அது எது? தெரிந்தவர்கள் சொல்லுங்கள் என்பதாகப் பாடலை முடிக்கிறார். அதனைத் தொடர்ந்து 'கேடில் விழுச் செல்வம்' என்ற குறளையும் தருகிறார் கவிஞர் பொன்ராசன். இவ்வாறு உலகப் பொதுமறை குழந்தைப் பாடல்களில் இடம் பிடித்துள்ளது.

### 2.2.15. நகைச்சுவை:

குழந்தைகளைக் கவரக் கூடியது நகைச்சுவை. 'வாய்விட்டு சிரிச்சா நோய் விட்டுப் போகும்' என்பதற்கு ஏற்ப இன்று பல இடங்களில் நகைச்சுவை மன்றங்கள் அமைத்துச் சிரித்து மகிழ்கின்றனர். நாட்டுப்புறச் சிறுவர் பாடல்களிலும் நகைச்சுவைப் பாடல்களுக்குப் பஞ்சமில்லை. சான்றாக,

''தாடி நீண்ட தாத்தா
தடவி ஒருநாள் பார்த்தார்.
மாடப் புறா ரெண்டு
மைனாப் பறவை ரெண்டு

காடக் குருவி ரெண்டு

கரிக் குருவி ரெண்டு

தாடிக் குள்ளே தங்கி

முட்டை யிட்டன ரெண்டு''.[287]

*இது போன்று அழ.வள்ளியப்பாவின் 'தாடிச்சாமியார்'[288] பாடலில், சிஷ்யர்கள் தாடியைத் தாங்கிவர சாமியார் சாலையைக் கடக்கிறார். அந்நேரத்தில் ஏற்படும் நிகழ்வுகளைக் கவிஞர் நகைச்சுவையாகக் கூறுகிறார்.*

*பழம்பாடல் ஒன்றில் சுண்டெலி கல்யாணம் நகைச்சுவையாகப் பாடப்பட்டுள்ளது.*

''அப்பாக் குட்டி மகன்

சுப்பாக் குட்டி பிள்ளை;

சுப்பாக் குட்டி பிள்ளை

சுண்டெலி யாம்;

சுண்டெலி ராசனுக்குக்

கல்யாண மாம்;

சோளத் தட்டுப் பல்லாக்கு

ஊர்கோல மாம்;

பாம்பைக் கூப்பிடுங்கள்

பல்லாக்குத் தூக்கட்டும்;

பல்லியைக் கூப்பிடுங்கள்

பராக்குப் பார்க்கட்டும்;

தவளையைக் கூப்பிடுங்கள்

தாரை ஊதட்டும்;

சேவலைக் கூப்பிடுங்கள்

கொம்பு முழங்கட்டும்!''[289]

*இதே போன்ற கி.வா.ஜகந்நாதனின் 'சுண்டெலி கல்யாணம்'[290] பாடலில் ஓரெலி ஓடிப்போய் ஊருக்கெல்லாம் சொன்னதாம்! தொடர்ந்து இரண்டெலி, மூன்றெலி எனப் பத்தெலி வரை என்னென்ன வேலைகள் செய்தன என வேடிக்கையாகப் பாடியுள்ளார்.*

‘‘ஊருக்கெல்லாம் பால்கொடுப்பார்

உலகநாதக் கோனார் ;

உலகநாதக் கோனாரிடம்

உள்ளபசு ஒன்றே

உள்ளபசு கறக்கிற பால்

ஒருபடிதான் தேறும் ;

....... ....... ....... ....... .......

ஒருபடியால் ஊருக்கெல்லாம்

படியளக்கும் கோனார் ;

உலகத்துக்கே படியளப்பார்

ஒருபடிபால் கொண்டு ;

....... ....... ....... ....... .......

உலகநாதக் கோனார்வீட்டில்

ஊறுகின்ற கிணறோமூன்று!’’[291]

இவ்வாறு குழந்தைகளுக்கு மகிழ்ச்சி அளிக்கும் பல நகைச்சுவை நிகழ்ச்சிகளும் கற்பனைகளும் குழந்தைப் பாடல்களின் பாடுபொருளாயின.

**2.2.16. பயன்படும் பொருட்கள்:**

நம் வாழ்வில் அன்றாடம் பயன்படும் பொருட்கள் பல. அவற்றைக் குழந்தைகட்கு அறிமுகம் செய்யவும் பாடி மகிழவும் ஏற்ற வகையில் பாடலாக்கித் தந்துள்ளனர் கவிஞர்கள்.

**பேனா:**

‘‘பேனா! உனது பெருமையெலாம்

பேசுவ தென்பதும் எளிதாமோ!

எண்ணம் எல்லாம் எழுத்தாக்கும்

இயல்பினை உடைய பேனாவே

மண்ணில் நல்லோர் கையுற்று

வழிவழி நன்மை புரிவாயே’’.[292]

**புத்தகம்:**

*பாடப் புத்தகங்களைப் பார்த்துப் பழகிய குழந்தைகளுக்குப் பிற புத்தகங்களை அறிமுகப்படுத்த வேண்டும்.*

''சின்னச் சின்ன புத்தகம்
சிறுவர் படிக்கும் புத்தகம்
....... ....... ....... ....... .......
படங்கள் நிறைந்த புத்தகம்
பாடல் நிறைந்த புத்தகம்.''[293]

''புத்தகம் இதோ
புத்தகம் இதோ
நித்தம் நித்தம் உதவுகின்ற
புத்தகம் இதோ!

முத்து முத்துக் கதைகளெல்லாம்
விரும்பி நாமும் படித்திட
உத்த மர்கள் வாழ்க்கை தன்னை
உணர்ந்து நாமும் நடந்திட (புத்தகம்)''[294]

''அறிவைப் பெருக்கும் புத்தகம்
....... ....... ....... ....... .......
புத்தகத்தைப் போற்றுவோம்
புகழ்க் கொடியை ஏற்றுவோம்''.[295]

**கண்ணாடி:**

''என்னைப் போல இருக்கின்றான்
இதனுள் எப்படிப் புகுந்திட்டான்
....... ....... ....... ....... ....... .......
பட்டணம் வாங்கிய கண்ணாடி
பகல்போல் வெளுத்த கண்ணாடி
சட்டம் போட்ட கண்ணாடி
தவறினால் உடையும் கண்ணாடி''[296]

**பணம்:**

''பணமே பணமே உன்னைப் பார்த்தால்
பயமே பயமே பயமே வருகிறது.
....... ....... ....... ....... ....... .......
நாணயம் என்ற பெயரைப் பெற்றநீ
நாணயம் கொண்டே இருந்திடு''[297]

**செய்தித்தாள்:**

''நித்தம் நித்தம் வருவேன்
நிச்சய மாய் வருவேன்
லண்டன் முதல் டில்லி
எங்கும் பாய்ந்து துள்ளி
கொண்டு வந்த செய்தி
கொடுப்பேன் நான் சுற்றி''[298]

**நாட்காட்டி:**

''நாளைக் காட்டுது நாட்காட்டி
நமக்கது நாளும் வழிகாட்டி
....... ....... ....... ....... .......
பண்டிகை நாளை அதுகாட்டும்
பிறந்த நாளை நினைவூட்டும்
முக்காலத்தை உணர்த்துகிற
தற்காலத்தின் கண்ணாடி''.[299]

**விசிறி:**

''விசிறி நல்ல விசிறி
வித விதமாய் விசிறி
எங்கள் அம்மா விசிறி
ஈச்ச ஓலை விசிறி''[300]

இப்படியே பனை ஓலை, வெட்டிவேர், அட்டை விசிறிகளைச் சொல்லி, மின் விசிறி பற்றியும் சொல்லிப் பாடலை நிறைவு செய்கிறார் கவிஞர்.

**செருப்பு:**

''காலுக்குத் துணைதான் செருப்பு—இதைக்
கேட்டால் வருவதோ சிரிப்பு
....... ....... ....... ....... ....... .......
வெய்யில் காலப் பாதையில்—அனல்
வேதனை யின்றி நடக்கவே—துணை
செயும் செருப்பினைப் போலொரு—உண்மைச்
சேவகன் காண்பது முடியாதே!''[301]

செருப்பும் குழந்தைப் பாடலின் பாடுபொருளானது.

**சுண்ணாம்பு:**

''வெள்ளை வெளேர் சுண்ணாம்பு
சுவருக்(கு) அடிக்கும் சுண்ணாம்பு
....... ....... ....... ....... ....... .......
வெற்றிலை பாக்குச் சீவலுடன்
தாத்தா போடும் சுண்ணாம்பு''.[302]

சுண்ணாம்பின் இருவேறு பயன்களை இணைத்துப்பாடி, குழந்தைக்குக் கவிஞர் அறிமுகம் செய்கிறார்.

**நாகசுரம்:**

''நாகசுரம் கேட்டதுண்டோ தம்பி—அது
நல்ல நல்ல இசைக்கருவி தம்பி!
பாகெனவே தேனெனவே பொழியும்—நம்
பழந்தமிழர் இசையதிலே வழியும்
ஆச்சா மரத்தில் அந்தக் கருவி செய்வார்''.[303]

இதுபோன்று மிருதங்கம், டமாரம், வீணை, தாளம், சுருதிப்பெட்டி போன்றவையும் குழந்தைப் பாடல்களில் பாடுபொருளாயின.

**சோளக் கொல்லை பொம்மை:**

''சோளக் கொல்லை பொம்மை பார்
சொகுசாய் நிற்கும் வித்தை பார்
காவல் காரன் போலவே
கோலை ஏந்தி நிற்குது''.[304]

அரிதாய்க் காணும் சோளக் கொல்லை பொம்மை, திருப்பதிக் குடை போன்றவையும் பாடு பொருளாயின.

**குப்பைத் தொட்டி:**

''அழுகும் முட்டை பாழ் வெங்காயம்
அழுக்குக் கூடை பழைய ஈயம்
ஒழுகும் பானை உடைந்த பளிங்கே
ஓட்டை செத்தை உண்டே இங்கே
பழங்களோடு முடையாம் குப்பை
பலவும் தாங்கும் தொட்டி தொப்பை''[305]

அன்றாடம் பயன்படுத்தும் கடிகாரம், குடை, கூடையோடு குப்பைத் தொட்டி கூட குழந்தைப் பாடலின் பொருளானது.

இவ்வாறு குழந்தைப் பாக்களில் பல்வேறு பொருட்கள், பலவிதமாகப் பாகுபடுத்தப்பட்டு குழந்தைகள் பாடி மகிழும் பாடல்களாகக் கவிஞர்கள் இயற்றியுள்ளனர்.

**2.3. வயது வேறுபாடு:**

மனிதர்களின் செயல்பாட்டிற்கும் விருப்பு வெறுப்பிற்கும் வயது ஒரு முக்கியக் காரணம். வயது வேறுபாட்டிற்கு ஏற்ப விருப்பங்கள் மாறுபடும். குழந்தைப் பருவமும் இதற்கு விதிவிலக்கல்ல.

குழந்தை உளவியலாளர் மு.அறம் என்பவர் 'குமர உள்ளம்'[306] என்ற நூலில் குழந்தை வளர்ச்சிப் பருவங்களின் எல்லைகளைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கிறார்.

| பருவம் | வயது |
|---|---|
| குழந்தைப் பருவம் | 1–3 |
| சிறுகுழந்தைப்பருவம் | 3–6 |
| முன் குழந்தைப்பருவம் | 6–8 |
| பின் குழந்தைப்பருவம் | 8–12 |

*இவ்வாசிரியரின் கருத்துப்படி ஒரு வயது முதல் பன்னிரண்டு வயது வரையிலான ஆண் பெண் இருபாலரையும் குழந்தை என்று குறிப்பிடலாம்.*

*''உளவியலாரின் பருவப்பாகுபாடு அடிப்படையில், வயது 3-6, 6-8, 8-12 என்று குழந்தையின் அறியும் திறன் கொண்டு மூன்று வகையாக அ.கி.பரந்தாமனார் பிரிக்கிறார்.*

*வயது 5-8, 8-12, 12-15 என்று குழந்தைகளின் நடத்தை கொண்டு மூன்று வகைகளாக சு.மகாதேவன் பிரிக்கிறார்.*

*வயது 3-5, 5-7, 7-9, 9-11, 11-14 என்று குழந்தையின் அறிவு வளர்ச்சியைக் கொண்டு ஐந்து வகைகளாக அழ.வள்ளியப்பா பிரிக்கிறார்''.[307]*

*வயதுப் பிரிவைப் பற்றிக் கூறும் போது 3முதல் 5 வயதுக் குழந்தைகள் படிக்கத் தெரியாதவர்களாயிருப்பர். அவர்களுக்கு ஒரு பாட்டைச் சொல்லிக் கொடுத்தால் திரும்பப் பாடுவர். அதே பாட்டை 5 முதல் 7வயதுக் குழந்தைகள் அச்சில் கண்டு பாடுவர். இருவயதுப் பிரிவினரும் விரும்பும் பாடல் ஒன்றாகவே இருக்கும்''[308]. என்கிறார் அழ.வள்ளியப்பா.*

*3 முதல் 5 வயது வரை என்பது இன்றைய பள்ளிகளின் மழலையர் வகுப்புக்குரிய வயது. 5 முதல் 7 வயது வரை மாண்டிசோரிக் கல்வி பயிலும் 2-ஆம் வகுப்பு வரையிலான குழந்தைக்குரிய பருவம். 7 வயது முதல் 9 வயது வரை 3, 4ஆம் வகுப்புப் படிக்கும் நிலை. 9 முதல் 11 வயது வரை 5, 6ஆம் வகுப்பும் 11 முதல் 14 வயது வரை 7, 8, 9ஆம் வகுப்பும் பயில்வர். பள்ளிகளில் வகுப்புகளுக்கு ஏற்றவாறு*

நிர்ணயிக்கப்பட்ட வயது எனக் கொண்டு பாடல்களைப் பிரித்துப் பார்ப்பது பொருத்தமானதாக அமையும்.

**2.3.1. 3 முதல் 5 வயது வரை:**

குழந்தை இலக்கியத்தில் மிகச்சிறப்பு வகிப்பவை இளங்குழந்தைகளின் மழலை அமுதப் பாட்டேயாகும்.

''தென்னைமரத்தில் ஏறலாம்
தேங்காயைப் பறிக்கலாம்
மாமரத்தில் ஏறலாம்
மாங்காயைப் பறிக்கலாம்
....... ....... ....... ....... ......
வாழைமரத்தில் ஏறினால்
வழக்கிவழுக்கி விழுகலாம்!''[309]

3 முதல் 5வயது வரையிலான குழந்தைகளுக்குப் பாடல் சொல்லிக் கொடுக்கும்போது அதற்கு அறிமுகமான பொருளைப் பற்றி நடிப்புடன் சொல்லித்தர வேண்டும். மரங்களில் ஏறுவதுபோல்,காய்கறிபறிப்பது போல் செய்யும் குழந்தைக்கு வாழைமரத்தில் ஏறி, வழுக்கி விழுவது போன்ற செய்கையில் மகிழ்ச்சியும் சிரிப்பும் ஏற்படுவது இயல்பு.

மேலும்,

''அம்மா முகத்தைப் பார்ப்பதற்கு
அடடா எனக்குக் கண்ணிரண்டு!
அம்மா அழைத்தால் கேட்பதற்கு
அடடா எனக்குக் காதிரண்டு!''[310]

என்று இந்த வயதில், அதிக நேரம் அம்மாவுடன் இருக்கும் குழந்தை உறுப்புகள் அனைத்தும் அம்மாவுக்காக என்பதுபோல் பாடும் பாடல் இது.

''பள்ளிக்குப் போவேன்
பாடம் படிப்பேன்!

துள்ளிக் குதிப்பேன்;

துணிவாய் இருப்பேன்!''[311]

'பள்ளிக்குப் போவேன்' என்ற பாடல் பள்ளி செல்லும் வயதான மூன்று வயதில், குழந்தை மகிழ்வோடு பாடி, பள்ளிக்குச் செல்ல ஏற்ற பாடலாக அமைந்துள்ளது.

''குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பாவே குழந்தைப் பாடல்கள் எப்படி அமைந்தால் சிறப்புறும் என்பதை, 'ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு ஏற்ற பாட்டு எட்டுவரி, பத்துவரிகளுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும். கூடுமானவரை ஒவ்வொரு வரியோடு ஒரு வாக்கியம் முடிந்துவிட வேண்டும். நாலு வரி, எட்டு வரிகளுக்கு ஒரு வாக்கியம் இருந்தால் மூச்சுப் பிடித்துப் பாடவும் நினைவில் வைத்துக் கொள்ளவும் குழந்தைகளால் இயலாது.

பாட்டு வேடிக்கையாக இருந்தால் நன்கு சுவைத்துப் பாடுகிறார்கள். தெரிந்த ஒரு பொருளைப் பற்றி, எளிய சொல்லிலே, இனிய சந்தத்திலே பாடினால் எளிதில் பதித்துக் கொண்டு விடுகிறார்கள். முதலில் வந்த சொற்றொடர்களே மீண்டும் பல்லவி போல் வந்தால் அவர்கள் குதூகலம் அதிகமாகிறது.''[312] என்கிறார்.

**2.3.2. 5 முதல் 7 வயது வரை:**

''உளவியல் நூலார் குழந்தையின் உள்ள வளர்ச்சி பற்றி, 8 வயது வரை காட்சியும் விளையாட்டும் இடம்பெறும்''[313] என்கின்றனர். பார்க்கும் பொருட்களைப்பற்றித் தெரிந்து கொள்வதிலும், போலச் செய்தலிலும் விளையாட்டிலும் ஈடுபாடுள்ள இந்த வயதுக் குழந்தைகளுக்கு ஏற்ற பாடல்கள் சிலவற்றைக் காணலாம்.

''அப்பாவைப் போல் நானானால்

ஆயிரம் ரூபாய் சேர்த்திடுவேன்.

அப்பாவைப்போல் நானானால்

அழகாய் வீடு கட்டிடுவேன்''[314]

5 முதல் 7 வயது வரையிலான குழந்தைகளிடம் போலச் செய்தல் மிகுந்திருக்கும். அம்மா, அப்பா, ஆசிரியராகத் தன்னைக் கற்பனை

செய்து விளையாடும். அத்தகைய குழந்தைகள் அப்பாவைப் போல் ஆனதும் செய்யக் கூடியவற்றைப் பட்டியலிடும் பாடலாக இது அமைந்துள்ளது.

''இரண்டு காதுகள் நமக்குண்டு—நாம்
என்றும் நல்லன கேட்பதற்கே
இரண்டு கண்கள் நமக்குண்டு—நாம்
இயற்கையின் அழகைக் காண்பதற்கே''[315]

கவிஞர் ஐந்து உறுப்புக்களின் பயன்களையும் தெரிவிக்கும் வகையில் எழுதியுள்ளார். இப்பருவம் நம்மைச் சுற்றியுள்ள பொருட்கள் பற்றித் தெரிந்து கொள்ளும் பருவம்.

''மணல் வீடு கட்டுவோம்
மாக் கோலம் போடுவோம்.
பந்தாட் டம்நாம் ஆடிடுவோம்.
பாடிப் பாடி ஆடிடுவோம்
ஊஞ்சல் ஆட்டம் ஆடிடுவோம்
ஊக்க மாய் விளையாடிடுவோம்''.[316]

விளையாட்டில் ஆர்வம் கொள்ளும் இவ்வயதுக் குழந்தைகளுக்குப் பல்வேறு விளையாட்டுக்களைப் பாடலாகத் தந்துள்ளார் கவிஞர்.

''ஆறாம் பிராயத்துக்குள் குழந்தை வசிக்கும் உலகம் அவனுடைய தொட்டிலுக்கு வெகு அப்பால் விரிவடைகிறது...... பரந்த உலகிலுள்ள மக்களை அறிவதில் ஒருவகை விரிவு தோன்றுகிறது என்னும் ஆர்தர்.டி.ஜெர்சில்ட்டின் உளவியல் கருத்துப்படி, குழந்தையின் வயதிற்கும் மனவளர்ச்சிக்கும் ஏற்ற படிநிலை அமைப்பினை மனதிற் கொண்டு கவிஞர்கள் உலகினைச் சின்னஞ்சிறு உள்ளத்திற்கு அறிமுகப்படுத்துகின்றனர்.''[317]

**2.3.3. 7 வயது முதல் 9 வயது வரை:**

இந்த வயதுக் குழந்தைகள், பல உண்மைகளையும் மாறுபட்ட செயல்களையும் விளைவுகளையும் அறிந்து கொள்ளும் நிலையில்

இருப்பவர்கள். அவர்களுக்கு ஏற்ற பாடல்களைக் கவிஞர்கள் வழங்கியுள்ளனர்.

''பாலுக் குள்ளே
வெண்ணெய் உண்டாம்
உண்மை
பழத்துக் குள்ளே
கொட்டை உண்டாம்
உண்மை
....... ....... ....... .......
படிப்புக் குள்ளே
அறிவு உண்டாம்
உண்மை
அறிவுக் குள்ளே
புதுமை உண்டாம்
உண்மை''[318]

இந்தப் பாடல் குழந்தைகளுக்குப் பிடித்த பால், பழம் எனத் தொடங்கி, படிப்பு, அறிவு எனப் பலவற்றைப் பற்றிய உண்மையைக் கூறுகிறது.

''கண்ணன் தினமும் காலையில்
கண்வி ழித்துக் கொள்ளுவான்
அன்று நடந்த பாடத்தை
அன்றே படித்துக் கொள்ளுவான்
....... ....... ....... ....... ....... .......
பொன்னன் விடியற் காலையில்
போர்த்திக் கொண்டு தூங்குவான்!
அன்று நடந்த பாடத்தை
அவன் படிப்ப தில்லையே!
....... ....... ....... ....... ....... .......
கண்ணன் நல்லொ ழுக்கமே
கற்று மேன்மை பெற்றனன்!
பொன்னன் தீய ஒழுக்கமே
பெற்றுத் தாழ்ந்து போயினன்!''[319]

*என்று உயர்வு தாழ்விற்கான காரணம் பாடல் வழி கவிஞர்கள் சொல்லுகின்றனர்.*

''மண்ணில் பொம்மை செய்யவே
மணியும் அதிகம் ஆகுமே!
கல்லில் போட்டு உடைத்திடக்
காலந் தேவை இல்லையே!
....... ....... ....... ....... .......
நல்ல பெயரைப் பெற்றிட
நாட்கள் மிகவும் ஆகுமே!
பொல்லா தவனாய் ஆகிடப்
போதும் சிறிது காலமே!''[320]

*நல்ல பெயரெடுக்க நாட்கள் அதிகமானாலும் அதுவே சிறப்பு என்பதைக் குழந்தைகள் உணர வேண்டிய வயது இது. எனவே கவிஞர்கள் இத்தகைய பாடல்களைத் தந்தனர்.*

''பேசு கிளியே பேசு!
பிள்ளை மொழிபோல் பேசு!
வீசு காற்றே வீசு!
விசிறி போல வீசு!
....... ....... ....... .......
செய்க முயற்சி செய்க!
தேனீப் போல செய்க!''[321]

*கிளி பேச வேண்டும்; காற்று வீச வேண்டும்; குழந்தை முயல வேண்டும். என்பதாக 7 முதல் 9 வயது வரையிலான குழந்தைக்குக் கவிஞர் சொல்கிறார்.*

**2.3.4. 9 முதல் 11 வயது வரை:**

*ஒற்றுமை உணர்வு, குற்றங்களை அறிதல், சிந்தனைத் தூண்டல், விளையாட்டு என 9 முதல் 11 வயது வரையிலான குழந்தைகளின் விருப்பத்தை உணர்ந்து கவிஞர்கள் பல பாடல்கள் தந்துள்ளனர்.*

''எத்தனை பட்டைகள் வயிரத்தில்
எனினும் வயிரம் ஒரு பொருளே
எத்தனை சாதிகள் இந்நாட்டில்
எனினும் இந்தியர் இந்தியரே!''[322]

என்று நாம் இந்தியர் நமக்குள்ளே சாதிகள் பல இருந்தாலும் வேறுபாடில்லை என்பதை உணர்த்துகிறார்.

நல்லனவற்றைச் சொல்லும் போது தீயவற்றையும், குற்றம் எவை எனவும் குழந்தைக்குச் சொல்ல வேண்டும். அதற்குரிய வயது 9 முதல் 11 வரை எனலாம்.

''அரிசியிலே கல்கலந்தால் குற்றம்
ஆவின்பால் நீர்கலந்தால் குற்றம்
....... ....... ....... ....... ....... .......
செழுந்தமிழில் பிறசொல்லைக் கலந்தால்
செழுமைவரும் என்பதென்ன கொடுமை
கலப்படத்தால் உடலழியும் என்றால்
கன்னித்தமிழ் நலனழியும் அன்றோ?''[323]

என்று கலப்படத்தால் அழிவு உண்டாகும் என்பதனைத் தெளிவு படுத்துகிறார்.

இன்று குழந்தைகளின் விரலுக்கு வலுச் சேர்க்க களிமண் பிசையப் பயிற்சி தருகின்றனர். அந்தக் காலத்தில் குழந்தைகளின் எண்ணத்திற்கு வண்ணம் கொடுப்பது போல் களிமண்ணால் அழகிய பொம்மை செய்வார்கள். 9 முதல் 11 வயதுக் குழந்தைகளுக்கு ஏற்ற பொழுது போக்கு இது.

''பொம்மை செய்யலாம்—களிமண்
பொம்மை செய்யலாம்!
செம்மையாகப் பிசைந் தெடுத்துத்
தேவையான உருவம் கொடுத்து
மாங்காய் செய்யலாம்—ஒரு
தேங்காய் செய்யலாம்.

....... ....... ....... ....... .......

கொக்கு செய்யலாம்—மயிலும்

கூடச் செய்யலாம்!''[324]

களிமண்ணில் கைவண்ணம் காட்டும் குழந்தைக்கு ஏற்ற பாடல் இது.

''கொள்ளும் புல்லும் தின்றி டாத

குதிரை வேண்டுமோ?

கோபத் தோடு கனைத் திடாத

குதிரை வேண்டுமோ?

....... ....... ....... ....... .......

ஆகா மரத்தினால் செய்த

குதிரை தானது!''[325]

இப்பாடல் குதிரையின் இயல்புக்கு மாறான செய்தியைக் கூறி, குழந்தைகளின் சிந்தனையைத் தூண்டி விடை கூறும் முறையில் அமைந்துள்ளது.

**2.3.5. 11 முதல் 14 வயது வரை:**

குழந்தைப் பருவத்தில் சற்று அதிகமாய், அறிவு பூர்வமாய்ச் சிந்திக்கத் தொடங்கும் வயது 11 எனலாம். ஏன்? எதற்கு? எப்படி? என்று 5 வயது முதலே கேட்கத் துவங்கினாலும் மாறுபட்ட கோணத்தில் வினா எழுப்பும் பருவம் இது. அதற்கேற்ற வகையிலும் கவிஞர்கள் பாடல் தந்தனர்.

''இந்த மரம் ஏது?

என்று எண்ணிப் பார்த்தேன்.

இதற்கு வித்து உண்டு

விதை மரமாய் வளரும்.

என்று ஒருவன் சொன்னான்!

உடனே எண்ணிப் பார்த்தேன்.

அந்த வித்து ஏது?

அதற்கு மரமே வேண்டும்

வித்து முன்னே என்பதா?

மரம் முன்னே என்பதா;

இறைவ னுக்கே விட்டேன்!''[326]

அடுத்து ஒரு பாடல்,

''கிளிக்குப் பசுமை கொடுத்தவர் யார்?

காக்கைக் கருமை கொடுத்தவர் யார்?

....... ....... ....... ....... ....... .......

சூடும் குளிரும் தந்தவர் யார்?

சூரிய சந்திரர் தந்தவர் யார்?

அவர்தாம் நம்மையும் படைத்தவராம்

அவரைப் போற்றி வழிபடுவோம்''.[327]

இப்படி வினாக்களை எழுப்பி எல்லாம் வல்ல இறைவனே அனைத்திற்கும் காரணம் என்று இறை நம்பிக்கையூட்டும் பாடல்களாக அமைந்துள்ளன. மேலும் இதுபோன்று அறிவு பூர்வமாகச் சிந்திக்க வேண்டும்; வினா எழுப்ப வேண்டும் என்ற எண்ணத்தைக் குழந்தைக்கு ஏற்படுத்தும் பாடலாக அமைந்துள்ளது.

''அயர்ச்சியினைத் தவிர்த்துவிடு

அறைகின்றான் வள்ளுவனும்

முயற்சியினை வளர்ப்பதுதான்

முழுமனிதன் கடமை என்பேன்!

ஊழ்வினையே என்றுசும்மா

உட்கார்ந்து இருந்துவிட்டால்

தாழ்வினைதான் தரித்திரந்தான்

தப்பாது வறுமைவரும்''.[328]

அயர்ச்சி, ஊழ்வினை, தாழ்வினை போன்ற சொற்களை அறிந்த 14 வயதினருக்கு ஏற்ற பாடல் இது. மேலும் கதைப்பாடல், பாடல் பட்டிமன்றம், புதிர்ப்பாடல், வினாடி வினாப் பாடல், விடுகதைப் பாடல் போன்றவையும் 11 முதல் 14 வயது வரையிலான குழந்தைகளுக்கு ஏற்றதாக அமையும்.

''வீட்டைக் காப்பேன் பூட்டல்ல
வேட்டை செல்வேன் ராஜாவோ?
....... ....... ....... ....... ....... .......
இரவும் பகலும் உழைப்பேனே
என்னை யாரென் றறியீரோ?''[329]

பாடல் முழுவதும் படித்த குழந்தை 'நாய்' என்று புதிருக்கான விடையைக் கூறிவிடும்.

''காந்தித்தாத்தா காந்தித்தாத்தா என்ன சொன்னாரு?
நமதுகடமை நாமே செய்தல் நல்லதென்றாரு!
நேருமாமா நேருமாமா என்ன சொன்னாரு?
நேர்மையான வாழ்வுதானே உயருமின்னாரு!''[330]

**தாய்:**

''துள்ளிக் குதிக்கும் கன்றுடனே
தோட்டம் தன்னில் மேய்ந்தஒரு
வெள்ளைப் பசுமேல் ஒருகவிதை
விரும்பிப் பாடிய கவிஞர் யார்?''

**குழந்தை:**

''அறிவேன் அம்மா நானறிவேன்.
அவரே கவிமணி தாத்தாவாம்!''[331]

இவ்வாறு வினாவுக்கு விடைகூறும் வகையில் அமைந்த பாடல் 11 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு மகிழ்ச்சி தரும். கதைப் பாடல்கள் தனிநூலாகவோ அல்லது கவிதைத் தொகுப்பின் ஒரு பகுதியாகவோ அமைந்து குழந்தைகள் பாடி மகிழும் வகையில் உள்ளன. கவிதைப்பட்டிமன்றமாக அமைந்த பாடல்களும் உள்ளன. சான்றுக்கு மா.கண்ணப்பன் இயற்றிய 'எது சிறந்தது இட்லியா? தோசையா? காபியா?'[332] என்பதைக் கூறலாம். விழாக்களில் வரவேற்பைக் கவிதையாக வாசிக்க ஏற்ற வகையில் பு.அ.முத்துக்கிருஷ்ணன் எழுதியுள்ளார்.[333] இவையனைத்தும் 11 முதல் 14 வயது வரையிலான குழந்தைகளுக்கு ஏற்றவையாக உள்ளன.

வயதுக்கேற்ற உடை, வயதுக்கேற்ற உணவு, வயதுக்கேற்ற விருப்பங்கள் இருப்பது போல வயதுக்கேற்ற குழந்தைக் கவிதைகள் அவசியம்.

''குழந்தைப் பாடல்களைப் பொருத்தவரை வயதுப் பிரிவு வகுப்பது கடினம். ஒரே வயதுக் குழந்தைகளிலே கூட மனநிலை பலவகை''.[334] என்று தம்பி சீனிவாசன் கூறுகிறார்.

எனினும் இந்த வயதுப் பிரிவுக்கேற்ற கவிதை விருப்பம் பெரும்பாலும் ஒத்திருப்பதைக் காணலாம்.

### 2.4. பால் வேறுபாடு:

சங்க இலக்கியங்களில் ஆடூஉ, மகடூஉ என்பதாகச் செய்யுட்களில் பால்வேறுபாடுகள் அமைந்துள்ளன. மேலும் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், பாணன், புலவர் போன்றோர் கூற்றாக அமைந்த பாடல்களும் பால் வேறுபாட்டைக் கூறுவதாக உள்ளன.

குழந்தை இலக்கியத்திலும் இத்தகைய பால் வேறுபாட்டைச் சில பாடல்களில் காணலாம். அழைத்துப் பாடுவதிலும், குழந்தைகள் பாடும் முறையிலும், குழந்தைகளைப் பற்றி பாடுவதிலும் ஆண்,பெண் குழந்தைகள் வேறுபாட்டுடன் கூடிய பாடல்கள் உள்ளன.

#### 2.4.1. அழைத்துப் பாடுதல்:

**பெண்குழந்தை:**

பாப்பா பாட்டில் சொல்லப்பட்ட கருத்துக்கள் இருபால் குழந்தைகளுக்கும் உரியன என்றாலும் அது பாரதியார் தன் மகளுக்காகப் பாடியது. அவர் பெண்குழந்தையை மனதில் வைத்துத்தான் பாடியுள்ளார். 'பாப்பா' என்ற சொல்லாட்சியே பெண் குழந்தையைக் குறிப்பது.

> ''ஓடி விளையாடு பாப்பா—நீ
>
> ஒய்ந்திருக்க லாகாது பாப்பா
>
> ....... ....... ....... ....... ....... .......
>
> சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே— அதைத்

தொழுது படித்திடடி பாப்பா.
செல்வம் நிறைந்த இந்து ஸ்தானம் –அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா''.[335]

படித்திடடி, புகழ்ந்திடடி என்ற சொல்லாட்சி பெண் குழந்தைகளை முன்னிலைப்படுத்திப் பாடப்பட்டது என்பதைத் தெரிவிக்கிறது.

''பட்டு, இங்கே பாரடி
பலவிதத்தில் மலர்களை
சிட்டுப் போல மலரெலாம்
சிரித்த ழைக்கப் பாரடி''.[336]

இப்பாடலிலும் 'பாரடி' என்பது பெண்குழந்தையிடம் கூறும் செய்தியாக உள்ளதை அறியலாம்.

**ஆண்குழந்தை:**

''தூய்மை சேரடா தம்பி–என்
சொல்லை நீபெரிதும் நம்பித்
தூய்மை சேரடா தம்பி''.[337]

''மலையை நிமிர்ந்து பார்தம்பி!
மலைப்பைப் போக்கிப் பார்தம்பி!
நிலையாய் இருக்கும் மலைதம்பி!
நீண்டு வளைந்த மலைதம்பி!''[338]

மேற்கண்ட பாடல்களில் 'தம்பி' என்ற சொல் ஆண் குழந்தையை அழைத்துப் பாடுவதைக் காட்டுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த அதிராம்பட்டினத்தைச் சேர்ந்த முகம்மது ஊவஸ் நைனாப் பிள்ளை என்பவர் இயற்றிய நூல் 'நேர்வழிப் பிரகாசம்'. அந்நூலில்,

''பாலகரே; பாலகரே; பயன் தரும் வேளையிலே
கால நேரத்தோட கற்றுக் கொள்வீர் முக்கியமாய்

புத்திரியே புத்திரியே பொருத்தமுள்ள புத்திரியே

பொருத்தமுடன் சொல்லைப் பொருத்திக் கொள்வாய் புத்திரியே''.[339]

என்று ஆண், பெண் குழந்தைகளை அழைத்துப் பாடியுள்ளார்.

**குழந்தைகள் பாடும் முறையில் ஆண் பெண் வேறுபாடு:**

**பெண்:**

''ராதா ! ராதா ! உன் தோட்டத்தில்
என்ன வளர்க்கிறாய்?
நல்ல வெள்ளரிக் கொடியும் ரோஜாப்
பூவும் வளர்க்கிறேன்!''[340]

ராதா என்ற சிறுமியிடம் கேட்கப்பட்ட வினாவிற்கு அப்பெண் குழந்தை கூறிய விடையாக இப்பாடல் அமைந்துள்ளது.

**ஆண்:**

''கிட்டு: அக்கா இங்கே பாரு!
ஆகா என்னைப் பாரு–புதுச்
சொக்கா நிஜார் போட்டிருக்கேன்.
ஜோரா யிருக்கா பாரு''.[341]

கிட்டு என்ற சிறுவன் பாடும்பாடல் இது. இதில் நிஜார், சொக்காய் என்பவற்றைக் கொண்டு இது ஆண்குழந்தை பாடும்பாடல் என அறியலாம்.

**2.4.2. குழந்தைகளைப் பற்றிப் பாடுகையில் பால் வேறுபாடு:**

பாடல்களில் சில ஆண்குழந்தை பற்றியனவாகவும், சில பெண் குழந்தை பற்றியனவாகவும் இருக்கின்றன.

**பெண்:**

கவிமணியின் ''செல்வமும் சிறுமையும்'' என்ற பாடலில் செல்வச் சிறுமியர் களிப்பு, ஏழைச் சிறுமியர் மனப்புழுக்கம் என்று உட்தலைப்பிட்டு பாடல் இயற்றியுள்ளார்.

''காலத்துக் கேற்ற உடையணிவோம்—வாசம்

கட்டிய சந்தனம் பூசிடுவோம்.

கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுத்து—மலர்

கூந்தலிற் சூட்டி அழகு செய்வோம்

....... ....... ....... ....... ....... .......

ஈரொடு பேனுக்கு இடமாச்சு—கூந்தல்

ஈந்தஞ் செடியது போலாச்சு;

வாரி முடிப்பதும் இல்லை, அம்மா—எண்ணெய்

மாதம் மூன்றாக அறியாதம்மா''.[342]

இது பெண்குழந்தை பற்றிய பாடலாக அமைந்துள்ளது.

**ஆண்:**

''எங்கள் வீட்டுத் தம்பி;

எழுந்து நடக்கும் தம்பி;

....... ....... ....... .......

குழலின் நாதம் போலும்;

குழையும் மழலைத் தம்பி;

அழகு மிக்க தம்பி;

அசைந்து சிரிக்கும் தம்பி''[343]

இப்பாடல் ஆண் குழந்தையான தம்பி குறித்துப் பாடுவதாக அமைந்துள்ளது.

### 2.4.3. குழந்தை விளையாட்டில் ஆண் பெண் வேறுபாடு:

பலவகை விளையாட்டுக்களைக் குழந்தைகள் பால் வேறுபாடின்றி விளையாடுவார்கள், என்றாலும் பிள்ளைத் தமிழில் இறுதி மூன்று பருவங்களில் ஆண், பெண் குழந்தைகளின் விளையாட்டுக்களை வேறுபடுத்திப் பாடி இருப்பதைக் காணலாம். பெண் குழந்தைகட்கு ஊசல், அம்மானை, நீராடல் எனவும் , ஆண் குழந்தைகட்குச் சிற்றில், சிறுபறை, சிறுதேர் எனவும் வேறுபடுத்திப் பாடியுள்ளனர். குழந்தைகள் பால் வேறுபாட்டிற்கேற்ப விளையாடி மகிழ்கின்றனர். இதனைக் கவிஞர்கள் குழந்தைப் பாடலிலும் பதிவு செய்துள்ளனர்.

**பெண்:**

‘‘வீசி வீசி ஆடுவோம்;
வேக மாக ஆடுவோம்;
தங்கை! நீயும் நானும் ஊஞ்சல்
தள்ளி விட்டு ஆடுவோம்!’’[344]

**ஆண்:**

‘‘போகுது பார் எம் வண்டி
கந்தன் தான் இங்கு ரயில்எஞ்சின்
கண்ணன் தான்இங்கு காவல் வண்டி’’[345]

இவ்வாறு குழந்தைகளின் விளையாட்டு, பால் வேறுபாட்டிற்கு ஏற்ப மாறுபடுகிறது.

**2.4.4. விருப்பங்களிலும் வேறுபாடு:**

**பெண்:**

‘‘ஆசை ஆசை ஆசையாம்
ஆடிப் பாட ஆசையாம்
கோயில் செல்ல ஆசையாம்
கோலம் போட ஆசையாம்’’[346]

ஆடுதல், பாடுதல், கோயில் செல்லல் இருபாலருக்கும் பொதுவானது எனினும் கோலம் போடுதல் பெண் குழந்தைகளுக்குரியது என்பதால், இது பெண் குழந்தையின் விருப்பத்தை வெளிப்படுத்தும் பாடலாக உள்ளது.

**ஆண்:**

போலச் செய்தல் குழந்தைகளின் பண்பு. அதிலும் குழந்தை தான் காணும் அனைவரிடமும் தன்னைக் கவர்ந்த பண்பினைப் பின்பற்ற விருப்பம் கொள்ளும்.

‘‘அண்ணன் போல வயதானால்
அலுவல் செய்வேன்; பொருள்சேர்ப்பேன்!

மாமன் போல வயதானால்
வயலை உழுது நெல்லறுப்பேன்!
அப்பாவைப் போல் வயதானால்
அள்ளி அள்ளி வழங்கிடுவேன்
தாத்தாவைப் போல் வயதானால்
தமிழுக் கென்றே உழைப்பேனே!''[347]

இவ்வாறு ஆண், பெண் குழந்தைகளுக்கான பாடல்கள் குழந்தை இலக்கியத்தில் இடம்பெற காணலாம்.

இவ்வாறு குழந்தை இலக்கியப் பொருள் பாகுபாடு பரந்து விரிந்ததாக அமைந்துள்ளது.

**தொகுப்புரை:**

- நினைவாற்றல் மிக்க குழந்தைகளிடம் அறிவும் பண்பும் வளரப் பெற்றோரும் ஆசிரியரும் ஆவன செய்ய வேண்டும். அதற்குத் துணை நிற்பன, குழந்தைகளைக் கவரும் பாடல்கள்.
- குழந்தைகளுக்குக் கவிதை இயற்றுவது எளிதல்ல. கூற வேண்டியவற்றைத் தெளிவாகவும் எளிமையாகவும் இனிமையாகவும் படைக்க வேண்டும்.
- குழந்தைப் பாடல்களின் பாடுபொருள் விண்ணுக்கும் மண்ணுக்கும் இடைப்பட்ட அனைத்துமாகும்.
- பொருள் பாகுபாடு, வயது வேறுபாடு மற்றும் பால்வேறுபாடு என்ற நிலையில் பாடுபொருட்களைப் பிரித்தறிகிறோம்.
- பொருள் பாகுபாடு என்பதில் இயற்கை, உயிர், பயிர், பிறவகை எனப் பகுத்துக் காண்கிறோம். உயிர் என்பதில் மனிதர் தவிர்த்த ஏனைய உயிரினங்களும், பயிர் என்பதில் புல் தொடங்கி மரம் வரை அதன் அரும்பு, மலர், காய், கனி, இலை போன்றவையும், பிறவகையில் சூரிய, சந்திரர், காற்று, நீர் போன்றனவும் அறியப்படுகின்றன.

❖ மனிதன், மனித உறவுகள், சான்றோர், தொழில் அடிப்படை பிரிவுகள், தெய்வங்கள் பற்றிய பாடல்களும் சான்றுடன் சுட்டப்பட்டுள்ளன.

❖ விழாக்கள், அறிவியல் சாதனங்கள், அன்றாடம் பயன்படும் பொருட்கள், ஒழுக்கம், பழக்க வழக்கம், விளையாட்டு, கற்பித்தல், உணவு வகைகள், நகைச்சுவைக் கருத்தமைந்த பாடல்கள் குழந்தைப் பாடல்களில் உள்ளமை சுட்டப்படுகின்றன.

❖ வயது வேறுபாடுக்கு ஏற்ப பாடல்கள் இயற்றப்பட்டிருப்பது சுட்டப்படுகின்றது.

❖ பால் வேறுபாட்டிற்கு ஏற்ப பாடல்கள் அமைந்திருப்பது சான்றுடன் காட்டப்படுகிறது.

# இயல் இரண்டு
# குழந்தைப் பாடல்களில் பொருள் பாகுபாடு

**சான்றெண் விளக்கம்:**


1. அழ.வள்ளியப்பா, ''வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்'' ப.114.
2. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், (தொ.ஆ)மு.சாயபு மரைக்காயர் ''பொன் மொழிகளில் குழந்தைகள்'' ப.41.
3. புலமைப்பித்தன், மேலது, ப.47.
4. ப்ளோரா எச்.வில்லியம்ஸ்,''நமது குழந்தைகள்'' ப.63
5. புத்தனேரி ரா.சுப்பிரமணியம், ''பாவேந்தர் நெஞ்சில் குழந்தைகள்'' ப.51
6. பூவண்ணன்,''சிறுவர் இலக்கியச் சிறப்புகள்'' ப.32.
7. தி.ஜ.ரங்கநாதன்,''குழந்தை இலக்கிய மலர்-1961'' ப.32
8. காந்தியடிகள், (தொ.ஆ) மு.சாயபு மரைக்காயர். ''பொன்மொழிகளில் குழந்தைகள்'' ப.16
9. கி.வா.ஜகந்நாதன், ''குழந்தை உலகம்'' ப.31
10. மேலது ப.32
11. அகமதுபஷீர், ''இஸ்லாமியக் குழந்தை இலக்கியம்'', ப.43.
12. கதி. கணேசன், ''குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி'' ப.140
13. அழ. வள்ளியப்பா, ''வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்'' ப.49.
14. பூவண்ணன்,''சிறுவர் இலக்கியச் சிறப்புகள்'' ப. 39.
15. கவிமணி,''மலரும் மாலையும்'' ப.17
16. பாரதியார் ''பாரதியார் கவிதைகள்'' ப.507
17. மேலது ப.60
18. வெ.தனலக்குமி''குழந்தைப் பாடல்களில் பாடு பொருளும் பாடுநெறியும்'' ப. 291.
19. தொல்காப்பியர், ''தொல்காப்பியம்'', மரபியல்-நூற்பா-27.
20. மு.வைத்தியலிங்கம்,''தேன்குழல்'', ''வாடா கறுப்பா'' ப.18.
21. பாரதிதாசன், 'இளைஞர் இலக்கியம்', 'நாய் வளர்த்தல்' ப. 15.
22. வாணிதாசன், ''இனிக்கும் பாட்டு'' 'பூனைக்குட்டி' ப. 20, 21.
23. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'பூனையார்' ப.27
24. மு.வரதராசனார், ''சொல்லின் கதை'' ப.19.
25. பாரதியார், ''பாரதியார் கவிதைகள்'' 'பாப்பாபாட்டு' ப.266.
26. கவிமணி ''மலரும் மாலையும்'' 'பசுவும் கன்றும்' ப.66.
27. செல்லகணபதி, ''பாப்பா! பாட்டுப் பாடுவோம்!'' 'ஆட்டுக்குட்டி' பாடல்-3
28. வாணிதாசன், ''இனிக்கும் பாட்டு' 'அணில்' ப.20.21
29. செ.சு.மலரடியான்,''நிலாராணி '' 'எலியே' ப.32.
30. மு.வை.அரவிந்தன், ''சிறுவர் உலகம்'' 'கழுதை' பாடல்-17
31. வல்லநாடு ராமலிங்கம், ''மழலையர் அமுதம்'' 'குதிரை' ப.28
32. வி.நடேசன், ''மலர்மனம்'' 'குரங்குகூட்டம்' ப.15

33. கம்பதாசன், ''குழந்தைச் செல்வம்'' 'பன்றி' பாடல்-13
34. புத்தனேரி ரா.சுப்பிரமணியம் ''அம்புலிப்பாட்டுப் பாடாதே!'' 'யானை வந்தது' ப.13,14
35. அருவி (இ.பெ.-கா.கைலாசம்)''மழலை அமுதம்'' 'சிங்கம்' பாடல் - 37.
36. நாரா.நாச்சியப்பன், 'பாடு பாப்பா' தலைப்புக்கு பதில் புலிபடம். பாடல்-20
37. ரா.பொன்ராசன், ''தாத்தா பாட்டு'' தலைப்பு 'ஒ' ப.17
38. செம்மங்குடி துரையரசன், ''கொஞ்சும் கிளியே கொஞ்சம் பேசு'' 'குள்ள நரியார்' - ப.31.
39. சி.இரத்தின வேலனார் ''குழந்தைக் கவியமுது'' 'மான்' ப.27
40. பொதட்டூர் புவியரசன், ''அறிவை நோக்கி மழலைப்பூக்கள்'' 'வெள்ளைமுயல்' ப.25
41. மின்னூர் சீனிவாசன், ''கண்மணிப் பாட்டு'' 'நீர்யானை' ப.36.
42. மதியரசு,''மழலைச் சோலை'' 'ஆடும் மயில்' ப.51.
43. வ.கோவிந்தராசன், ''பாடுங்குயில்'' 'குயிலே கூறு' ப-20,21
44. நாரா.நாச்சியப்பன் ''மழலைச் சோலை'' 'புறாவேண்டும்' பாடல்-9
45. அ.அகமது பஷீர், ''சிரி.குழந்தாய் சிரி'' 'தூக்கணங்குருவி' ப.39
46. வாணிதாசன், '',இனிக்கும் பாட்டு'' 'சிட்டு' ப.15.
47. வி.நடேசன், ''மலர் மணம்'' 'கிளி' ப.39
48. வல்லநாடு ராமலிங்கம் ''மழலையர் அமுதம்'' 'ஆந்தை' ப.11
49. இல. மகிழ்ச்சிக் கண்ணன்,''எங்கள் கையிலே'' 'நாரையக்கா' பாடல்-5
50. சொ.அடைக்கலம்,''பாலர் மலர்கள்'' 'குள்ள வாத்தே' ப.27
51. கி.வேணு கோபால்,''இளையோருக்கு இனியவை நூறு'' 'மரங்கொத்தி' ப.49.
52. தணிகை உலகநாதன், ''பூவின் விருந்து' 'வண்ணத்துப்பூச்சி' ப.3
53. ரா.பொன்ராசன் ''தாத்தா பாட்டு'' 'வாழ்வருள்' ப.40
54. புத்தனேரி ரா.சுப்பிரமணியம்,''அம்புலிப் பாட்டுப் பாடாதே'' 'கொசு' ப.15
55. அ.கி.பரந்தாமனார், ''எங்கள் தோட்டம்' 'சிற்றெறும்பே' ப.16
56. எஸ்.சாந்தலஷ்மி, ''மழலை இன்பம்'' 'சின்ன வண்டு' ப.56
57. புத்தனேரி ரா.சுப்பிரமணியம், ''அம்புலிப் பாட்டுப்பாடாதே'' 'மூட்டைப்பூச்சி' ப.16
58. தணிகை உலகநாதன் ''பூவின் விருந்து'' 'செல்லுக்கு ஒரு சொல், ப.4
59. தமிழ்முடி, ''மழலை மொழி'' 'தறி இல்லாத நெசவு', ப.57
60. மு.வை.அரவிந்தன், ''அரவிந்தன் கவிதைகள்'' 'மின்மினிகள்' ப.52
61. புவனை கலைச் செழியன்,''பாட்டுப் புதையல்'' 'மரவட்டை' ப.61.
62. வே.இரா.சிவஞான வள்ளல், ''குறளும் குழந்தைக் கவிதையும்'' 'மண்புழு' ப.19, 20
63. கருமலைப் பழம் நீ, ''காற்றாடி'' 'பச்சோந்தி' ப.37
64. சுப்ர.பாலன், ''மத்தாப்பூ'' 'தவளையார்' ப.35.
65. உடுமலை இளங்கண்ணன், ''வைகறை அரும்புகள்'' 'முதலை' ப.67
66. இல.மகிழ்ச்சிக் கண்ணன் ''எங்கள் கையிலே'' நண்டுமாமா' ப.7
67. பங்கசதேவன் ''பாட்டுச் சோலை'' 'நடை' ப.20
68. சி.நடராஜன் '''பாட்டுப் பாடவா''(தலைப்பில்லை) ப.10
69. பூவை அமுதன் ''நிலாப் படகு'' 'வாழை' ப.27
70. புதுவை சந்திரஹரி ''பாட்டுப் பூக்கள்'' 'ஆலமரம்' ப.71.

71. இராஜம்மாள் பி.தேவதாஸ் ''பாட்டுப் பாடவா'' 'பப்பாளி' ப.27
72. தமிழ் ஒளி. ''அந்தி நிலா பார்க்கவா'' 'தென்னந்தோப்பு' ப.22
73. எல்.எம்.பஹதூர், ''பூங்கா ராயா'' 'ரப்பர் மரங்கள்' ப.19
74. ரா.பொன்ராசன் ''கற்பக மலர்கள்'' 'கோடை தரும்பாடம்' ப.102,103
75. அழ.வள்ளியப்பா ''சிரிக்கும் பூக்கள்'' 'செடி வளர்ப்பேன்' ப.28
76. மு.வைத்தியலிங்கம் ''தேன்குழல்'' 'தெரிந்திடு' ப.25
77. மு.வை.அரவிந்தன் ''சிறுவர் உலகம்'' 'காளான் குடை'' ப.இல்லை பாடல்-18
78. க.சண்முகம் ''வளரும் பயிர்'' 'புல்' ப. 39.
79. கொ.மா.கோதண்டம், ''சின்ன சின்ன அரும்புகள்'' 'வீட்டுத்தோட்டம்' ப. 13.
80. வே.பிரபாகரன், ''சிறுவர் செந்தேன்'' 'மல்லிகைப்பூ' ப.22
81. தம்பி சீனிவாசன் ''சிவப்பு ரோஜாப்பூ'' ''சிவப்பு ரோஜாப்பூ'' ப.39
82. க.சண்முகம் ''வளரும் பயிர்'' 'முல்லை' ப.43
83. புத்தனேரி ரா. சுப்பிரமணியம் ''அம்புலிப்பாட்டுப்பாடாதே'' 'தாமரை' ப.6
84. மேலது 'சூரியகாந்தி' ப.1
85. எல்.எம். பஹதூர் ''பூங்கா ராயா'' ''பூங்கா ராயா' ப.1
86. வி.நடேசன் ''மலர் மணம்'' 'பூ' ப.35
87. மணி திருநாவுக்கரசர், ''முத்துக்குவியல்'' (தொ.ஆ.) ர.அ. & பூ.வ. 'பூ' ப.85
88. இராஜம்மாள் பி.தேவதாஸ், ''பாப்பா பாப்பா பாடவா'' 'பறங்கிக்காய்' ப.23
89. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'இன்பமாக உண்ணலாம்' ப.30
90. ரா.பொன்ராசன், ''தாத்தா பாட்டு'' 'காய்கள்' ப.25
91. மீனவன், ''கொஞ்சும் குழந்தை'' 'முக்கனி' ப.33.
92. வல்லநாடு ராமலிங்கம், ''மழலை அமுதம்'' 'மாம்பழம்' ப.34
93. மா.கண்ணப்பன், ''மழலை மலர்கள்'' 'நெல்லிக்கனி' ப.12.
94. வலசை ப.கணேசன், ''பாப்பா பா'' 'மாதுளை' ப.29
95. திருச்சி பாரதன், ''பூந்தோட்டம்'' 'ஆதவன்' ப.102
96. பூவண்ணன், ''குழந்தைக் கவிஞர்கள்'' ப. 51.
97. எஸ்.சாந்தலஷ்மி ''மழலை இன்பம்'' 'சந்திரசூரியர்' ப.59
98. கிருஷ்ணன் நம்பி, ''யானை என்ன யானை'' 'நீலக்குடை' ப.70,71
99. சி.நடராஜன், ''பாட்டு பாடவா' 'மேகம்' ப.13
100. அழகு பழனிச்சாமி, ''மணக்கும் மலர்கள்'' 'வருவாய் மழையே' ப.38.
101. இலக்கியன், ''இளையோர் பாடல்'' 'வானவில்' ப.28
102. அழகு பழனிச்சாமி, ''மணக்கும் மலர்கள்'' 'மலையே' ப.37.
103. இளம் பாரி, ''மலரும் மொட்டுகள்'' 'காற்று' ப.61
104. மணி, ''வாழ்வு மலர்'' 'புயல்' ப.57
105. மு.நடராசன், ''வட்ட நிலா'' 'சுனாமி'' ப.91
106. தே.ப.பெருமாள், ''சிறுவர் அமுது'' 'பனித்துளி' ப.36
107. மு.வை.அரவிந்தன், ''அரவிந்தன் கவிதைகள்'' கானல் நீர்' ப.47

108. தமிழ் ஒளி, ''அந்திநிலா பார்க்க வா'' ''ஆறு'' ப.61

109. இளம்பாரி, 'மலரும் மொட்டுக்கள்'' ''ஊருணி'' ப.59

110. கி.வேணுகோபால் ''இளையோருக்கு இனியவை நூறு'' 'எங்கள் ஊர் ஏரி' ப.75.

111. மணிமொழி, ''சிறுவர் உலகம்'' 'அருவி' ப.10

112. திருச்சி பாரதன், ''பூந்தோட்டம்'' 'கடல்' ப.98.

113. பூவண்ணன், ''பாலர்பாடல்கள்'' 'அலைகள்' ப.16

114. கருமலைப்பழம் நீ''காற்றாடி'' 'கூவம்' ப.106.

115. காசி, ''கவிச்சுவையமுது'' 'நெருப்பு' ப. 35

116. திருச்சி பாரதன், ''பூந்தோட்டம்'' 'எங்கள் குடும்பம்' ப.49

117. வாணிதாசன், ''இனிக்கும் பாடல்'' 'வணக்கம் செய்வோம்' ப.56

118. வே.இரா.சிவஞானவள்ளல், ''மாணவர்க்கு மணிப்பாடல்கள்'' 'அம்மா' ப.5

119. பூவை அமுதன், ''நிலாப்படகு'' 'தந்தையே வணக்கம்' ப.7

120. பாரதியார், 'பாரதியார் கவிதைகள்' 'கண்ணம்மா என் குழந்தை' ப.335

121. கண்ணதாசன். (தொ.ஆ) மு.சாயபு மரைக்காயர், ''பொன் மொழிகளில் குழந்தை'' ப.12.

122. சாலை இளந்திரையன், மேலது - ப.21.

123. செம்மங்குடி துரையரசன், ''கொஞ்சும் கிளியே கொஞ்சம் பேசு'', 'எங்கள் தம்பி' ப.14

124. க.சண்முகம் ''வளரும் பயிர்'' 'அண்ணன்' ப.13

125. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'தங்கையின் நடனம்' ப.123.

126. ரா.பொன்ராசன், ''தாத்தா பாட்டு'' 'அ' (தலைப்பு) ப.11

127. வே.பிரபாகரன், ''சிறுவர் செந்தேன்'' ''தாத்தா பாட்டி'' ப.31

128. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி ''பட்டணம் போகிற மாமா' ப.8

129. பாரதியார், ''பாரதியார் கவிதைகள்'' 'தமிழ்' ப.168.

130. எல்.எம்.பஹதூர்; ''பூங்கா ராயா'' 'நீதி நூல்கள்' ப.36

131. மதியரசு, ''மழலைச் சோலை'' 'சொற் கோவில் கட்டிய இளங்கோ'' ப.78.

132. பூங்கோவன் ''கூடி வாழ்வோம்'' 'பாரதியார்' ப.73

133. அ.சிவசுப்பிரமணியபிள்ளை, ''தேன்துளி'' 'கவிமணி' ப.26.

134. மீனவன், ''கொஞ்சும் குழந்தை'' 'உ.வே.சா' ப.118.

135. நாக.முத்தையா 'குழந்தைக் கவிதைகள்'' 'திரு.வி.க.' ப.70

136. நாக.முத்தையா 'குழந்தைக் கவிதைகள்'' 'மறைமலைகள் அடிகள்' ப.71.

137. சொ.அடைக்கலம், ''பாலர் மலர்கள்'' 'உங்களுக்காக ப.85

138. முத்தெழிலன், ''நல்ல தாத்தா'' 'செக்கிழுத்த தாத்தா' ப.43

139. புத்தனேரி ரா.சுப்பிரமணியம் ''அம்புலிப்பாட்டுப் பாடாதே'' 'அறிஞர் அண்ணா' ப. 42,43.

140. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் முதல் தொகுதி'' 'ராஜாஜியும் சிறுவனும்'' ப.172,173

141. வே.பிரபாகரன், ''சிறுவர் செந்தேன்'' 'காமராசர்' ப.80

142. பொதட்டூர் புவியரசன் ''அறிவைநோக்கி மழலைப்பூக்கள்'' 'விந்தையானவர்' ப.16.

143. இமயபாரதி, '' பாடுதம்பி பாடு'' 'விவேகானந்தர்' ப.17, 18

144. மணி, ''வாழ்வு மலர'' 'வினோபா' ப.15
145. காரமேடு வள்ளிமணாளன், ''பிஞ்சு நெஞ்சம்'' 'காந்தித் தாத்தா' ப.28.
146. முத்தெழிலன், ''நல்ல தாத்தா'' 'தாகூர் தாத்தா' ப.31
147. புத்தனேரி ரா.சுப்பிரமணியம் ''அம்புலிப்பாட்டுப் பாடாதே'' 'நேரு மாமா' ப.40 41
148. செ.சு.மலரடியான், ''நிலா ராணி'' 'அண்ணல் அம்பேத்கார்' ப.30
149. மூவேந்தன், ''சுடர் விளக்கு'' 'மூவேந்தர்' ப.7
150. சுத்தானந்த பாரதி, ''இந்திய சரித்திரக்கும்மி'' 'அசோகன்' ப.13
151. கொற்றவை மணாளன், ''குழந்தைப் பாடல்கள்'' 'சிவாஜி' ப.20
152. மா.கண்ணப்பன், ''மழலை மலர்கள்'' 'மாண்டிசோரி அம்மையார்' ப.24.'
153. நாரா.நாச்சியப்பன், ''சான்றோர்'' 'பெர்னாட்ஷா' ப.32.
154. மீனவன், ''கொஞ்சும் குழந்தை'' 'ஆபிரகாம் லிங்கன்' ப.109.
155. அ.கி.பரந்தாமனார், ''எங்கள் தோட்டம்'' 'இமயவெற்றி' ப.72, 73
156. கெ.பாலமுரளி, ''மழலைச் சிட்டு'' (தொ.ஆ.) பாலச்சந்திரன் ஜேகப் 'ஞாலம் போற்றும் தெரெசா' ப.38.
157. ஆதவன், ''பள்ளி மாணவர்க்குப் பயனுள்ள பாடல்'' 'யானைமுகன்' ப.49
158. அழ.வள்ளியப்பா, ''சிரிக்கும் பூக்கள்'' 'பாலமுருகன்' ப.17, 18
159. புவனை கலைச் செழியன், ''பாட்டுப்புதையல்'' 'கண்ணா வா' ப.18
160. பால.நடராஜன், ''வட்டநிலா'' 'அய்யப்பன் வணக்கம்' ப.14.
161. காசி, ''கவிச்சுவையமுது'' 'நவராத்திரி' ப.17
162. ஈழம் க.ச.கந்தசாமி ''குழந்தைக் குரல்'' 'சரசுவதி தாயே' ப.4
163. கூத்தன், ''பூமாலை'' 'புத்தர்' ப.54.
164. ஆ.ஜோசப் ஸ்டாலின், ''வசந்தகாலப்பூக்கள்'' 'கருணையால் ஆள வந்தார்' ப.23.
165. அ.அஹமதுபஷீர், ''முத்துக்குவியல்'' 'இறைவா' ப.7
166. மணி, ''வாழ்வு மலர்'' 'நபிகள் நாயகம்' ப.14
167. வலசை ப.கணேசன், ''பாப்பா பா'' 'இறைவணக்கம்' ப.13
168. செ.சு. மலரடியான், ''நிலாராணி'', 'ஆசிரியர்', ப.4.
169. அரிமதி இளம்பரிதி, ''செல்லக்கிளிகளே'' 'இராணுவவீரர்' ப.20.
170. இலக்கியன், ''இளையோர் பாடல்'' 'மருத்துவர்' ப.47.
171. எஸ்.விஜயலெஷ்மி, ''சின்னக் கண்ணன் பிறக்கிறான்'' 'தபால்காரர்' ப.17
172. காசி, ''கவிச்சுவையமுது'' 'உழவன்' ப.40
173. தமிழ்ஒளி, ''பாப்பா பாட்டு'' 'குயவன்' பாடல்-10
174. எஸ்.சாந்தலெஷ்மி, ''பாப்பா உனக்குப் பாட்டு'' 'மிட்டாய்க்காரன்' ப.20.
175. புவனை கலைச்செழியன், ''பாட்டுப்புதையல்'' 'பிச்சைக்காரன்' ப.128
176. கம்பதாசன், ''குழந்தைச்செல்வம்'' 'தீபாவளி' பாடல்-25
177. மதியரசு, ''மழலைச்சோலை'' 'பரிதி தந்த பொங்கல், ப.68.
178. ர.அய்யாசாமி (தொ.ஆ.) ர.அ. & பூவ ''முத்துகுவியல்'' 'நவராத்திரி' ப.127
179. பாலச்சந்திரன் ஜேகப், ''மழலைச்சிட்டு'' 'கிறிஸ்துமஸ் குழந்தை' ப.16.
180. செ.அன்னகாமு, ''பள்ளிப்பாமாலை'' 'மிலாடி நபி' ப.37.
181. தம்பி சீனிவாசன், ''சிவப்பு ரோஜா'' 'கோயிலிலே திருவிழா' ப.24.

182. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'சுதந்திரத்திருநாள்' ப.97

183. க.அ.பிரகாசம், ''மழலை முத்துக்கள்'' 'குடியரசு நாள்' ப.82.

184. மீனவன், ''கொஞ்சும் குழந்தை'' 'தொழிலாளர் திருநாள்' ப.102.

185. மு.வரதராசன் (தொ.ஆ.) ரா.அ.பத்மநாபன், 'பாரதியார் கவிநயம்' ப.61.

186. கொ.மா.கொதண்டம், ''சின்னச் சின்ன அரும்புகள்'' 'கூடாது' ப.30

187. தமிழ் ஒளி, ''அந்தி நிலா பார்க்க வா'' 'நன்றி காப்போம்' ப.69

188. எஸ்.சந்தானம் ''கல்வியின் உளவியல் அடிப்படைகள்'' ப.24.

189. மு.வ. ''சிறுவர் பாட்டு நூற்கோவை'' தலைப்பு இல்லை ப.14, 15

190. மா.இராசமாணிக்கனார், ''குழந்தைப் பாடல்கள்'' 'பொம்மைக்கடை' ப.இல்லை.

191. எஸ்.சாந்தலஷ்மி, ''பாப்பா உனக்கு பாட்டு'' 'ஊஞ்சல்' ப.13.

192. சொ.அடைக்கலம், ''பாலர் மலர்கள்'' 'வீதியிலே ரயில்' ப.19

193. வேலழகன்-தமிழன்பன் ''சிறுவர் சோலை'' 'பட்டம்' ப.19

194. எல்.எம்.பஹதூர், ''பூங்பா ராயா'' 'பம்பரம்' ப.31.

195. வல்லநாடு ராமலிங்கம், ''மழலையர் அமுதம்'' 'பந்து' ப.61.

196. செல்லகணபதி, ''சின்னச்சின்ன பாட்டு'' 'கிரிக்கெட் ஆட்டம்' பாடல் 2

197. எ.மு. ராஜன், ''கிராமத்துச் சிறுவர் பாடல்கள்'' 'சடுகுடு' ப. 52.

198. தே.ப.பெருமாள், ''சிறுவர் அமுது'' 'ஒடி விளையாடலாம்' ப.17,18

199. இமயபாரதி, ''பாடு தம்பி பாடு'' 'ஒலிம்பிக்' ப.15.

200. கவிமணி, ''குழந்தைச் செல்வம்'' 'சைக்கிள்' ப.44

201. மு.திருநாவுக்கரசு, ''நல்லோர் வழி செல்வோம்'' 'பேருந்து' ப.2

202. இலக்கியன், ''பாடி மகிழ்ந்திடு பாப்பா'' 'மகிழுந்து' ப.61

203. வெ.நல்லதம்பி, ''கண்ணே பாப்பா'' 'ரயில்' ப.32, 33

204. பு.ஆ.முத்துகிருஷ்ணன், ''குழந்தைப்பாக்கள்-2'' 'படகு' ப.6, 7

205. அரு.சோமசுந்தரம், ''சிறுவர்க்கு விஞ்ஞானம்'' 'கப்பல்' ப.28

206. வி.ஜி.சந்தோசம், ''சந்தோசப் பாப்பா பாட்டு'' 'விஞ்ஞானப்பறவை' ப.5

207. பு.ஆ.முத்துகிருஷ்ணன், ''குழந்தைப்பாக்கள்''-2 'வண்டிகள்' ப.8

208. சொ.அடைக்கலம்,''பாலர் மலர்கள்'' 'மின்சாரம்' ப.80

209. எல்.எம்.பஹதூர், ''பூங்பா ராயா' 'வானொலிப்பெட்டி' ப.15

210. வலசை ப.கணேசன், ''பாப்பா பா'' 'தொலைக்காட்சி' ப.36.

211. அரு.சோமசுந்தரம், ''சிறுவர்க்கு விஞ்ஞானம்'' 'தலைப்பில்லை' ப.53 படம்-குளிர்பதனப்பெட்டி

212. பெ.மலர்விழி, ''அம்புலி'' 'கணினி' ப.48.

213. ஆர்.ராஜகோபாலன், ''பாப்பா பாட்டு'' 'எந்திரமனிதன்' ப.18

214. கருமலைப்பழம்நீ, ''காற்றாடி'' 'தட்டச்சு இயந்திரம்' ப.46.

215. இளம்பாரி, ''மலரும் மொட்டுகள்'' 'அச்சு இயந்திரம்' ப.49.

216. எல்.எம். பஹதூர், ''பூங்பா ராயா'' 'தையல் இயந்திரம்' ப.32.

217. இமயபாரதி ''பாடு பாப்பா பாடு!'' 'தொலைபேசி' ப.47.

218. மீனவன், ''கொஞ்சும் குழந்தை'' 'புகைப்படப் பெட்டி' ப.52.

219. கொற்றவை மணாளன், ''குழந்தைப் பாடல்கள்' 'இராக்கெட்' ப.3

220. அரு.சோமசுந்தரம், ''சிறுவர்க்கு விஞ்ஞானம்'' 'ராடார்' ப.54.
221. அரிமதி தென்னகன், ''சின்ன சின்ன விழுதுகளே'' 'புதியன கண்டுபிடி' ப.94.
222. ஔவையார், ''கொன்றை வேந்தன்'' 'பாடல்-7'
223. வேலழகன் தமிழன்பன், ''சிறுவர் செய்யுட் சோலை'' 'தமிழ்' ப.7
224. பாரதிதாசன், ''இளைஞர் இலக்கியம்'' 'மெய்யெழுத்துக்கள்' ப.67
225. மேலது, 'உயிர்மெய்' ப.68.
226. மு.வைத்தியலிங்கம், ''தேன்குழல்'' 'எங்கு பிறக்கும்' ப.28.
227. கொ.மா.கோதண்டம், ''சின்னச்சின்ன அரும்புகள்'' 'நற்றமிழ்' ப.27
228. இலக்கியன்''இளையோர் பாடல்'' 'சங்க இலக்கியம்' ப.56.
229. வாணிதாசன், ''இனிக்கும் பாட்டு'' 'எண்கள்' ப.26.
230. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் முதல் தொகுதி'' 'தட்டும் லட்டும்' ப.18.
231. மேலது 'மொத்தம் எத்தனை' ப.232.
232. கருமலைப்பழம் நீ, ''காற்றாடி'' 'கணக்கு' ப.90.
233. கொ.மா.கோதண்டம், ''சின்னச்சின்ன அரும்புகள்'' 'கேள்வி' ப.17
234. தே.ப.பெருமாள், ''சிறுவர் அமுது'' 'நிறங்கள்' ப.55
235. ஜவஹர், ''தொடக்கப் பள்ளிக்குத் தொண்ணூறு பாடல்கள்'' 'திசைகள்' ப.12.
236. தமிழ்முடி, ''மழலைமொழி'' 'சித்திரையும் செடியும்' ப.20.
237. அ.கி.பரந்தாமனார், ''எங்கள் தோட்டம்'' 'ஆங்கில மாதங்கள்' ப.26.
238. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் முதல் தொகுதி'' 'கிழமைப்பாட்டு' ப. 31.
239. அகமது பஷீர்,''இஸ்லாமியக் குழந்தை இலக்கியம்'' 'தலைப்பில்லை' ப.27.
240. செல்ல அமுது, ''பாடல் படி பாப்பா'', 'பெயர்' ப. 25.
241. தமிழ்ஒளி, ''அந்திநிலா பார்க்கவா.'' 'உலகம்' ப. 75, 76.
242. மேலது 'தமிழ்நாடு' ப. 32.
243. சி.இரத்தினவேலனார், ''குழந்தைக் கவியமுது'' 'உலகம்' ப.41.
244. மா.இராசமாணிக்கனார், ''குழந்தைப் பாடல்கள்'' 'மேற்குத்தொடர்ச்சி மலை' ப.இல்லை.
245. வே.இரா.சிவஞான வள்ளல், ''மாணவர்க்கு மணிப்பாடல்கள்'' 'ஐவகை நிலம்' ப.15
246. சுத்தானந்த பாரதி, ''இந்திய சரித்திர கும்மி'' 'கும்பினி இந்தியா' ப.34
247. மேலது ப. 37
248. மேலது ப.41
249. அழ.வள்ளியப்பா, ''சுதந்திரம் பிறந்த கதை'' ப.இல்லை
250. வெ.நல்லதம்பி''கண்ணே பாப்பா'' 'மாமல்லபுரம்' ப.இல்லை
251. பூவண்ணன், ''குழந்தைக் கவிஞர்கள்'' ப.102.
252. திருச்சி பாரதன், ''வள்ளுவர் வழியில் குழந்தைப் பாடல்கள்'' பொறைஉடமை' ப.28.
253. சி.இரத்தின வேலனார், ''குழந்தைக் கவியமுது'' 'எங்கள் பள்ளி' ப.14
254. ஆ.ஜோசப் ஸ்டாலின், ''வசந்த காலப் பூக்கள்'' 'குழந்தைகளே' ப.42.
255. எல்.எம்.பஹதூர், ''பூங்கா ராயா'' 'வாசக சாலை' ப.16.
256. கருமலைப் பழம்நீ, ''காற்றாடி'' 'சர்க்கஸ்' ப.93.
257. பூங்கோவன் ''கூடி வாழ்வோம்'' 'உயிர்க்காட்சி சாலை' ப.25.

258. மூவேந்தர், ''சுடர் விளக்கு'' 'துறைமுகம்' ப.9

259. மீனவன், ''கொஞ்சும் குழந்தை'' 'வயல்' ப.46.

260. எஸ்.சாந்தலஷ்மி ''மழலை இன்பம்'' 'குழந்தையின் கடமை' ப.11

261. சொ.அடைக்கலம், ''பாலர் மலர்கள்'' 'ஒவ்வொருநாளும்' ப.35.

262. தமிழ்ஒளி, ''அந்திநிலா பார்க்கவா'' 'முன்னும் பின்னும்' ப.33

263. எல்.எம்.பஹதூர், ''பூங்கா ராயா'' 'தூங்கணும்' ப.26.

264. அ.அகமதுபஷீர், ''குழந்தை இலக்கியம்'' ப.30, 31

265. ப்ளோரா எச்.வில்லியம்ஸ், 'நமது குழந்தைகள்' ப.33

266. ரா.பொன்ராசன், ''மலரும் பூக்கள்'' 'மழையே மழையே வா வா' ப.11

267. பூவண்ணன் ''குழந்தைக் கவிஞர்கள்'', 'நிலாப் பாட்டி', ப.155

268. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'நானாக இருந்தால்' ப.59

269. எல்.எம்.பஹதூர், ''பூங்கா ராயா'' 'அரசனைப்போல் நானானால்' ப.24.

270. வே.பிரபாகரன், ''சிறுவர் செந்தேன்'' 'அறுசுவை-அறி' ப.21.

271. காசி, ''கவிச்சுவையமுது'' 'அரிசி' ப.57.

272. அரு.சோமசுந்தரம், ''சிறுவர்க்குப் பாடல்கள்'' 'சோளம்' ப.26.

273. இராஜம்மாள் பி.தேவதாஸ், ''பாப்பா பாப்பா பாட வா'' 'கீரை வகைகள்' ப.39.

274. பூவண்ணன், ''குழந்தைக் கவிஞர்கள்'' 'பிட்டு' ப.54.

275. வ.கோவிந்தராசன், ''பாடுங்குயில்'' 'இட்டலி' ப.38.

276. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'தோசை நல்ல தோசை' ப.41.

277. மணி (இ.பெ.-நா.ஆ.சுப்பிரமணியம்) ''சிறுவர்கதை மலர்'' 'ஆப்பம்' ப.4

278. வல்லநாடு ராமலிங்கம், ''மழலையர் அமுதம்'' 'வடை' ப.39.

279. சி.வேணுகோபால், ''இளையோருக்கு இனியவை நூறு'' 'அதிரசம்' ப.37.

280. செல்ல கணபதி, ''பாட்டு பாடவா'' 'சின்னச் சீடை' ப.21.

281. இராஜம்மாள் பி.தேவதாஸ், ''பாப்பா பாப்பா பாட வா'' 'உணவு பழக்கங்கள்' ப.47.

282. ரா.பொன்ராசன், ''கற்பக மலர்கள்'' 'தெய்வத் திருவள்ளுவர்' ப.39.

283. திருச்சி பாரதன், ''வள்ளுவர் வழியில் குழந்தைப் பாடல்கள்'' 'பொச்சாவாமை' பாடல்-27

284. மேலது, 'பிறன் இல் விழையாமை' ப. 8.

285. புலமைப்பித்தன் ''குறள் விளக்கக் குழந்தைப் பாடல்கள்'' 'உள்ளமும் உயர்வும்' பாடல்-13.

286. ரா.பொன்ராசன், ''கற்பக மலர்கள்'' 'தெரிந்தவர்கள் சொல்லுங்கள்' ப.72, 73.

287. தி.நடராசன், ''நாட்டுப்புறச்சிறுவர் பாடல்கள்'' ப. XVI

288. அழ.வள்ளியப்பா, ''சிரிக்கும் பூக்கள்'' 'தாடிச்சாமியார்' ப. 200-203.

289. பழம்பாடல்-சுண்டெலிகள் ''முத்துக்குவியல்'' (தொ.ஆ.) ர.அ. & பூ.வ. ப.19

290. கி.வா.ஜகந்நாதன், ''குழந்தை உலகம்'' 'சுண்டெலிக்கல்யாணம்' ப.106.

291. கிருஷ்ணன்நம்பி, ''யானை என்ன யானை'' 'ஊருக்கெல்லாம் பால்' ப.15,16

292. கனகசபை,''முத்துக்குவியல்'' (தொ.ஆ.) ர.அ. & பூ.வ. 'பேனா' ப.33

293. வாணிதாசன், ''இனிக்கும்பாட்டு'' 'புத்தகம்' ப.23

294. அழ.வள்ளியப்பா, ''சிரிக்கும் பூக்கள்'' 'புத்தகம் இதோ' ப.93.

295. பூவை அமுதன், ''நிலாப்படகு'' 'புத்தகம்' ப.37.

296. கம்பதாசன், ''குழந்தைச் செல்வம்'' 'கண்ணாடி' பாடல்-7

297. வி.ஜி.சந்தோசம்''சந்தோச பாப்பா பாட்டு'' 'பணம்' ப.51

298. சிற்பி.பாலசுப்பிரமணியன், ''வண்ணப் பூக்கள்'' 'செய்தித்தாள்' பாடல் -14

298. குழ.கதிரேசன், ''விடுதலைக் கிளி'' 'நாட்காட்டி' ப.22

300. வெ.நல்லதம்பி, ''கண்ணே பாப்பா'' 'விசிறி' ப.25.

301. அ.பிரகாசம், ''மழலை முத்துக்கள்'' 'செருப்பு' ப.56

302. அழகு பழனிச்சாமி, ''மணக்கும் மலர்கள்'' 'கண்ணாடிப் பாடல்' ப.53

303. மின்னூர் சீனிவாசன், ''கண்மணிப்பாட்டு'' 'நாகசுரம்' ப.78

304. எஸ்.சாந்தலஷ்மி, ''மழலை இன்பம்'' 'சோளக்கொல்லை பொம்மை' ப.46.

305. மின்னூர் சீனிவாசன், ''கண்மணிப்பாட்டு'' 'குப்பைத்தொட்டி' ப.32

306. மு.அறம், ''குமர உள்ளம்' ப.16

307. முத்துசண்முகன், வெ.கிருட்டினசாமி, ''தமிழில் குழந்தைப் பாடல்கள்'' ப.20

308. மேலது ப.20

309. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி'' 'மரம் ஏறலாம்' ப.19

310. செல்லகணபதி, ''மலரும் மொட்டுகள்'' ''அம்மா! அம்மா! ப.27.

311. குழ. கதிரேசன், ''குழந்தைப் பாப்பா'', 'பள்ளிக்குப் போவேன்', ப. 14.

312. கதி.கணேசன், ''குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி''ப.142

313. மேலது ப.42

314. அ.கி.பரந்தாமனார்,''எங்கள் தோட்டம்'' 'அப்பாவை போல் நானானால்' ப. 31.

315. சாமி பழனியப்பன், ''சிறுவர் பூங்கா'' 'உறுப்பின் பயன்' ப.26

316. மா.இராசமாணிக்கனார், ''குழந்தைப்பாடல்கள்'' 'விளையாட்டுகள்' ப.இல்லை.

317. வெ.தனலக்குமி, ''குழந்தைப்பாடல்களில் பாடுபொருளும் பாடு நெறியும்'' ப.138, 139

318. வாணிதாசன், ''இனிக்கும் பாடல்'' 'உண்மை' ப.51,52

319. வே.இரா.சிவஞான வள்ளல், ''குறளும் குழந்தைக் கவிதையும்'' 'உயர்வும் தாழ்வும்' ப.31.

320. திருச்சி பாரதன், ''பூந்தோட்டம்'' 'நல்லவர் ஆவோம்' ப.27

321. தமிழ்முடி, ''மழலை மொழி'' 'முயற்சி செய்' ப.28

322. பூவண்ணன், ''பாலர் பாடல்கள்'' 'இந்தியரே' ப.63

323. மு.வைத்தியலிங்கம், ''தேன் குழல்'' 'குற்றம்' ப.26.

324. பு.ஆ.முத்துக் கிருஷ்ணன், ''குழந்தைப் பாக்கள்-2'' 'பொம்மை செய்யலாம்' ப-இல்லை

325. திருச்சி பாரதன், ''பூந்தோட்டம்'' 'குதிரை வேண்டுமா?' ப.34

326. மு.வரதராசனார் ''சிறுவர் பாட்டு நூற்கோவை'' 'மரமா? விதையா?' ப.28

327. மா.இராசமாணிக்கனார், ''குழந்தைப் பாடல்கள்'' 'கடவுள் யார்?' ப.இல்லை

328. ஆ.ஜோசப் ஸ்டாலின், ''வசந்த காலப்பூக்கள்'' 'முயற்சியினால் வசமாகும்' ப. 44.

329. இன்ப வண்ணன், ''பொம்மை வீடு'' 'நான் யாரோ?' ப.29.

330. மு.நடராசன், ''உயர்வோம் நாம்'' 'என்ன சொன்னாரு?' ப.13

331. கிருஷ்ணன் நம்பி, ''யானை என்ன யானை'' 'கவிமணி தாத்தா' ப.39, 40.

332. மா.கண்ணப்பன், ''மழலை மலர்கள்'' 'கவிதைப் பட்டிமன்றம்' ப.35

333. பு.ஆ.முத்துகிருஷ்ணன், ''குழந்தைப் பாக்கள்-2'' 'வரவேற்பு' ப.25.

334. முத்துசண்முகன், வெ. கிருட்டினசாமி ''தமிழில் குழந்தைப் பாடல்கள்'' ப.17

335. பாரதியார், ''பாரதியார் கவிதைகள்'' 'பாப்பா பாட்டு' ப.266,267

336. அழ.வள்ளியப்பா, ''மலரும் உள்ளம் முதல் தொகுதி'' 'பூஞ்சோலை' ப.51

337. பாரதிதாசன், ''இசையமுது'' 'தூய்மை' ப.20

338. வாணன், ''பறம்பு மலை'' 'பறம்பு மலை' பாடல்.1

339. அகமது பஷீர், ''இஸ்லாமியக் குழந்தை இலக்கியம்'' ப.32,33

340. சக்திக் கனல், ''மழலைப் பாடல்கள்'' 'ராதாவின் தோட்டம்' ப.42.

341. லெமன், ''சிப்பாய் வறார்'' 'தீபாவளிக் கூத்து' ப.18.

342. கவிமணி ''மலரும் மாலையும்'' 'செல்வமும் சிறுமையும்' ப. 171.

343. தே.ப.பெருமாள், ''சிறுவர் அமுது'' 'எங்கள் வீட்டுத் தம்பி' ப.25.

344. பெ.நா. அப்புஸ்வாமி, ''முத்துக்குவியல்'' (தொ.ஆ.) ர.அ. & பூ.வ. 'ஊஞ்சல்' ப.24.

345. மா. இராசமாணிக்கனார், ''குழந்தைப் பாடல்கள்'' 'ரயில் வண்டி ஆட்டம்' ப.இல்லை.

346. பிரதாப், ''பூங்குயிலே முதல் தொகுப்பு'' 'ஆசை ஆசை' பாடல்-13.

347. வாணிதாசன், ''இனிக்கும் பாடல்'' 'வயதானால்' ப.28.

# இயல் மூன்று

# குழந்தைப் பாடல் உத்திகள்

### 3.1. உத்தி:

படைப்போர் தங்களின் படைப்பாற்றல், வெளிப்பாடு, தனித்தன்மை, சிறப்பியல்பு இவற்றைப் புலப்படுத்துவது உத்தி எனப்படும். படைப்பவர் வெளிப்படுத்துவதும் படிப்போர் உணருவதும் உத்தி ஆகும்.

### 3.1.1. உத்தியின் நோக்கம்:

இலக்கியப் பயன்களுள் ஒன்று, இன்பம் தருவது. இலக்கியத்தில் முருகியல் தன்மைக்காக உத்தி பயன்படுகிறது. கவிதைக்கு நயம், அழகு, இன்பம், சுவை பயப்பது உத்தி. மேலும் இலக்கியம் தொய்வின்றி, விறுவிறுப்புடன் அமையவும் படிப்போர்க்கு நாட்டம் உண்டாக்கவும் ஏதுவாக அமைவது உத்தி.

உள்ளதை உள்ளவாறு கூறாது, நிகழ்ந்ததை நடந்தவாறு காட்டாது, கலையுணர்வுடன் புதிய வடிவில் தருவதற்கு உத்தி தேவை.

கருத்துகளைச் சுவைபடக்கூறி, சோர்வின்றிக் கொண்டு செல்லும் உத்தி கவிஞர்களுக்குக் கைவருகின்றன.

கவிஞர் தம் கருத்தை எங்கு, எப்படி, எதற்காக, எவ்வாறு வெளியிட வேண்டும் என்பதைச் சிந்தித்து வெளியிடுவது உத்தி.

எல்லாக் கலைக்கும் உத்தி தேவை. கலைஞர்கள் உத்தி குறித்து சிந்தனை உடையவர்களாக இருப்பர். இலக்கியத்திற்கு உத்திகள் மிக மிக அவசியம்.

"இருப்பதை அவ்வாறே காட்டாது, இயல்வதை அவ்வாறே விளக்காது, கலை உணர்வுடன் புத்தாக்கம் செய்து அளித்தலால், உத்திகளின்றி இலக்கியம் இயலாது எனவே கூறலாம். சுவைபட மொழிதலும், சோர்வு ஏற்படாது கொண்டு செல்லுதலும் இத்தகு உத்தி ஆட்சியால் கவிஞருக்குக் கைவருகின்றன"[1] என்கிறார் ச.வே. சுப்பிரமணியன்.

பெரியவர்களுக்கான இலக்கியங்களில் உத்திகள் கையாளப்படுவது போலவே குழந்தை இலக்கியத்திலும் உத்தி பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம்.

குழந்தைப் பாடல்களில், குழந்தைகளின் இயல்பு, உளவியல் உணர்ந்து கவிஞர்கள் உத்திகளைப் பயன்படுத்தி இருப்பதைக் காணலாம்.

குழந்தைப் பாடல்களின் தன்மையையும் உத்தி அமைப்பினையும் காண்போம்.




மேற்கண்ட வகையிலமைந்த குழந்தைப் பாடல்களில் கவிஞர்கள், உத்திகளைக் கையாண்டிருக்கும் விதம் பற்றி ஆய்ந்தறிவதே இவ்வியலின் நோக்கம்.

- உத்தி
  - இலக்கணம்
    - யாப்பு
      - எழுத்து
      - அசை
      - சீா
      - தொடை
    - அணி
      - உவமை
      - உருவகம்
      - மடக்கு
      - சொல்பின்வருநிலை
  - இலக்கியம்
    - பொருள்
      - அறிவுரை
      - வேண்டல்
      - தோழமை
      - கற்பனை
      - வருணனை
      - விடுகதை
      - குறிப்புப் பொருள்
      - ஒத்துணர்வு
      - புலன் மாற்று
    - அமைப்பு
      - வினாவிடை
      - சொல், தொடர், அடுக்கு
      - உரையாடல்
      - வாதம்
      - நாடகம்
      - கூறியது கூறல்
      - நூலாக்கம்
        1. வடிவம்
        2. அமைப்பு
           - தலைப்பு
           - படம்
           - எழுத்து
           - காலி இடம்
        3. பெரிய படங்கள்
        4. வரலாறு
        5. குறள்
        6. கதைப்பாட்டு
        7. வில்லுப்பாட்டு
        8. ஒரே பொருள் பற்றியன
        9. குறுவட்டு-ஒலி ஒளிஒலி

### 3.1.2. குழந்தைப் பாடல்களில் உத்தி:

குழந்தைப் பாடல்கள் தனிப்பாடல்களாகவும் கதைப் பாடலாகத் தொடர் நிலைப் பாடல்களாகவும் அமையக் காண்கிறோம். அவற்றுள் அமைந்த உத்திகள் கீழ்க்காணும் வண்ணம் அமைந்துள்ளன.

### 3.1.3. நால்வகைப் பாக்கள்:

> ''வெண்பா வகவல் கலிப்பா வளவடி வஞ்சியென்னும்
> ஒண்பா வடிகுறள் சிந்தென் றுரைப்ப ஒலிமுறையே''[2]

என்பது யாப்பருங்காலக் காரிகை. இதில் நால்வகைப் பாக்களுள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா ஆகிய மூன்றும் அளவடி பெற்றும் வஞ்சிப்பா குறளடி, சிந்தடி கொண்டும் வரும் என விளக்குகிறார் அமிதசாகரர்.

### 3.1.4. பாரதி பாடல்:

ந. கோவேந்தன் 'பாரதியின் யாப்பும் உணர்ச்சியும்' என்ற கட்டுரையில், ''நால்வகைப் பாவும், பாவினமும் தன் கருத்தின் அழுத்தத்தையும் பரப்பையும் தாங்க முடியாத போது, பாரதியே புதிய யாப்பு வடிவங்களைப் படைக்கிறான். சில யாப்பின் வரையறைகளை மீறுகிறான்... 1691- பாடல்களில் பாரதி அதிகம் பாடிய பாடல்கள் 716 சிந்துப்பாக்கள். ஆகையால்தான் சிந்துக்குத் தந்தை எனப்பட்டான்''[3] என்கிறார்.

''கும்மி, பள்ளு, குடுகுடுப்பைக்காரன் பாட்டு, நாட்டுப்புறப் பாடல்கள் முதலிய பற்பல யாப்பு முறைகளையும் கையாண்டு தானே சில யாப்பு இசை அமைப்புகளைப் புதிதாய்ப் படைத்தும் தமிழ் மொழிக்கும் கவிதைப் பொருளுக்கும் ஒரு புதுமையை ஏற்படுத்தி விட்டான் பாரதி''[4] என்கிறார் சு.செல்லப்பன்.

### 3.1.5. குழந்தைப் பாக்களில் யாப்புநெறி:

''பாரதியார், கவிமணி போன்றவர்கள் விருத்தம், கண்ணி, சிந்து முதலிய வடிவில் குழந்தைப் பாடல்களைப் பாடியுள்ளனர். நால்வகைப் பாக்களையோ, பாவினங்களையோ மிகுதியாகப் பயன்படுத்தவில்லை. வள்ளியப்பாவும் இவர்களைப் பின்பற்றி குறள்வெண் செந்துறை, விருத்தம், கண்ணி, சிந்து முதலிய வடிவங்களில் பாடியுள்ளார். ஆதலால் மரபு வழக்காகக் குழந்தைப் பாடல்களுக்கெனச் சில இலக்கணங்கள் பின்பற்றப்பட்டுள்ளன''[5] என்கிறார் கதி.கணேசன்

''குழந்தைப் பாடல்களில் பெரும்பாலானவை சந்தப் பாடல்களே. வெண்பா, விருத்தம் போன்ற யாப்பு வகைகளில் பாடல்களை அமைத்தால் எளிமை அடிபட்டுப் போகும். வாக்கியங்கள் நீளும். குழந்தைகள் மூச்சைப் பிடித்துப் பாடும் நிலைமை உருவாகும்''[6] என்கிறார் அழ.வள்ளியப்பா.

''தொல்காப்பியர் இசைத்துறைக்குச் சில விதி விலக்குகளை அளித்துள்ளார்.

''அளவறிந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப; இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர் (எழுத்ததிகாரம்–சூத்.343)

இசைத்துறையில் தொல்காப்பியர் தருகின்ற இந்த உரிமை குழந்தைப் பாடல்கள் என்ற துறைக்கும் அனுமதிக்கப்பட வேண்டிய விதிவிலக்கு என்பதே என் கருத்து''[7] என்கிறார் அழ. வள்ளியப்பா.

### 3.1.6. புதிய யாப்பு:

குழந்தைப் பாக்களுக்கு 'மகப்பா' என்னும் பெயர் கொடுக்கிறார் சரவணத் தமிழன். தாம் படைத்த 'புதிய யாப்பு நூலில்' மகப்பாவிற்கு விளக்கம் தருகையில்,

''பருப்பொருள் கூறும் கருத்துடைத் தாக
வழக்கிடைப் பயிலும் சொற்கள் கொண்டே
எளிய சந்தம் ஏற்றிடல் மகப்பா.''[8]

என்னும் நூற்பாவைப் படைத்துள்ளார்.

''குழந்தைகளுக்காகக் குழந்தை உள்ளத்தோடு, குழந்தையின் மொழியில் குழந்தை உலகத்தை விளக்கும் பாடல்களே உண்மைக் குழந்தைப் பாடல்கள்''[9] என்கிறார் பூவண்ணன்.

### 3.2. இலக்கண உத்தி:

கவிஞர்கள் மற்றும் இலக்கண நூலார் கருத்துக்களை மனதில் கொண்டு, குழந்தைப் பாக்களின் உத்திகளில் இலக்கண அடிப்படையிலானவற்றைக் காண்போம்.

### 3.2.1. யாப்பு:

யாப்பின் உறுப்புகளாகிய எழுத்து, அசை, சீர், அடி, தொடை என தளை நீங்கலாகிய ஐந்து உறுப்புகளைக் கொண்டு உத்திகள் அமையுமாற்றைக் காணலாம்.

**எழுத்து:**

*யாப்பு அடிப்படையில் எழுத்து குறில், நெடில், ஒற்று என மூவகைப்படுகின்றன. அகர வரிசையில் அமைத்து 'ஆத்திசூடி' எனப்படும் பாடல் வகையினை அன்று ஔவையார் துவங்கி, இன்று இளம் கவிகள் வரை பாடல்கள் புனைகின்றனர்.*

''அறஞ்செய விரும்பு
ஆறுவது சினம்...
.......................
ஓரஞ் சொல்லேல்''[10]

*ஈறாக ஔவையார் 109 அடிகளை, அறிவுரைகளை ஆத்திசூடியாகத் தந்தார்.*

''அச்சம் தவிர்.
ஆண்மை தவறேல்.
...................
வௌவுதல் நீக்கு.''[11]

*ஈறாக 110 அடிகளில் ஆத்திசூடியைத் தந்தார் பாரதியார். இன்று பெரும்பாலும் உயிர் 12, ஆய்தம் ஒன்று சேர்ந்து 13 அடிகளை உடையதாக அகர வரிசைப் பாடல்கள் அமைந்துள்ளன.*

''அன்பாய் நானும் வாழ்ந்திடுவேன்
ஆன்றோர் புகழ வாழ்ந்திடுவேன்
............ .............. ............ .........
ஔவைப் பாடம் படித்திடுவேன்
அஃதே சிறந்தது என்றுரைப்பேன்!''[12]

*தமிழ் மொழி கற்கத் துவங்கும் குழந்தை அகர வரிசையுடன் அரிய பல கருத்துகளையும் கற்க வாய்ப்பாக அமைவன ஆத்திசூடிப் பாடல்கள். எனவே தான் கவிஞர்கள் இவ்வுத்தியைப் பயன்படுத்தினர்.*

எழுத்து அடிப்படையில் ஓரெழுத்து ஒரு மொழி, விலங்குகள் எழுப்பும் ஓரெழுத்து ஒலிகள் குழந்தைப் பாடல்களில் உத்திகளாகக் கையாளப்படுகிறது.

''ஆங்கில மாதம் மே
பொங்கல் மாதம் தை
இரண்டும் சேர்ந்தால் மேதை!

இடுவதன் பெயர் வை
கரத்துக்குப் பெயர் கை
இரண்டும் சேர்ந்தால் வைகை!

மன்னவர் பெயர் கோ
புத்தகம் வைப்பது பை
இரண்டும் சேர்ந்தால் கோப்பை!''[13]

இவ்வாறு ஓரெழுத்தொரு மொழிகளைச் சொல்வதுடன், இரண்டெழுத்துக்கள் இணைந்து ஒரு சொல் உருவாகும் முறையைக் கூறுகிறார் மகிழ்ச்சிக் கண்ணன். இது குழந்தைகளைக் கவர்வதுடன், இதுபோன்ற எழுத்துக்களைச் சிந்தித்துக் கவிதை உருவாக்க வழி செய்யும் உத்தியாகிறது.

''காக்கை ஒன்று வந்தது;
காகா காகா என்றது.
குயிலும் அங்கே வந்தது;
குகூ குகூ என்றது.
கிளியும் பறந்து வந்தது;
கிகீ கிகீ என்றது.
முழுப் பெயரையும் சொல்லவே
முடியவில்லை. ஆகையால்
முதல் எழுத்தை மட்டுமே
மூச்சுப் பிடித்துக் கூறுமே!''[14]

என்ற அழ. வள்ளியப்பாவின் பாடல் காக்கை, குயில், கிளி கத்தும் விதங்களில் ஒரு நயத்தை அதாவது முழுப்பெயர் சொல்லாமல் முதல்

எழுத்தை மட்டும் மூச்சுப் பிடித்துச் சொல்வதாகக் குறிப்பிடுவது உத்தி எனலாம்.

**அசை:**

அசை நேரசை, நிரையசை என இருவகைப்படும். இவற்றை ஈரசை, மூவசைச் சீர்களாகப் பெற்ற அடிகளே குழந்தைப் பாக்களில் மிகுதியாக இடம்பெறுகின்றன. நாலசைச் சீர்கள் குறைவாகவே காணப்படுகின்றன.

''உண்மை பேசி உயர்ந்திடுவாய்!
உடலைப் பேணிக் காத்திடுவாய்!''[15]

இரு அடிகளிலும் முதல் இரு சீர்களும் ஈரசைச் சீர்களாக மூன்றாம் சீர் மூவசைச் சீர்களாக இருக்கின்றன.

நாலசைச் சீர்கள் குழந்தைப் பாக்களில் அரிதாகவே இடம்பெற்றுள்ளன.

''செந்தாமரையில் வீற்றிருக்கும் தாயே!
செந்தமிழே சேவித்தேன்!
வெண்டாமரையாம் மனத்திருக்கும் தாயே!
வண்டமிழே தரிசித்தேன்!''[16]

இப்பாடலில் 'செந்தாமரையில்' 'வெண்டாமரையாம்' என்பன நான்கு அசைகளைக் கொண்டுள்ளன.

**சீர்:**

ஈரசை, மூவசை மற்றும் நாலசைச் சீர்கள் கொண்ட குழந்தைப் பாடல்களில் ஒரு சீர் ஒரு சொல்லாக அமைதல் சிறப்பு.

யாப்பிலக்கணத்தில் வகையுளி பற்றிய காரிகை உரை, ''வகையுளி என்பது முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புகள் நிற்புழி அறிந்து குற்றப்படாமல் வண்ணம் அறுத்தல் எனக் கொள்க.''[17]

அதாவது ஒரு சீர் ஒரு சொல்லாக அமைய வேண்டும். சொல் பிரிந்த நிலையில் சீரமைதல் குழந்தைகள் படிப்பதற்குக் கடினமாக இருக்கும்.

''பல்கோடி காவத தூரத்திருந்–தொளி
பாய்ச்சுகின் றான்இவ்வு லகமெல்லாம்!
எல்லையில் லாதவி ரிவுகொண்டான்–வைப்பின்
எத்தனை யண்டமும் உள்ளடங்கும்''[18]

*'பாய்ச்சுகின்றான்' 'இவ்வுலகமெல்லாம்' 'எல்லையில்லாத' 'விரிவு' இவை பிரிந்து நிற்பதால், குழந்தைகள் வாசிக்கத் திணறுவர்.*

''இடி இடித்தது; புயல் அடித்தது;
எய்த செஞ்சரம் உறுமவே
துடிதுடித்தனர் கொடிய பாதகர்
துண்டு பட்டனர்; ஓடினார்!''[19]

*இப்பாடலில் சொற்கள் தனித்தனிச் சீராக இருப்பதால் குழந்தைகள் சிரமமின்றி வாசிப்பர்.*

**அடி:**

*இரண்டு சீர்கள் கொண்ட குறளடி, முச்சீரான சிந்தடி, நாற்சீரான அளவடி, ஐந்து சீர்கள் கொண்ட நெடிலடி ஐந்துக்கும் மேற்பட்ட சீர்கள் கொண்ட கழிநெடிலடி அமையப் பெற்ற குழந்தைப் பாடல்களைக் காணலாம்.*

*மிகச் சிறு குழந்தைக்கான பாடல் 2 அல்லது 3 சீர்கள் கொண்ட குறளடியும் சிந்தடியுமாக அமைவதே சிறப்பு.*

*இரண்டு சீர்கள் கொண்ட குறளடி:*

''தாயின் மொழி
தமிழைப் படி
யாரும் இதை
அறியப் படி.
இன்பத் தமிழ்
இதனைப் படி.
வண்ணத் தமிழ்
வளரப் படி.''[20]

*மூன்று சீர்கள் கொண்ட சிந்தடி:*

''கோமாளி அண்ணா குப்பண்ணா
குடமே போலொரு வயிற்றண்ணா
ஏமாளி இங்கே யாரண்ணா
எனக்குக் கொஞ்சம் சொல்லண்ணா.''[21]

*நான்கு சீர்களாலான அளவடி:*

''வயலில் வாடிய பயிர் கண்டே
வருத்தம் கொண்டார் ஒரு ஞானி!
அவரே வடலூர் வள்ளல் எனும்
அதிசய ஞானி! அறிவாய் நீ!''[22]

*ஐந்து சீர்களால் ஆன நெடிலடி:*

''முடியாதென்று சொல்லிச் சொல்லி
முடங்கிக் கிடக்காதே!
கடிகாரத்தின் உழைப்பைக் கவனி
கவலை கொள்ளாதே!''[23]

*ஐந்து சீர்களுக்கு மேற்பட்ட கழிநெடிலடி:*

''காகம் போலக் கூட வேண்டும்
களவு மட்டும் வேண்டா
நாகம் போல கவனம் வேண்டும்
நஞ்சு மனம் வேண்டா
வானைப் போல வழங்க வேண்டும்
வலிய இடிகள் வேண்டா
மானைப் போல இதயம் வேண்டும்
மருட்சி கொள்ள வேண்டா.''[24]

*இப்பாடல் அறுசீர் கழிநெடிலடியாக அமைந்துள்ளது. சற்று வளர்ந்த குழந்தைக்கு அளவடி, நெடிலடி, கழிநெடிலடிப் பாடல்கள் ஏற்றவை.*

*''மகப்பாக்களில் பலவகை வடிவங்கள் அமையப் பெறலாமெனினும் ஈரசை, முச்சீர் அடிகள் மிகுதியாக அமையப் பெறுவது இயல்பாகும் என்பதை,*

''வடிவம் பலவும் வளரினும் ஈரசை
முச்சீர் அடிகள் மிக்கு வரவே.''

*என்னும் நூற்பா புலப்படுத்துகின்றது''[25] என்கிறார் அம்புயம் யுவச்சந்திரா.*

**தொடை:**

*கவிதை நடை சிறக்க உதவுவது தொடை. மோனை, எதுகை, முரண், இயைபு, அந்தாதி எனத் தொடைகள் ஐந்து வகைப்படும்.*

*மோனை: முதல் எழுத்து ஒன்றி வருதல் மோனை.*

''பிரான்ஸ் நாட்டில் 'டோல்' ஊரில்
பிறந்தார் லூயி பாஸ்ட்டருமே
இவரின் தந்தை ஜோசப்போ
இராணுவப் படையில் ஓர் வீரர்''[26]

*எதுகை: இரண்டாவது எழுத்து ஒன்றி வருதல் எதுகை.*

''படித்த உடனே புரிந்துகொள்ளும்
பழக்கம் சிலருக் குண்டு
படித்துப் படித்து மீண்டும் படித்தே
பலனும் பலருக் குண்டு
நம்மை அறியப் பிறரை அறிய
நாமும் படிக்க வேண்டும்
செம்மை யான வாழ்வு மலரத்
தினமும் படிக்க வேண்டும்.''[27]

*இயைபு: அடிதோறும் ஈற்றெழுத்தோ, ஈற்றசையோ, ஈற்றுச்சீரோ ஒன்றி வருதல் இயைபு. இதனை ஈற்றெதுகை என்பர். ஆங்கில ஆதிக்கம் மிக்க காலத்து இவ்வீற்றெதுகை, பாடல்களில் இடம்பிடித்தன. எழுபது*

*விழுக்காடுகள் குழந்தைப் பாடல்களில் ஈற்றெதுகை இடம்பெறக் காரணம் ஒலிநயம் மிக்கதாக அமைந்து, குழந்தைகளின் மனப்பதிவுக்கு வழிவகுப்பதுதான்.*

''தலைக்கு அழகு
    தாழ்ந்து வணங்கல்
கண்ணுக்கு அழகு
    கனிவாய்க் காணல்
காதுக்கு அழகு
    கேள்வி பெறுதல்
வாய்க்கு அழகு
    உண்மை பேசுதல்''[28]

*மேற்கண்ட பாடலில் ஈற்றெழுத்து, ஈற்றசை, ஈற்றுச்சீர் ஒன்றி வந்து இயைபாதலைக் கண்டோம்.*

*முரண்: எதிர் எதிரான சொற்களை அமைத்துப் பாடுதல் முரண்தொடை.*

''பெரிய அணையைக் கட்டிடச்
    சிறிய கல்லும் போதுமே
பெரிய வீட்டைக் காத்திடச்
    சிறிய பூட்டும் போதுமே.
...................................
பெரிய நாட்டை ஆண்டிடச்
    சிறிய மூளை போதுமே!''[29]

*பெரிய, சிறிய என்ற முரணான சொற்களை அமைத்துச் சான்றுகள் பல கூறி, நிறைவாக ஆட்சியாளராக சிறிய மூளை போதும் என்பதைக் கவிதையாக்கித் தருகிறார்.*

*அந்தாதி: ஒரு பாடலின் முடிவு அடுத்த பாடலுக்குத் துவக்கமாக அமைவது அந்தாதித் தொடை.*

''போர்பந்தர் பேரூரில் பொன்மகனாம் காந்தியார்
கார்கழிந்து வந்த கதிரவனாம்!—பார்போற்றும்

சீரியநல் லொழுக்க சீலனாய் வந்துதித்துப்
பேரொளி தந்தானைப் போற்று!''

போற்றும் திருமகனாம் புத்துலகச் சிற்பிக்கோ
ஆற்றல் மிகு படைகள் அன்(பு) அகிம்சை! மாற்றானை
.......... ............... .................''[30]

மிகச்சிறு குழந்தைகளுக்காக ஒரு அடியின் ஈற்றுச்சீர் அடுத்த அடியின் முதற்சீராய் அமையும் வண்ணம் குழந்தைப் பாடல்களில் அந்தாதித் தொடை அமைந்துள்ளது.

''பசி வயிற்றில் பசி
பசி தணிக்கப் புசி
புசி உணவைப் புசி
புசிக் கும்போது ருசி.''[31]

இத்தகைய எளிய அந்தாதித் தொடைகள் குழந்தைகள், பாடல்களை நினைவுகொள்ள வழி செய்கின்றன.

தொடை, கவிதைக்கு அழகூட்டுவதுடன் கவிதையைக் குழந்தைகள் நினைவில் நிறுத்தவும் வழி செய்கின்றன.

இலக்கண நூலார் வகுத்த யாப்பு நெறி கவிஞர்களின் உத்தியாக அமைந்து குழந்தைப் பாடல்கள் சிறக்க உதவுகின்றன.

**புதுக்கவிதை:**

குழந்தைப் பாக்களின் மரபுக்குட்படாத பெரியோர்களுக்கான புதுக்கவிதை போன்று சிறுவர்க்கும் புதுக்கவிதைகள் சில வெளிவந்தன. ஆனால் அவற்றில் சந்த நயம், தொடை நயம் இன்மையால் அவை குழந்தை இலக்கியத்தில் நிலைத்த இடம் பெறவில்லை எனலாம்.

**ஐக்கூ:**

துளிப்பா என்று சொல்லக்கூடிய ஜப்பானியக் கவிதை வடிவமான ஐக்கூ கவிதைகள் சிறுவர்க்காக வந்தன.

''ஆறுமுகனே
பன்னிரு கைகள் வேண்டும்.
வீட்டுப் பாடம்''[32]

''தமிழ்த்தாய் வாழ்த்துடன்
துவங்கிய பள்ளியில்
தமிழில் பேசினால் தண்டனை''[33]

*இத்தகைய ஐக்கூ கவிதைகள் அளவில் சிறியன. எனினும் பெரிய கருத்துகளை உய்த்துணர வைப்பன. சிறு குழந்தைகளால் இத்தகைய கருத்துக்களை அறிய இயலுமா? புரிந்து கொள்வார்களா? என்பது வினாவிற்குரியது. சற்று வளர்ந்த குழந்தைகளுக்கு இக்கவிதை புரியும்.*

**3.2.2. அணி**

*யாப்பு அடிப்படையிலான உத்திகளைப் போன்று அணி அடிப்படையில் அமைந்த இலக்கண உத்தியும் குழந்தைகளைக் கவர்ந்திழுக்க வல்லன.*

*''கவிஞனின் புலமையை அளப்பதற்குச் சிறந்த கருவி அவன் காட்டுகின்ற உவமைகளாகும். கற்பனை செய்யும்போது... படிப்பவர் நெஞ்சத்தைக் கவர்வதுடன், கவிஞனின் கருத்தை எளிதில் படிப்பவர் நெஞ்சில் பதிய வைக்கும் தன்மை வாய்ந்தனவாக உவமைகள் அமைகின்றன''[34] என்ற செல்லகணபதியின் கருத்து இங்கே நினைவு கொள்ளத்தக்கது.*

**உவமை அணி:**

*ஒப்புமையுடைய இரு பொருட்களுக்கிடையே ஒப்புமை தோன்றக் கூறுவது உவமை அணி.*

''வில்லுக் கம்பிகள் கால்கள்—மோட்டார்
விளக்குப் போன்ற கண்கள்.
பரந்த பெரிய வாயும்—பணப்
பையைப் போன்ற வயிறும்

சுருங்கிச் சுருங்கி விரியும்–இந்தத்
துருத்தி போன்ற தவளை.''[35]

இதில் தவளையின் உருவம், குழந்தைகளுக்கு அறிமுகமான பொருட்களுடன் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது. குழந்தை, பாடலின் பொருளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளவும் மனதில் பதிய வைத்துக் கொள்ளவும் உவமை அணி சிறந்த உத்தியாக அமைகிறது.

**உருவக அணி:**

ஒரு பொருளுக்கு இணையான மற்றொன்றை உவமையாகக் கூறுவது உவமையணி. ஆனால் உவமையையே பொருளாகக் கூறுவது உருவகம்.

''ஆடாப் பம்பரம் மொட்டாகும்
அடர்ந்த இலைகள் தட்டாகும்.''[36]

வாணிதாசனின் இப்பாடலில் 'பம்பரம் போன்ற மொட்டு' 'இலை போன்ற தட்டு' என்றமையாது 'பம்பர மொட்டு' 'இலை தட்டு' என உருவகப்படுத்தி குழந்தைகளை மகிழ்விக்கிறார்.

**வேற்றுமை அணி:**

ஒப்புமை உடைய இருபொருட்களுக்கு இடையே வேற்றுமை தோன்றப் பாடுவது வேற்றுமை அணி.

''அன்றொரு நாள் ஆடுகையில்
நான் இழந்த பந்து
பின்னொரு நாள் தேடுகையில்
மீண்டும் வந்த துண்டு
........ .......... ........... ...........
அன்றொரு நாள் சோம்பலிலே
நான் இழந்த காலம்
என்னருமை வாழ்க் கையிலே
இன்னொரு நாள் வருமா?''[37]

மேற்கண்ட பாடலில் இழந்தவற்றைத் திரும்பிப் பெறலாம். ஆனால் இழந்த காலத்தைத் திரும்பிப் பெற இயலாது எனப் பாடுகிறார் கவிஞர். பந்து, காலம் இரண்டையும் இழக்கலாம். ஆனால் பந்து மீண்டும் கிடைக்கும். இழந்த காலம் மீண்டும் கிடைக்காது என்பதை வேற்றுமைப்படுத்திக் காட்டுகிறார் கவிஞர். இப்பாடலில் வேற்றுமை அணியை உத்தியாகப் பயன்படுத்தியுள்ளார்.

**சிலேடை அணி:**

ஒரே சொல் இருமுறை வந்து வெவ்வேறு பொருளைத் தருவது சிலேடை அணி.

''குன்றின் மேல் இருக்கும்
குன்றக்குடி தெய்வம்
ஆறுதலைக் கொடுக்கும்
ஆறுதலைத் தெய்வம்.''[38]

ரா. பொன்ராசனின் இப்பாடலில் 'ஆறுதலை' என்ற சொல் இருமுறை வந்துள்ளது. 'ஆறுதல்' கொடுக்கும் என்ற பொருளிலும் 'ஆறு தலைகள்' என்ற பொருளிலும் நயமாக அமைத்துள்ளார். சிலேடை அணி என்பதும் ஒரு வகை உத்தி.

**சொற்பொருள் பின்வருநிலையணி:**

வந்த சொல் மீண்டும் மீண்டும் வந்து அதே பொருளைத் தருவது சொற்பொருள் பின்வரு நிலையணி. குழந்தைப் பாடல்களில் இவ்வுத்தி அதிகம் பயன்படுவதைக் காண்கிறோம். காரணம், இளம் குழந்தைகளின் மனப்பதிவிற்கு இத்தகைய உத்தி அவசியம்.

''பாட்டுப் பாடுவேன்—நான்
பாட்டுப் பாடுவேன்
பலரும் புகழ, இனிய தமிழில்
பாட்டுப் பாடுவேன்.
......... ............ ..........
குழலை ஊதுவேன்—புல்லாங்
குழலை ஊதுவேன்.

கோகு லத்துக் கண்ணன் போலக்
குழலை ஊதுவேன்
குழலை ஊதுவேன்''[39]

'பாட்டுப் பாடுவேன்' 'குழலை ஊதுவேன்' என்ற சொற்றொடர்கள் மீண்டும் மீண்டும் ஒரே பொருளில் வந்து சொற்பொருள் பின்வருநிலையணி ஆனது.

**வேற்றுப் பொருள் வைப்பணி:**

கவிஞர் தாம் கூறும் கருத்துக்கு உலகறிந்த பொதுக் கருத்தை அரணாகக் கூறுவது வேற்றுப் பொருள் வைப்பணி. அதனையும் குழந்தைப் பாடல் உத்தியாகக் கவிஞர் சிலர் அமைத்துப் பாடியுள்ளனர்.

''மயிலாப் பூருத் தெப்பக்குளம்!
மலர்கள் நெறைஞ்ச தெப்பக்குளம்!
.......... .......... .......... .......
நீரின் மட்டம் மேல் வந்தால்
நீண்டு வளரும் அல்லிப்பூ
வெள்ளத்(து) உயரம் போலவே
விரைந்து வளரும் பூவைப்போல்
உள்ளத்(து) ஊக்கம் போலவே
உயர முடியும் வாழ்விலே!''[40]

மேற்கண்ட பாடல் குழந்தைகளுக்குத் தெரிந்த குளம், அல்லிப்பூ ஆகியவற்றை உவமைகாட்டி, உள்ளத்து உயர்வுக்கு ஊக்கமே காரணம் என்பதை ''வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத் தனைய(து) உயர்வு'' என்ற வள்ளுவர் குறள் வழி நிறுவுகிறது.

அணி என்பது கவிதைக்கு அழகூட்டுவதுடன் குழந்தைகளை விரும்பிப் படிக்கச் செய்யும் உத்தியாக சிறுவர் பாடலில் அமைந்திருத்தலைக் காண்கிறோம்.

மேலும் இலக்கணத்தில் இடம்பெறும் சுட்டு, மரபு, ஒலிப் பிழையற்ற சிறந்த உச்சரிப்பு ஆகியவற்றைக் கவிஞர்கள் உத்தியாக்கிக்

குழந்தைகள், இலக்கணப் பிழையின்றிப் பாடியும் பேசியும் மகிழ வழி செய்கின்றனர்.

### 3.2.3. சுட்டு:

அருகில் இருப்பது அண்மைச் சுட்டு, தொலைவில் இருப்பது சேய்மைச் சுட்டு எனச் சொல்வதினும் அதனைப் பாடலாய்த் தருகையில் குழந்தைகள் விரும்பிப் பயில்வர்.

''குதித்து குதித்து ஓடும்
குதிரை அதோ பாராய்
அசைந்து அசைந்து செல்லும்
ஆனை இதோ பாராய்
பறந்து பறந்து போகும்
பருந்து அதோ பாராய்.
நகர்ந்து நகர்ந்து செல்லும்
நத்தை இதோ பாராய்''[41]

பாடல் வழி குழந்தை அருகில் இருப்பதை 'இதோ' எனவும் தொலைவில் இருப்பதை 'அதோ' எனவும் சொல்லப் பழகிவிடும்.

### 3.2.4. மரபு:

முன்னோர் எச்சொல்லால் வழங்கினரோ, அச்சொல்லால் வழங்குதல் மரபு. மரபுச் சொற்களைக் குழந்தைகளுக்குப் பாடல்வழி அறிமுகப்படுத்தலைக் கவிஞர் சிலர் உத்தியாகக் கையாண்டனர்.

''கரையும் பறவை காக்கை—இரவில்
கத்தும் பறவை கோட்டான்.
அலறும் பறவை ஆந்தை—தினம்
அகவும் பறவை மயிலாம்.
பேசும் பறவை கிளியாம்—இனிதாய்
கூவும் பறவை குயிலாம்.
கொக்க ரிக்கும் கோழி—சற்றே
கீச்சுக் கீச்சிடும் சிட்டு.''[42]

பறவையின் ஒலிகள் மரபு வழக்காக வழங்கப்படும் விதம் பாடல்வழி அறிந்து கொள்வதால் எளிதில் குழந்தைகள் மனதில் பதியும்.

### 3.2.5. உச்சரிப்பே உயிர் நாடி:

தமிழ் மொழியின் உச்சரிப்பே தமிழின் உயிர்நாடி. ஒலிகளை வேறுபடுத்திப் பேசவும் எழுதவும் குழந்தைகளைப் பழக்க பாடலில் உச்சரிப்பு உத்திகளை (ஒலி உத்திகளை)க் கவிஞர்கள் பயன்படுத்தினர். துல்லியமான ஒலி வேறுபாடுகளை உணர்ந்து பேசும் குழந்தையால் பிழையின்றி எழுத இயலும். எனவே மொழியைப் பிழையறப் பேசவும் எழுதவும் உரிய பாடல்கள் குழந்தைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

''குணமான நீதி விளக்கும்–அறம்
கூரேற்றும் இரும்புக் கருவி–அரம்
துணிவான போரில் விளங்கும்–மறம்
சுவைக்கனி காய்பூக்கள் கொடுக்கும்–மரம்
பழகு மீனைப் பிடிக்கும் நெய்த–வலை
பதுங்குவரப்பில் தோண்டும் எலிகள்–வளை
அழகுணர்ச்சித் தொழிலில் மிளிரும்–கலை
அருமைமிகு பயிரைக் கெடுக்கும்–களை
இலைவிரித்துக் காய்க்கும் பச்சை–வாழை
இரைபிடிக்க நீந்தும் குளத்தில்–வாளை
உலைக்களத்தில் கொல்லர் செய்வார்–ஆணி
ஓராண்டின் மூன்றாம் மாதம்–ஆனி''[43]

### 3.3. இலக்கிய உத்தி:

இலக்கண அடிப்படையில் அமைந்த இலக்கியங்களைப் படைக்கும் கவிஞர்கள் பொருள் உத்தி, அமைப்பு உத்தி ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 3.3.1. பொருள் உத்தி:

பாடுபொருளின் சிறப்பால் குழந்தைகளைக் கவர்ந்திழுக்கக் கவிஞர்கள் சில உத்திகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**1. பேசாப் பொருளிடம் பேசுதல்:**

குழந்தை உள்ளம் தான் காணும் பொருட்கள், விலங்குகள், பறவைகள் அனைத்தையும் நட்பாகக் கருதக்கூடியது. எனவே குழந்தைகள் பேசாப் பொருளிடம் பேசுவதைக் கவிஞர்கள் தங்கள் பாடலில் உத்தியாகக் கையாள்கின்றனர்.

இதனைத் தொல்காப்பியர்,

> ''ஞாயிறு திங்கள் அறிவே நாணே
> கடலே கானல் விலங்கே மரனே
> புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
> அவையல பிறவும் நுவளிய நெறியால்
> சொல்லுந போலவும் கேட்குந போலவும்
> சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர்''[44]

என்கிறார்.

> ''சின்ன எறும்பே! சிற்றெறும்பே!
> சேமிக்கத் தூண்டும் புற்றெறும்பே!
> தின்ன இனிப்பை நான் தருவேன்
> சேதி ஒன்றைச் சொல் எறும்பே!
> பொங்கும் பாகில் செய்திட்ட
> புத்தம் புதிய அதிரசத்தை
> எங்கோ அம்மா ஒளித்திட்டாள்
> இன்றே கண்டுபிடி எறும்பே!''[45]

இப்பாடலில் குழந்தை நட்புடன் எறும்பிடம் பேசுவதாகவும் பதில் சொல்லுமாறு கேட்பதாகவும் கவிஞர் பாடியுள்ளார்.

> ''நண்டு மாமா! நண்டு மாமா!
> சுண்டு விரல் எங்கே மாமா!
> கூரை யில்லா வீட்டுக்குள்ளே
> வசிக் கின்ற நண்டு மாமா!''[46]

நண்டை மாமாவாக உறவு கொண்டாடுகிறது குழந்தை. இதுபோல 'மயிலக்கா', 'குயிலக்கா' என்று உறவு முறையிலும் தவளையார், குரங்கார், பூனையார், ஆமையார் என்று உயர்திணைக்குரிய 'ஆர்' விகுதி கொடுத்தும் பாடப்படும் பாடல்கள் குழந்தைகளைக் கவரும் உத்தியாகும்.

**2. ஆளுருவாக்கம்:**

விலங்குகளையும், பறவைகளையும் உறவு கொண்டாடிப் பேசி மகிழ்ந்த குழந்தை, அவை மனிதர்கள் போன்று செயல்படுவதாகக் கருதிப் பாடுவது ஆளுருவாக்கம். இத்தகைய உத்தியைக் கவிஞர் சிலர் கையாண்டுள்ளனர்.

''பத்துக் காக்கா கூடிக்கிச்சாம்
பள்ளிக் கூடம் நடத்துச்சாம்.
பழுத்த கிழக் காக்கையைப்
பாடம் நடத்தச் சொல்லிச்சாம்
பழைய கோட்டு முதுகிலே
பஞ்ச கச்சம் இடுப்பிலே
கிழிஞ்ச தொப்பி தலையிலே
கிழட்டுக் காக்கை மாட்டியே
கம்பு எடுத்து வந்துச்சாம்
காக்கை எல்லாம் பறந்துச்சாம்
வம்பு எதற்கு என்றுமே
வாத்தி யாரும் சென்றாராம்!''[47]

காக்கைகள் பள்ளிக் கூடத்தில், காக்கை வாத்தியார் கோட்டும் பஞ்சகச்ச வேட்டியும் கட்டிவந்த காட்சி குழந்தைகளை மகிழ்வுடன் பாடவைக்கும் உத்தியாகும்.

கடிகார முட்களை அண்ணன் தம்பியாகக் காணும் குழந்தையின் இயல்பை மனதில் கொண்டு, அவற்றிற்கு இடையே ஓட்டப்பந்தயம் நடைபெறுவதாக,

''பெரிய முள்ளே அண்ணாச்சி
சின்ன முள்ளே தம்பிப்பயல்
குறுகிய வட்டம் மைதானம்
குடுகுடு ஓட்டம் அதுக்குள்ளே
தம்பிப் பயலை விட்டுவிட்டுத்
தனியே ஓடும் அண்ணன்போல்
கம்பி நீட்டுவது பெரியமுள்ளு
களைப்புடன் வருவது சின்னமுள்ளு!''[48]

என்று பாடுகிறார் சுப்பு ஆறுமுகம். உருவகமும் உவமையும் கொண்ட இப்பாடல் தினமும் காணும் கடிகாரத்தைப் பார்த்ததும் குழந்தையைப் பாட வைக்கும் உத்தி.

**3. உறவு அமையப் பாடுதல்:**

உறவுகளைப் பார்ப்பதும் பேசுவதும் குழந்தைகளுக்கு உற்சாகம் தருவன. அந்த உறவுகளைப் பற்றிப் பாடுவதும் மகிழ்ச்சி தரும் என்பதால், உறவுகளிடம் உரிமை கொண்டாடும் விதத்தை உத்தியாக்கினர் கவிஞர்கள்.

''பட்டணத்தைப் பார்க்க போகும்
சின்ன மாமா—இந்தப்
பையனை நீ மறந்திடாதே
சின்ன மாமா.
பாப்பாவுக்கு ஊதுகுழல்
சின்ன மாமா—அந்தப்
பட்டணத்தில் வாங்கி வாராய்
சின்ன மாமா''

இப்படித் தொடங்கிய பாடலில், 'அக்காளுக்கு ரப்பர் வளை' 'அம்மாவுக்குப் பெங்களூருச் சேலை' 'அப்பாவுக்குச் சட்டைத்துணி' 'தாத்தாவுக்குத் தந்தப் பிடிக் கம்பு' 'பாட்டிக்குப் பல்வரிசை' எனத் தொடர்ந்து முடிவில்,

''எனக்கும் ஒரு சைக்கிள் வண்டி
சின்னமாமா–நீ
இல்லையென்றால் விடவே மாட்டேன்
சின்ன மாமா''[49]

என்று குழந்தைகள் தங்கள் உறவு முறைகளைப் பாடுவதுடன், அவரவர் வயதுக்கேற்ற தேவையான பொருட்களை வாங்கி வரச் சொல்லி, மாமாவிடம் உரிமையுடன் கேட்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. குழந்தைகள் இயல்பாகவே மாமாவிடம் உரிமை கொண்டாடக் கூடியவர்கள். குழந்தைகள் தனக்கான பொருளை மட்டும் கேட்காது கூட்டுக் குடும்பத்தில் உள்ள அனைவருக்குமான பொருட்களைக் கேட்பது குழந்தைகளின் பரந்த மனப்பான்மையை வளர்ப்பதற்கான உத்தி.

மேலும் 'அம்மா', 'அப்பா', 'தாத்தா', 'பாட்டி', 'தம்பி', 'அண்ணன்', 'தங்கை', 'அக்கா', 'பாப்பா', 'மாமி' என உறவு முறைகளைப் பாடுகின்ற பாடல்கள் குழந்தைப் பாடல்களில் மிகுதியாகக் காணலாம்.

**4. வேண்டுதல்:**

குழந்தைகளிடம் 'செய்' என்று கட்டளை இடுவதைக் காட்டிலும் 'செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கூறுவது நல்ல பலனளிக்கும். எனவே கவிஞர்கள் இத்தகைய உத்தியைப் பயன்படுத்துகின்றனர்.

''கண்கள் இரண்டு
கொண்டு நாம்
காண வேண்டும்
அதிகமாய்
காது இரண்டு
கொண்டு நாம்
கேட்க வேண்டும்
அதிகமாய்
ஒரே வாயைக்
கொண்டு நாம்

உரைக்க வேண்டும்

கொஞ்சமாய்!''[50]

என்ற நல்லதம்பியின் பாடல் கண்களாலும் காதுகளாலும் கண்டும் கேட்டும் பயனுற வேண்டும்; வீண் பேச்சைக் குறைக்க வேண்டும் என்று குழந்தைகளிடம் நயமாகக் கூறுவதாக அமைந்துள்ளது.

**5. நேர்மறை, எதிர்மறையில் பாடல்கள்:**

குழந்தைகள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் 'நல்லது கெட்டது எவை? எவற்றைப் பின்பற்ற வேண்டும்? எவற்றைத் தவிர்க்க வேண்டும்?' என்பதை எடுத்துச் சொல்லும் கடமை உடையவர்கள் கவிஞர்கள். எனவேதான் தங்கள் பாடல்களில் நல்ல பழக்கங்களை நேர்மறையிலும் எதிர்மறையிலும் எடுத்துச் சொல்லும் உத்தியைக் கையாள்கின்றனர்.

''பூவிடம் சிரிக்கக் கற்றுக் கொள்!

புறாவிடம் ஒழுக்கம் கற்றுக் கொள்!

தீயிடம் எழுச்சியைக் கற்றுக் கொள்!

தாயிடம் அன்பைக் கற்றுக் கொள்!

எருதிடம் உழைப்பைக் கற்றுக் கொள்!

எறும்பிடம் சேமிக்கக் கற்றுக் கொள்!

நரியிடம் தந்திரம் கற்றுக் கொள்!

நாயிடம் நன்றியைக் கற்றுக் கொள்!''[51]

நம்மைச் சுற்றியிருக்கும் உயிரினங்களிடம், நாம் சிறப்பாகக் காணும் பழக்கங்களைக் கற்றுக்கொள்ள வேண்டும் எனும் நேர்மறை உத்தியை இப்பாடலில் காண்கிறோம்.

''பொய்யைப் பேசல் கூடாது

பொல்லாச் செயல்கள் கூடாது

வைதல் என்றும் கூடாது

வாய்மை தவறக் கூடாது

தீய நடத்தை கூடாது.

திருடு வதுமே கூடாது.

தாயைப் பழித்தல் கூடாது.

தப்பு செய்தல் கூடாது.

.... .... ....

கற்றது மறத்தல் கூடாது.

கடமை தவறக் கூடாது.''[52]

என்பது கொ.மா. கோதண்டம் எழுதிய பாடல். எதிர்மறையில் சொல்வதைக் காட்டிலும் நேர்மறை அணுகுமுறையே குழந்தைக்குச் சிறந்தது. எனினும் கவிஞர்கள் சிலர் இத்தகைய உத்தி அமையச் சில பாடல்கள் பாடியுள்ளனர்.

**6. கற்பனை:**

கவிஞர்கள், குழந்தைகளின் எதிர்காலம் பற்றிய கற்பனை, அதீதக் கற்பனை என்று இரு நிலைகளில் கற்பனையை அமைத்துப்பாடும் உத்தியினைக் காண்கிறோம்.

**எதிர்காலக் கற்பனை:**

''மனித வாழ்க்கைக்குக் கற்பனை இன்றியமையாதது. நேற்றைய அனுபவங் கொண்டு நாளைய வாழ்வு எப்படி அமைய வேண்டும்? எனக் கற்பனை செய்து திட்டமிடுதலை இன்றைய கடமையாகக் கருதுகின்றனர். குழந்தைப் பருவத்தில்தான் கற்பனை வளமாக உள்ளது. கலைஞர்களாலும் கவிஞர்களாலும் கற்பனை விளக்கம் பெறுகிறது.''[53] என்கிறார் கதி. கணேசன்.

குழந்தைகள் சிறுவயதில் விளையாடும் விளையாட்டுக்களே அவர்களின் கற்பனை வெளிப்பாடுதான்.

மருத்துவர், வழக்கறிஞர், நடிகர், காவலர், ஆசிரியர், குடும்பத் தலைவர், குடும்பத் தலைவி என குழந்தைகள் தம்மைக் கருதிக் கொண்டு விளையாடுவர். அவர்களுக்குப் பிடித்த விளையாட்டையே கவிஞர்கள் தங்கள் பாடல் உத்தியாக அமைத்துப் பாடல் இயற்றினர்.

''டாக்ட ராக நானிருந்தால்

நாடி பிடித்துப் பார்த்திடுவேன்.

நாக்கை நீட்டு என்றிடுவேன்

நன்றாய் ஊசி போட்டிடுவேன்.

வாத்தி யாராய் நானிருந்தால்

வகுப்பில் பாடம் நடத்திடுவேன்.

பார்த்துப் பரீட்சை எழுதுகிற

பைய னுக்குச் சுழித்திடுவேன்.

வக்கீ லாக நானிருந்தால்

வழக்கை நன்றாய் நடத்திடுவேன்.

டக்டக் கென்று பொய்யர்களை

நாலே கேள்வியில் மடக்கிடுவேன்.

நடிக னாக நானிருந்தால்

நாடகம் சினிமா வானொலியில்

'அடடா' என்று மெச்சிடவே

அற்புத மாக நடித்திடுவேன்.

சிப்பா யாக நானிருந்தால்

துப்பாக் கியுடன் இருந்திடுவேன்

எப்போ தும்நான் துணிச்சலுடன்

எதிரிகள் ஓடச் செய்திடுவேன்.

போலீ சாக நானிருந்தால்

பொல்லாத் திருடனைப் பிடித்திடுவேன்

காலிச் சிறைக்குள் தள்ளிடுவேன்.

கம்பி எண்ணச் செய்திடுவேன்.''[54]

*'எந்த வேலை செய்கிறோமோ, அந்த வேலையில் சிறப்பாகச் செயல்பட வேண்டும்' என்பதைக் குழந்தைக்கு உணர்த்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

''அப்பா போடும் ஜிப்பாவை

அணிவேன் நானும் அழகாக

அப்பாவைப் போல் மாறிடுவேன்

அதிகா ரங்கள் செய்திடுவேன்

.......................................

நேரம் கழித்து வரும் அண்ணா
நிற்பான் என்முன் கைகட்டி
'இத்தனை நேரம் ஆனதுஏன்?'
என்றே கேட்பேன் மிடுக்கோடு.
அக்காள் வருவாள் அவசரமாய்
அறுபது ரூபாய் கேட்டிடுவாள்
'அப்படி அவசரச் செலவென்ன?
சொன்னால் தருவேன்' என்பேன்நான்.''[55]

*என்று ஆண் குழந்தை கற்பனையில் பாட, பெண் குழந்தை அம்மாவாகக் கற்பனை செய்து கொண்டு பொம்மையிடம் பேசுகிறது.*

''சின்னக் குடம் ஒன்றெடுத்து
சிறிதளவே நீர்நிறைத்து
அன்னையென நான்உனக்கு
ஆவலுடன் நீராட்டி
கண்ணைப் பறிக்குமிந்த
கண்ணாடிக் கிண்ணத்தில்
உண்ணத்தான் சிறிதளவே
உணவெடுத்து பாங்காக.......''[56]

*சிறிய வயதில் அப்பா, அம்மாவாகக் கற்பனை செய்து பாடும் குழந்தை சற்று வளர்ந்ததும், சான்றோர் வரலாற்றைக் கற்றும் கேட்டும் அறிந்து கொள்கிறது. அவர்களைப் போல வாழ வேண்டும் என்றும் கற்பனை செய்கிறது.*

''நானும் கூட காந்திபோல
ஆகப் போகிறேன்.
நாளும் அகிம்சை வழியினிலே
நடக்கப் போகிறேன்
நானும் கூட நேருபோல
ஆகப் போகிறேன்
நாளும் சமாதானம் பேசி
வாழப் போகிறேன்.''[57]

**அதீதக் கற்பனை:**

குழந்தைகள் தொலைக்காட்சி, திரைப்படங்களில் காணும் மாய மனிதர்களைப் போல, அற்புத நிகழ்வுகளைப் போல தாங்களும் ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் உடையவர்கள். குழந்தை உளவியல் உணர்ந்த கவிஞர்கள் அதீதக் கற்பனை உத்தி கொண்ட பாடல்களை இயற்றினர்.

> ''என்னிடம் மாய ஜமுக்காளம்
>
> இருந்தால் அதனால் என் செய்வேன்?
>
> உங்களை ஏற்றிச் சென்றிடுவேன்
>
> உலகைச் சுற்றிக் காட்டிடுவேன்
>
> கங்கை, யமுனை, காவேரி
>
> கடல்கள், மலைகள் கடந்திடுவேன்
>
> ........... .............. ..............
>
> என்னிடம் மந்திரக் கோல்ஒன்றும்
>
> இருந்தால் அதனால் என்செய்வேன்?
>
> மண்ணைப் பொன்னாய் மாற்றிடுவேன்
>
> வாரி வாரிக் கொடுத்திடுவேன்
>
> சின்னஞ் சிறிய குடிசைகளைச்
>
> சிறந்த மாளிகை ஆக்கிடுவேன்.''[58]

இவ்வகை உத்தி குழந்தைகளின் கற்பனை ஆற்றலை வளப்படுத்தி வளர்க்க உதவும்.

**7. சிந்தனைத் தூண்டல்:**

அறிவு வளர்ச்சிக் கூறுகளில் ஒன்று சிந்தனை. குழந்தைகளைச் சிந்திக்க வைக்கும் ஆற்றல் கவிஞர்களுக்கு உண்டு. குழந்தைகளின் சிந்தனையைத் தூண்டும் வகையில் பாடல் எழுதுவதை ஓர் உத்தியாகப் பயன்படுத்தினர்.

> ''என்ன? ஏன்? எதற்கு?
>
> எங்கே? எப்படி? என்று
>
> சின்னத் தம்பி கேளு!

சிறந்த கேள்வி கேளு!

கேட்டால் அறிவே வளரும்

கேள்வியால் உன்திறன் தெரியும்!

......... ............ .............

பதிலால் சிந்தனை வளரும்

பகுத்தறி வேதான் வளரும்!''[59]

*சிந்தனைகளைத் தூண்டுவதற்கான வழி வினா எழுப்புவது என்பதைக் கவிஞர் பாடல்வழி கூறுகிறார்.*

*கேட்டதை அப்படியே ஏற்றுக் கொள்ளாது ஆய்ந்து பார்த்தல் அவசியம் என்பதும் குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டும்.*

''ஏனென்று கேள் தம்பி

எதற்கென்று கேள் தம்பி

ஆன்றோர் சொன்ன தென்றாலும்

அறிவால் பகுத்துப் பார் தம்பி

கண்ணை மூடி நம்பாதே!

கவிழ்ந்து தலையை ஆட்டாதே!

உண்மைப் பொருளை அறிதம்பி!

உலகைப் புரிந்து நடதம்பி!''[60]

*அறிவால் பகுத்துப் பார்ப்பதன் அவசியத்தைப் பாடல் வழி குழந்தை அறிந்து கொள்கிறது.*

''கிளிக்குப் பசுமை கொடுத்தவர் யார்?

காக்கைக்குக் கருமை கொடுத்தவர் யார்?

குருதிக்குச் சிவப்புக் கொடுத்தவர் யார்?

கொக்கிற்கு வெண்மை கொடுத்தவர் யார்?

வானுக்கு நீலம் வழங்கினோர் யார்?

தேனில் இனிமை சேர்த்தவர் யார்?

....... ........... ........... ...........

சூடும் குளிரும் தந்தவர் யார்?

சூரிய சந்திரர் தந்தவர் யார்?

அவரைக் கடவுள் என்று சொல்வார்
அவரே உலகைப் படைத்த வராம்.''[61]

குழந்தைகளுக்கு இயல்பாகத் தோன்றும் ஐயங்களைப் பாடலாக்கி, அவர்களின் சிந்தனையை மேலும் தூண்டுவதைக் கவிதை உத்தியாக்கினர் கவிஞர்கள்.

''இந்த மரம் ஏது?
என்று எண்ணிப் பார்த்தேன்.
'இதற்கு வித்து உண்டு
விதைத்தால் மரமாய் வளரும்.'
என்று ஒருவன் சொன்னான்.
உடனே எண்ணிப் பார்த்தேன்.
'அந்த வித்து எது?'
அதற்கு மரமே வேண்டும்.
வித்து முன்னே என்பதா?
மரம் முன்னே என்பதா?
இதனை அறிய மாட்டேன்
இறை வனுக்கே விட்டேன்.''[62]

விடை காண முடியாத வினாவைக் கடவுளிடம் விடும் குழந்தையின் இயல்பு இங்கு உத்தியாக அமைந்தது.

''பாம்பு தன்னைக் காத்துக் கொள்ள
பல்லில் நஞ்சும் உண்டு.
முள்ளம் பன்றி காத்துக் கொள்ள
முள்ளும் உடலில் உண்டு.
என்னை நானும் காத்துக் கொள்ள
எனக்கு என்ன உண்டு?
எண்ணிப் பார்க்கும் சக்தி வாய்ந்த
இதயம் உண்டு! உண்டு!''[63]

இவ்வாறு குழந்தைகளின் கற்பனை ஆற்றலை வளப்படுத்தியது போல, சிந்தனை ஆற்றலும் வளப்படுத்தப்படுகிறது.

8. புதிய சொல்லாக்கம்:

காரணப் பெயர், இடுகுறிப்பெயர் எனப் பெயர்களைப் பகுப்பர். குழந்தைகள் அவர்களுக்கே உரிய முறையில் சிலவற்றிற்குப் பெயர் வைப்பர். குழந்தைகளின் இப்பண்பினை உணர்ந்த கவிஞர்கள் புதிய சொற்களைப் படைக்கும் உத்தியினைக் கையாண்டனர்.

'விமானம்' என்ற சொல் 'பறவைக் கப்பல்' 'எந்திரப் பறவை' என்ற பெயரில் குழந்தைப் பாடலில் இடம்பெற்றுள்ளது.

''அதோ அதோ பறவைக்கப்பல்
ஆகா யத்தில் செல்லுது!
........ ....... ......
வெள்ளைப் பறவை போல அதுவும்
மேலே நமக்குத் தோன்றுது''[64]

''எந்திரப் பறவை என்போல
எங்கே உண்டு சொல்லுங்கள்!
........ ......... ...........
என்னைப் போல வேகமுடன்
எந்த வண்டியும் செல்லாது!''[65]

குழந்தைப் பாடலில் கப்பல் 'நகரும் நகரம்' என்ற புதிய சொல்லால் குறிப்பிடப்படுவதைக் காண்கிறோம்.

''ஆடும் அலைகடல் நடுவினிலே—பார்
அழகாய் ஒருநகர் மிதக்கிறது
ஆடும் களங்கள் அங்குண்டு
பாடும் திரை அரங்குண்டு!
அறைகள் உணவு விடுதியுடன்
அற்புத நூலக இடமுண்டு
நகரும் நகரம் கப்பல் தான்!''[66]

இதேபோல் காற்றாடியைப் 'பறவை' என்கிறார் கவிஞர் ஆர்.பி. சாரதி.

''வானில் பறந்தாலும்

வட்டமிடும் கழுகல்ல;

வாலோடு திரிந்தாலும்

வாயுமகன் நானல்ல!

....... .........

பாலுவின் கைத் திறத்தால்

பறக்கும் நான் காற்றாடி!''[67]

**9. ஒலி நயம்:**

ஒலியை அடிப்படையாகக் கொண்டு உருவாவது வண்ணம். வண்ணம் என்பது பாடல்களில் ஒரே வகையான ஒலி பயின்று வருவது. இதனைத் தொல்காப்பியர்,

''வண்ணந் தானே நாலைந் தென்ப''[68]

என்கிறார். யாப்பருங்கலக் காரிகை முதலான இலக்கண நூல்கள் வண்ணத்தை நூறாகக் காட்டுகின்றன.

ஒலியால் ஈர்க்கப்பட்டு, பாடலில் கவனம் செலுத்தும் தன்மை கொண்ட குழந்தைகளைக் கவர வண்ணங்களைப் பயன்படுத்துவதைக் கவிஞர்கள் உத்தியாகக் கொண்டனர்.

''பாட்டி நல்ல பாட்டி!

படித்த எங்கள் பாட்டி

பாட்டில் ராகம் கூட்டி

பாட்டுப் பாடும் பாட்டி''[69]

இப்பாடலில் வல்லெழுத்து வண்ணம் இடம்பெற்றுள்ளது.

''வள்ளி வள்ளி வள்ளி

வள்ளி கொலுசு வெள்ளி

பள்ளி பள்ளி பள்ளி

பள்ளி செல்வோம் துள்ளி''[70]

இப்பாடலில் இடையெழுத்து வண்ணம் அமைந்துள்ளது.

''தேனீ தேனீ சோலையிலே
தேனைத் தேடி எந்நாளும்
ஏன்நீ சென்றே இளைக்கின்றாய்
என்ன பயனைக் காண்கின்றாய்?''[71]

இப்பாடலில் மெல்லெழுத்து வண்ணம் இடம்பெற்றுள்ளது.

குழந்தைப் பாடலில் இடம்பெறும் வண்ணங்கள் உணர்ச்சியையோ, சூழலையோ வெளிப்படுத்த அமைந்தவையாக இல்லை. ஒலிநயம் மற்றும் மனப்பதிவிற்கானவையாக அமைந்துள்ளன.

ஒலிநயம் மிக்க பாடல்களில் பொருள் பொதிந்தவையாகவும் பொருளிலிப் பாடல்களாகவும் குழந்தைகளுக்கு எழுதும் உத்தியினைக் கவிஞர்கள் கையாளக் காண்கிறோம்.

''ராஜா மகளோ ராணி—அந்த
ராணி பேரோ வாணி
வாணி தோழி வேணி—அவள்
வருவாள் நாணிக் கோணி''[72]

இத்தகைய பொருள் பொதிந்த ஒலிநயம் மிக்க பாடல்கள் தமிழ் மொழியில் பல உள்ளன.

ஆங்கில மொழித் தாக்கத்தால் ஒலிநயம் மிக்க பாடல்கள் பொருளிலிப் பாடல்களாகவும் சில இடம்பெற்றுள்ளன.

''தங்க ரத்னம் தகரப்பெட்டி
நான் வளர்த்தது பூனைக்குட்டி
........ ........... ...........
வெத்தலைக்கட்டு விரியக் கட்டு
தோட்டத்துக் காரனைப் புடுச்சுக்கட்டு''[73]

இது ஒலி நயத்திற்காக மட்டும் எழுதப்பட்ட பாடல்.

**10. ஒத்துணர்வு உத்தி:**

குழந்தைகள் காண்பவற்றையும் கேட்பவற்றையும் அவர்கள் உணர்வுடன் இணைத்துக் காண்பது ஒத்துணர்வு. இந்த ஒத்துணர்வினைக் கவிஞர்கள் குழந்தைப் பாடல் உத்தியாகக் கையாள்கின்றனர்.

''சிட்டுக் குருவிகளைக் கண்டால், எனக்குச்
சிறகு முளைக்குது தம்பி!
கொட்டும் முரசொலி கேட்டால்–நெஞ்சம்
கூத்தாடித் துள்ளுது தம்பி!
........ .......... .............
சீறும் புலிகளைக் கண்டால்–எனக்குச்
சீற்றம் பிறக்குது தம்பி!''[74]

குருவிகளைக் கண்டதும் சிறகு முளைப்பது, முரசொலி கேட்டு நெஞ்சம் கூத்தாடுவது, புலி கண்டு சீற்றம் பிறப்பது இவை எல்லாம் ஒத்துணர்வு உத்தி.

**11. புலன் மாற்று உத்தி:**

ஒரு புலனால் நுகர வேண்டியதை மற்றொரு புலனால் நுகர்ந்ததாகப் பாடுதல் புலன் மாற்று உத்தி.

''இனிக்கப் புகைந்திடும் வத்தி
இரும்பால் செய்வது கத்தி''[75]

இனிப்புச் சுவையை உணர்வது நாக்கு. ஆனால் இப்பாடலில் மூக்கால் நுகரும் நறுமணத்திற்கு இனிக்கப் புகைவது எனச் சுட்டியிருப்பது புலன் மாற்று உத்தி.

''ஆறு நிறைகின்ற போது–நெஞ்சம்
ஆற்றினில் மூழ்குது தம்பி''[76]

நெஞ்சம் ஆற்றில் மூழ்குவதாகப் பாடியிருப்பது புலன் மாற்று உத்தி.

**12. குறிப்பு:**

'உள்ளுறை உவமம்', 'இறைச்சி' என இலக்கண நூலார் குறிப்பவற்றைப் போன்று குழந்தைப் பாடல்களிலும் குறிப்பாகச் சில கருத்துக்களைக் கூறும் உத்தியைக் காணலாம்.

> ''சிறிய சிறிய திவலைகள்
> சேர்ந்தால் வெள்ளம் ஆகிவிடும்
> சிறிதாய் அமைந்த மணல்எல்லாம்
> சேர்ந்தே பாலை வனமாகும்
> சிறிய சிறிய முயற்சிகளைச்
> சேர்த்தால் எதுவும் வென்றிடலாம்
> சிறிய சிறிய தடைபலவே
> சேரின் அரிதாம் எத்தொழிலும்''[77]

வெள்ளம் போல் வெற்றி நம்மை நாடி வரவும், தடைகளால் வாழ்வு பாலைவனமாகாதிருக்கவும் சிறிய சிறிய நிகழ்வுகளில் கவனம் செலுத்த வேண்டும் எனும் உட்பொருளைக் கவிஞர் நயமாகக் கூறுகிறார்.

**13. நகைச்சுவை:**

'வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப் போகும்' என்பர். குழந்தைகள் நகைச்சுவையை விரும்புவர். எனவே குழந்தைப் பாடல்களில் நகைச்சுவையை ஒரு உத்தியாகப் பயன்படுத்தினர்.

> ''கள்ளப்பையன் கொசுவே—காதில் வந்து
> கசுகசு என்னாதே!
> என்னைக் கடித்தக்கால்—கொசுவே உன்
> பல்லைப் பிடுங்கிடுவேன்.''[78]

கொசுவைப் பிடிப்பதே அரிது. அதிலும் அதன் பல்லைப் பிடுங்க இயலுமா? அதற்குப் பல் இருக்கிறதா? போன்றவை நகைப்புக்குரியன.

> ''சுண்டல் எல்லாம் தருவேனே
> சுகமாய் நீயும் தின்பாயே

மண்டு என்பார் என்னையே

மாற்றிச் சொல்ல அருள்வாயே.''[79]

இறைவழிபாட்டில் கூட குழந்தைகளின் இயல்பினை நகைச்சுவையாக அமைத்துள்ளார் கவிஞர்.

**14. சங்கிலித் தொடர்:**

வார்த்தைகளைச் சங்கிலித் தொடராய் அமைத்துப் பாடப்படும் உத்தி நாட்டுப்புறப் பாடல்களில் அதிகம் காணப்படும். அதைப் போல் சிறுவர் பாடல்களிலும் காணப்படுகிறது.

''நிலா நிலா எங்கே போனாய்?
மணியாங் குளத்துக்கு மண் எடுக்கப் போனேன்
மண் எதற்கு? சொப்பு பண்ண
சொப்பு எதற்கு? பணம் போட
பணம் எதற்கு? மாடு வாங்க
....... .......... ........ .......''[80]

மேலும்,

''பார்! பார்!
என்ன பார்?
தேர் பார்!
என்ன தேர்?
பூந் தேர்!
என்ன பூ?
ரோசாப் பூ!
.......''[81]

இவ்வாறு சொற்களைச் சங்கிலித் தொடராக அமைத்துப் பாடுவது குழந்தைகளைக் கவரும் உத்தி.

**15. கூறியது கூறல்:**

பொதுவாகக் கூறியது கூறல் தவறு. எனினும் குழந்தை இலக்கியத்தில் வந்த சொல் மீண்டும் மீண்டும் வருவது தவறல்ல. இது குழந்தைகளின் மனப்பதிவிற்கான உத்தியாக உள்ளது.

''பொழுது விடிந்தது எழுந்திரு நீ
போந்தது சூரியன் எழுந்திரு நீ
தாமரை மலர்ந்தது எழுந்திரு நீ
தங்கிய தழகு எழுந்திரு நீ
கோழிகள் கூவின எழுந்திரு நீ
குளிர்ந்த இப்பொழுதில் எழுந்திரு நீ
சோம்பல் ஒழிந்தே எழுந்திரு நீ
துயரம் துறந்தே எழுந்திரு நீ''[82]

'எழுந்திரு நீ' என்ற சொல் மீண்டும் மீண்டும் வந்து குழந்தையின் மனதில் பாடலை எளிதில் பதியச் செய்யும்.

**16. எதிர்ச்சொல்:**

''அழிவுக்கு ஆக்கம்
ஆதிக்கு அந்தம்
இரவுக்குப் பகல்
ஈனத்திற்கு மானம்
.......... ...........
ஒழுக்கத்திற்கு இழுக்கு
ஓங்குதலுக்கு மங்குதல்
இவைதான்
ஓதுகின்ற சொல்லாகும்''[83]

என அகர வரிசையில் சொற்களை அமைத்து அவற்றின் எதிர்ச் சொற்களையும் பாடியிருப்பது கற்பிக்கும் உத்தியாகும்.

**17. பொருள் கூறல்:**

''கழனியில் பறிப்பது களை
கையில் அணிவது வளை
கனியினில் இருப்பது சுளை
காலம் நலம்பெற முளை!''[84]

சொற்களின் பொருளை கவிதையாக மோனை, இயைபு அமையப் பாடியிருப்பது ஒரு வகை உத்தி.

**18. எழுத்து அமைப்பில் புதிய உத்தி:**

''தா தா தா தா தா தா தா தா தா தாக்குத்
தண்ணீர் தாரான்
ஆ ஆ ஆ ஆ ஆ ஆ ஆ ஆ ஆ ஆக்கும்
உதவான்! கொள்ளை
லா லா லா லா லா லா லா லா லா லாக்குப்
பொருளை விற்பான்
பா பா பா பா பா பா பா பா பா பாக்கே
ஆளாவானே!''[85]

''தாபத்துக்குத் தண்ணீர் தாரான்
ஆபத்துக்கு உதவான்; கொள்ளை
லாபத்துக்குப் பொருளை விற்பான்
பாபத்துக்கே ஆளாவானே!''

இது பாடற்பொருளாகும்.

இப்புதிய உத்தி குழந்தைகளையும் இதுபோல் சிந்தித்து எழுதத் தூண்டும்.

**3.3.2. நடை:**

பொருள் உத்தி என்பதில் நடை என்பதும் அடங்கும். கூறவந்த பொருளைக் குழந்தைகள் மனம் மகிழும் வகையிலான சொற்களால் கூறுவதை நடை உத்தி எனலாம். சொற்களைக் குழந்தைப் பாடல்களில் நான்கு வகையாகக் காணலாம்.

1. பழகுதமிழ்ச் சொற்கள் 2. பேச்சு வழக்குச் சொற்கள். 3. இலக்கியச் சொற்கள். 4. பிறமொழிச் சொற்கள்.

**பழகுதமிழ்ச் சொற்கள்:**

பாடல்கள் குழந்தைகளுக்கு அறிமுகமான சொற்களால் இயற்றப்பட்டிருந்தால் குழந்தைகள் விரும்பிப் படிப்பர்.

''குழந்தைகளின் மன இயல்பு தெரிந்து அவர்களுக்குப் புரியக்கூடிய சொற்களில் சொல்வதில்தான் பெருமை இருக்கிறது. விஷயம் புதிதாக இருக்கலாம். ஆனால் புழங்கும் சொற்களாக இருக்க வேண்டும்.''[86] என்கிறார் ஆர்.வி.

''ஆனையொன்று வந்ததாம்
அசைந்தசைந்து நடந்ததாம்
பூனையொன்று பார்த்ததாம்
பதுங்கிக் கிட்டச் சென்றதாம்''[87]

பெ. தூரனின் பாடல் பழகு தமிழ்ச் சொற்களில் குழந்தைகள் எளிதில் புரிந்து பாடும் வகையில் அமைந்துள்ளது.

**பேச்சு வழக்குச் சொற்கள்:**

பேச்சு வழக்குச் சொற்கள் குழந்தைகளைக் கவர்ந்திழுக்க வல்லன எனக் கருதிக் கவிஞர்கள் குழந்தைப் பாடல்களில் கையாண்டனர்.

பேச்சு வழக்குச் சொற்கள் நடையை எளிமைப்படுத்திப் பாடல்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையே நெருக்கத்தை உண்டாக்கப் பயன்படுகின்றன.

''அளவுக்கு மீறிக் கொச்சைச் சொற்களைப் பயன்படுத்துவதையும் தவிர்க்க வேண்டும். சொற்களின் உண்மையான வடிவத்தைச் சரியாகத் தெரிந்து கொள்ளும் முன்பே, வடிவம் சிதைந்த கொச்சைச் சொற்களைப் பயன்படுத்தினால் குழந்தைகள் உள்ளத்தில் குழப்பம் ஏற்படும்''[88] என்கிறார் அழ. வள்ளியப்பா.

''தெரிந்தவர் வந்தால் வாலாட்டும்
தெரியா தோரைப் பயமூட்டும்''[89]

''வாயும் கோணல் ஆகுமாம்
வடுவைக் கடிக்கும் போதிலே
போயும் போயும் புளித்திடும்
காயைப் பறித்துத் தின்பதோ.''[90]

*இப்பாடல்கள் பேச்சு வழக்குச் சொற்களால் இயல்பாய் அமைந்த பாடல்கள்.*

**இலக்கியச் சொற்கள்:**

*இலக்கியத் தரம் மிக்கதாகக் கவிதைகள் அமைய வேண்டின் இலக்கியச் சொற்கள் இடம்பெற வேண்டும் என்ற கருத்தில் கவிஞர்கள் குழந்தைப் பாடல்களில் இலக்கியச் சொற்களை அமைத்துப் பாடியுள்ளனர்.*

*''ஒவ்வொரு பாட்டாலும் மாணவர் இரண்டொரு அருஞ்சொற்களேனும் அறிந்து கொள்ளாராயின் பாட்டினால் ஏற்படும் பயன்தான் என்ன?''[91] என்பது பாரதிதாசன் கருத்து.*

*பாடல் முழுவதும் அருஞ்சொற்களாக அமைந்தால் குழந்தைகள் பொருள் புரியாது பாடலைப் புறக்கணிப்பர். மாறாக ஓரிரு சொற்கள் இடம்பெற்றால் குழந்தைகள் புதிய சொற்களைக் கற்க வாய்ப்பாக அமையும். எனவே கவிஞர்கள் குழந்தைப் பாடல்களில் இலக்கியச் சொற்களை அமைத்துப் பாடக் காண்கிறோம்.*

''சிறுவர் மாறிக் குமரர்களாய்ச்
சிரிப்பைச் சிந்தி இருத்தல் போல்
நறுமை மலரின் பருவத்தை
நாங்கள் பெறுவோம் சில பொழுதில்''[92]

''மெய்யுடனே சேர்த்தெனக்கு முத்தம் கொடுத்தாள்''[93]

''சமரிட வந்தவர்''[94]

''புவியினர் அறிய உன்வாழ்வு
புகட்டுது அரிய நீதியை''[95]

நறுமை, மெய், சமர், புகட்டுது போன்ற சொற்கள் இலக்கியச் சொற்கள். இவற்றின் பொருளைக் குழந்தைகள் கேட்டறிந்து பாட வேண்டும்.

**பிறமொழிச் சொற்கள்:**

தமிழுடன் ஆங்கிலம், வடமொழி, இந்தி, உருது, போர்ச்சுக்கீசியம், தெலுங்கு போன்ற பிறமொழிச் சொற்களும் கலந்த நிலையில் குழந்தைப் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன.

பல மொழி பேசும் மக்கள் கலந்து வாழும் நிலையில் பல மொழிச் சொற்களும் தமிழுடன் இரண்டறக் கலந்துவிட்டன. எனவே மொழி அடிப்படையில் உருவாகும் கவிதை இலக்கியத்திலும் பிறமொழிச் சொற்கள் கலந்து காணப்படுகிறது.

**வடமொழி:**

பழந்தமிழில் மணிப்பிரவாள நடை என்று சொல்லப்பட்ட தமிழில் வடமொழி கலந்த நிலை இருந்தது. அதன் தொடர்ச்சியாக குழந்தைப் பாடல்களிலும் வடமொழிச் சொற்களைக் காண்கிறோம்.

'வேதரிஷி'[96] 'ஆத்திரக்காரர்'[97] 'பட்சணப் பானை'[98]
'தேசியக்கொடி'[99] 'புரவி'[100]

போன்ற வடசொற்கள் குழந்தைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

**ஆங்கிலம்:**

ஆங்கிலேயர் வருகையால் தமிழில் ஆங்கிலமொழிக் கலப்பும் ஏற்பட்டது. பல ஆங்கிலச் சொற்கள் மொழி மாற்றம் இன்றி அவ்வாறே வழங்கப்படுகின்ற நிலையில் பாடலிலும் அவ்விதமே இடம்பெற்றுள்ளது.

‘டெலிபோன்’[101] ‘ஹல்லோ’[102] ‘போனில்’[103] ‘தியேட்டர்’[104]
‘ஹாலில்’[105] ‘ஸாசர்’[106] ‘சாக்பீஸ்’[107]

இந்தி, தெலுங்கு போன்ற இந்திய மொழிகளுடன் பாரசீகம், உருது, அரபிக் போன்ற அயல்மொழிகளும் தமிழுடன் கலந்து பாடல்களில் இடம்பிடித்துள்ளன.

**இந்தி:**

‘அச்சா மகராஜ்’[108] ‘சலாம்’[109] ‘ஜரிகை’[110]

**மராத்தி:**

‘ஜாடி’[111] ‘கோலி’[112]

**தெலுங்கு:**

‘கொசுறு’[113] ‘பண்டிகை’[114] ‘பவனி’[115]

**உருது:**

‘சீனி’[116] ‘பொங்கல் இனாம்’[117] ‘கடிதம்’[118] ‘காகிதம்’[119]

**போர்ச்சுக்கீசு:**

‘ஜமுக்காளம்’[120] ‘ஜன்னல்’[121]

**பிரெஞ்சு:**

‘பீரோ’[122] ‘புட்டி’[123] ‘பொத்தான்’[124]

**அராபிக்:**

‘தகராறு’[125] ‘தகவல்’[126] ‘முகாம்’[127]

இவ்வாறு பிறமொழிச் சொற்கள் கலந்ததாகக் குழந்தைப் பாடல்கள் அமைந்துள்ளன. சான்றுக்கு ஒரு பாடல்,

‘‘ஈயடிச்சான் சிப்பாய் வறார்.
எழுந்து பாருங்கோ.

பேயடிச்சாப் போலே வறார்.

பேச்சு வேணாங்கோ!

கில்ட்டுமெடல் கிழிஞ்ச ஜோடு;

கிருதா—உருமாலு

பல்டியடிச்சா மண்ணொட்டாதாம்

படா கோல்மாலு''[128]

இவ்வாறு இலக்கியப் பொருளில் உத்திகளை அமைத்துக் கவிஞர்கள் குழந்தைப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

**3.4. அமைப்பு முறை உத்தி:**

இலக்கியக் கருப்பொருட்களை அமைக்கும் முறையிலும் பல்வேறு உத்திகளைக் கவிஞர்கள் கையாளக் காண்கிறோம்.

'கவிதையில் பொருளும் வடிவமும் நெருங்கிய உறவுடையன. பொருளின்றி வடிவிற்கு வாழ்வில்லை. உயிருக்கும் உடலுக்கும் இடையே விளங்கும் உறவினைப் பாடுபொருளுக்கும் வடிவிற்கும் இடையே காண முடியும்.'[129]

**3.4.1. வினா-விடை:**

வினாக் கேட்டு அதற்கு விடை கூறும் பாங்கில் அமையும் பாடல்கள் குழந்தைகளை விரும்பிப் பாட வைக்கும். அதிலும் இரு குழந்தைகள் இணைந்து பாடி மகிழ ஏற்றதாக இருப்பதால் குழந்தைக் கவிஞர்கள் இவ்வுத்தியைப் பயன்படுத்தினர்.

கவிமணி எழுதிய 'குழந்தை' என்ற பாடல், (ஆங்கிலத் தழுவல்-மாக்டோனால்ட்) வினா-விடை அமைப்பில் உள்ளது. குழந்தையின் அழகை வியந்து தாய் வினா எழுப்ப, குழந்தை அதற்கான விடை கூறுவதாக அமைந்துள்ளது.

''பூவின் அழகுனது முகத்தில்—என்றும்

பொலிந்திடும் காரணம் ஏன்?—குழந்தாய்

தேவரும் கண்டறியாக் காட்சி—யானும்

தெளிவுறக் கண்டபலன் அம்மா!''

......... ........... ......... ............

ஆசைக் குழந்தாய்! இச்செவிகள்–உன்னை

அடைந்த வரலாறே துரையாய்?

ஈசனும் பேசிடவாய் திறந்தான்–கேட்க

இவையும் எழுந்தன அம்மா!''[130]

மேலும் பொது அறிவைச் சோதிக்கும் வினா-விடை போன்ற பாடல்களும் உள்ளன.

''வண்ணக் கிளியே வீடெங்கே?

மரத்துப் பொந்தே என் வீடு

தூக்கணங் குருவியே வீடெங்கே?

தொங்குது மரத்தில் என் வீடு

கறுப்புக் காகமே வீடெங்கே?

கட்டுவேன் மரத்தில் என்வீடு''[131]

இப்படி விலங்குகளிடம் வினாக் கேட்பது போன்ற பாடல்களால் குழந்தைகளின் பொது அறிவு வளரும் வாய்ப்பேற்படும். இவை தவிர வினா மட்டும் எழுப்பி குழந்தைகளின் சிந்தனையைத் தூண்டும் பாடல்களும் சில உள்ளன.

''நாய் ஓடுவதேன்?

நாக்கு தித்திப்பதேன்?

விடை–கற்கண்டு''[132]

ஒரு சொல் மற்றொரு சொல்லின் விகுதியாக வருவது போன்ற வினா-விடைப் பாடல்களும் உள்ளன.

''கண்ட இடத்தில் போடக் கூடாத பை எது?

குப்பை''[133]

இரு வினாக்களுக்கு ஒரே சொல் விடையாக அமையுமாறு பாடப்படும் பாடல்களும் உள்ளன.

''உயிரைக் கொடுத்துக் குமரன் காத்தது எதை?
பந்தல் அமைத்து உழவன் காப்பது எதை?
விடை—கொடியை''[134]

இத்தகைய புதிர்ப்பாடல்கள் மொழி விளையாட்டிற்கான வினா-விடைப் பாடல்களாக அமைந்து குழந்தைகளை ஈர்க்கும் உத்தியாகக் கவிஞர்களால் கையாளப்படுகிறது.

**3.4.2. உரையாடல்:**

இருவருக்கிடையே நடைபெறும் உரையாடல் பாடல் உத்தியாகக் கையாளப்படுகிறது. செய்திகளைப் பகிர்ந்து கொள்வதுடன், நகைச்சுவை மிகுந்த பாடல்கள் சிலவும் உரையாடலாக அமைக்கப் படுகிறது. குழந்தைகளுக்கிடையிலான உரையாடல், குழந்தைக்கும் விலங்கிற்கும் இடையிலான உரையாடல், விலங்குகளுக்கிடையிலான உரையாடல் என்ற அமைப்பில் கவிஞர்கள் பாடல்களை இயற்றியுள்ளனர்.

சிறுவன் தன் அண்ணனுடன் உரையாடுகிறான்.

''அண்ணன்: கண்ணா அருகில் வந்திடுவாய்
கண்ணன்: காலில் சுளுக்கு; முடியாது.
அண்ணன்: கண்ணா, கணக்குப் போட்டிடுவாய்
கண்ணன்: கையை வலிக்குது; முடியாது.
அண்ணன்: கண்ணா பாடம் படித்திடுவாய்.
கண்ணன்: கடைவா யில்புண்; முடியாது''[135]

இப்படி ஒவ்வொன்றிற்கும் சாக்குச் சொன்ன கண்ணன், மாடியில் பெட்டியில் வைத்திருக்கும் காசைக் கணக்காய்ச் சொன்னால், அதனைத் தருவதாக அண்ணன் கூறியதும், கால் சுளுக்கு, கைவலி, கடைவாயில் புண் என அனைத்தையும் மறந்து, அண்ணா சொல்லைத் தட்டலாமா? என்பதாக உரையாடும் பாடலாக அமைந்துள்ளது.

குழந்தைக்கும் விலங்கிற்கும் இடையிலான உரையாடல்.

''யானை யாரே யானை யாரே
எங்கே போகிறீர்?
பானை பானை யாகத் தண்ணீர்
பருகப் போகிறேன்.
பானைத் தண்ணீர் பருகிவிட்டால்
வேட்கை தீருமா?
பனிக் கட்டியை உடைத்துப் போட்டு
நான் தரட்டுமா?''[136]

*இரு விலங்குகளுக்கிடையிலான உரையாடலும் குழந்தைப் பாடல் உத்தியானது,*

''நரி: முறுக்கும் வாயு மாக
முருங்கை மரத்தின் மீது
இருக்கும் காக்கை யாரே
எனக்குப் பாதி போடும்.

காகம்: முறுக்குப் பாதி என்ன
முழுசும் எடுத்துக் கொள்ளும்
கடிக்க முடிய வில்லை
கல்லும் தோற்றுப் போகும்''[137]

**3.4.3. விவாதம்:**

*குழந்தைகளிடையே விவாதத் திறமையை வளர்க்க கவிஞர் சிலர் கவிதை இயற்றினர். 'யார் பெரியவர்?' 'யார் சிறந்தவர்?' 'எது சிறந்தது?' போன்ற வாதங்களைக் குழந்தைப் பாடல்களில் காணலாம். மேலும் பட்டிமன்றங்கள் சிலவும் குழந்தைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.*

*''எது சிறந்தது? இட்லியா? தோசையா? காப்பியா?''*

''தலைவர்: அன்புள்ள பெரியாரே! பண்புள்ள தாய்மாரே!
சின்னக் குழந்தைகளே! சிறியோரின் வணக்கங்கள்.
இட்லியா? தோசையா? இனிமைமிகு காப்பியா?

எதுசிறந்த பொருளென்று இப்பொழுதே வாதிடுவீர்
முதலில் இட்டிலியார் முறையாகச் சொல்லிடும்''[138]

இவ்வாறு தொடங்கும் பட்டிமன்றத்தில் ஒவ்வொரு கட்சியினரும் கவிதையில் வாதிடுகின்றனர்.

'ஆரம்பப் பள்ளியும் கல்லூரியும்'[139] யார் பெரியவர் என விவாதிக்கும் பாடல் 'மலரும் உள்ளம்' முதல் தொகுதியில் உள்ளது.

**3.4.4. கவிதை நாடகம்:**

குழந்தைகள் கவிதை பாடி, நடிக்க ஏற்ற கவிதை நாடகத்தையும் உத்திகளுள் ஒன்றாகக் கூறலாம்.

அழ. வள்ளியப்பாவின் 'மலர்களின் சண்டை'[140] என்ற கவிதை நாடகத்தில், தாமரை, சாமந்தி, மல்லிகை போன்ற மலர்களுக்கு இடையே நடைபெறும் சண்டை நாடகமாக்கப்பட்டுள்ளது. முடிவில் ரோஜா மலர் வந்து சமாதானம் செய்வதுடன் நாடகம் நிறைவடைகிறது.

**3.4.5. வில்லுப்பாட்டு:**

வில்லுப்பாட்டு என்பது குழந்தைப் பாடல்களில் அதிகம் இடம்பெறவில்லை. சுப்பு ஆறுமுகம் எழுதிய 'காந்தி வந்தார்', 'விடுதலை வேள்வி' ஆகிய நூல்கள் வில்லுப்பாட்டாக உரையுடன் பாடல்களும் கலந்து அமைந்துள்ளது குழந்தைகளைக் கவரும் உத்தியானது.

''தந்தனத்தோம் என்று சொல்லியே—வில்லினைப் பாட
வந்திடுவாய் கலைமகளே!
........ ........... ............
உத்தமர் காந்தியின் கதையைச் சொல்ல வந்தோம்
உங்கள் ஆசி துணையிருக்கும்.
........ ............ ...........
பார்க்கு மிடமெங் கேயும்—காந்தியாமே
பள்ளி முதலாய் கோவில் வரையும்—காந்தியாமே

கேட்கு மொலி எல்லாமே காந்தியாமே.
கிராமம் முதலாய் நகரம் வரையில்—காந்தியாமே
காந்தியில்லா இடமும் இல்லை. நல்ல
கதி நமக்கு வேறு இல்லை.''[141]

### 3.4.6. இசைப்பாடல்:

இசைப் பாடல்கள் மிகத் தொன்மை வாய்ந்தவை. தமிழர்கள் பரிபாடல், சிலம்பின் வரிப்பாடல்கள், ஆழ்வார்கள், நாயன்மார்களின் பக்திப் பாடல்கள் எனத் தமிழிசைப் பாடல்களைப் பாடி வந்துள்ளனர். குழந்தைகள் இசைக்கு மயங்குவதால்தான் தாலாட்டுப் பாடல் பாடுகிறார்கள். மேலும் இசையுடன் பாடப்படும் பாடல்கள் குழந்தைகள் மனதில் எளிதில் பதிந்து, மீண்டும் மீண்டும் பாடத் தூண்டும். எனவே கவிஞர்கள் இசைப் பாடல் உத்தியைக் கையாண்டனர்.

**பல்லவி**

''திருவடி தொழுகின்றோம்—அன்போடு
திருவடி தொழுகின்றோம். (திருவடி)

**அனுபல்லவி**

குருவடிவாக நின்று
குறையெல்லாம் போக்கிநலம்
அருள்செய வேண்டும்—எங்கள்
ஆண்டவனே! உன்றன் (திருவடி)

**சரணம்**

தருமம் தழைத்திடவே
சத்தியம் ஓங்கிடவே
பருவமழை பொழிந்து
பயிர்கள் செழித்திடவே''[142]

இப்பாடல் கவிமணியின் இசைப்பாடலாகும்.

பாரதிதாசன்,

> ''பசி என்று வந்தால் ஒருபிடி சோறு
> புசி என்று தந்துபார் அப்பா,
> பசி என்று வந்தால்...
> பசையற்ற உன் நெஞ்சில் இன்பம் உண்டாகும்
> பாருக் குழைப்பதே மேலான போகம்
> பசி என்று வந்தால்...''[143]

என்று இசையுடன் பாட ஏற்ற பாடலை இசையமுதில் அமைத்துள்ளார்.

கோ. பெரியண்ணனின் 'சிறுவர் இன்னிசைப் பாடல்கள்' என்ற நூலில் 40 பாடல்கள் உள்ளன.

> ''வெற்றி வெற்றி என்று சொல்லி
> வேகமாக முன்செல்வோம்
> ஒற்றுமையாய் வாருங்கள்!
> உடன்பிறந்த தோழர்காள்!''[144] (வெற்றி)

இவ்வாறு இசைப் பாடல்கள் வழி குழந்தைகளைப் பாட வைக்கும் உத்தியைக் கவிஞர்கள் பயன்படுத்தினர்.

### 3.4.7. கதைப் பாடல்:

குழந்தைகள் கதைகளையும் பாடல்களையும் ஆர்வமுடன் கேட்டு மகிழ்வர். அந்தக் கதையைப் பாடலாகச் சொன்னால் மேலும் மகிழ்வர். எனவே கவிஞர்கள் இதனைக் குழந்தை இலக்கிய உத்தியாகக் கையாண்டனர்.

கவிமணியின் 'மலரும் மாலை'யில் கதைப்பாட்டு என்ற ஒரு பிரிவு அமைத்து 'ஊகமுள்ள காகம்'[145] முதலாக நான்கு பாடல்களை இடம்பெறச் செய்துள்ளார்.

சூடாமணியின் 'கத்திரிக்காய் கள்ளன்' என்ற பாடல் பொம்மைக்குக் குழந்தை கதை சொல்வதாக அமைந்துள்ளது.

''காக்காய் வந்து கத்திரிக்காய்த்
தோட்டம் ஒன்று போட்டதாம்
காத்திருந்த கள்ளநரி
காயைத் திருடி போச்சுதாம்
......... ........... ..........
கட்டி வைத்த வலைக்குள்ளே
கள்ள நரியைக் கண்டதாம்
கட்டை ஒன்றை எடுத்துவந்து
கள்ள நரியை அடித்ததாம்''[146]

இந்தப் பாடல் குழந்தை, கதை கூறிப் பொம்மையைத் தூங்க வைப்பதாக உள்ளது.

கவிதைத் தொகுப்பில் கதைப் பாடல்களைச் சிலர் அமைத்துள்ளனர். சான்றாக அரு.சோமசுந்தரன் 'சிறுவர்க்குப் பாடல்' நூலில் 'காகமும் நாகமும்'[147] சொ. அடைக்கலம், 'பாலர் மலர்கள்' நூலில் 'கிணற்றுத் தவளை'[148] என்ற கதைப் பாடல்களை அமைத்துள்ளனர்.

கவிஞர் சிலர் கதைப் பாடலுக்காகவே தனி நூல் அமைத்திருப்பதைக் காண்கிறோம். அழ. வள்ளியப்பாவின் 'கதைப் பாடல்கள்' தொகுதி ஒன்று, இரண்டு, 'ஈசாப் கதைப் பாடல்கள்' மற்றும் எஸ். விஜயலெட்சுமியின் 'காட்டுக்குள்ளே திருவிழா' ஆகிய நூல்கள் முழுவதுமாகக் கதைப் பாடல்களின் தொகுப்பாக அமைந்துள்ளன.

ர. அய்யாசாமி, இராமாயணக் கதையைக் குழந்தைகளுக்கு ஏற்ற வகையில் 'பால இராமாயணம்' என்றும், சிலப்பதிகாரத்தை 'சிறுவர் சிலம்பு' என்றும் கவிதை நூலாக ஆக்கித் தந்துள்ளார்.

வரலாறு படைத்த சான்றோர்களின் வாழ்வியல் நிகழ்வுகளைக் கதைப் பாடலாகச் சிலர் தந்துள்ளனர். மீனவனின் 'நெஞ்சும் நினைவும்' என்ற நூலில், 'கற்புச் செல்வி'[149] 'அன்புச் செல்வர்'[150] 'அரசத் துறவி'[151] என்ற தலைப்புகளில் முறையே கண்ணகி, புத்தர், அசோகர் போன்றோரின் வாழ்க்கை நிகழ்ச்சியைக் கதைப் பாடலாகத் தந்துள்ளார்.

அழ. வள்ளியப்பா காந்தியின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் 'பாட்டிலே காந்தி கதை' என்றும் நேருவின் வாழ்வியலை, 'நேரு தந்த பொம்மை' என்றும் விடுதலை நிகழ்வுகளை, 'சுதந்திரம் பிறந்த கதை' என்றும் தனித்தனி கதைப்பாடல் நூலாகத் தந்துள்ளார்.

கதைப் பாடலுக்கு மாறாக கதைக்கு இடையே பாடல் இடம்பெறச் செய்யும் உத்தியும் கவிஞர்களால் பயன்படுத்தப்பட்டது. சான்றாக, 'என் பெயர் என்ன?'[152] என்ற 16 பக்க நூலில் கதைக்கு இடையே பாடல்கள் அமைந்துள்ளன. ஓர் ஈ தன் பெயரை மறந்துவிட்டது. பார்ப்பவரிடம் எல்லாம் 'தன் பெயர் என்ன?' என்பதைப் பாடலாகக் கேட்கிறது.

''தி.ஜ.ர.வின் 'ரோஜாப் பெண்' என்ற புத்தகத்திலுள்ள 14 கதைகளில் பெரும்பாலானவை பாட்டுடன் கூடியவை. அதில் 'ஆட்டுக்குட்டி' கதையில், ஆட்டுக்குட்டி பாட்டி வீட்டிற்குச் செல்கிறது. குள்ளநரி அதைத் தடுத்து நிறுத்தித் 'தின்னப் போகிறேன்' என்கிறது. ஆட்டுக்குட்டி,

> ''பாட்டி வீடு போகிறேன்
> பழைய சோறு தின்னுவேன்
> தேட்ட மாக வளருவேன்
> திரும்பி வந்து சேருவேன்
> தின்ன லாம் என்னை—நீ.''

என்று கூறித் தப்பித்துச் செல்கிறது. இப்படியே வழியில் பார்க்கும் மிருகங்களிடமும் பாடித் தப்பிக்கிறது.''[153]

### 3.5. நூல் வடிவிலும் அமைப்பிலும் உத்தி:

குழந்தைகளைத் தன்பால் ஈர்த்துப் படிக்கத் தூண்டுவது நூலின் வடிவமும் அமைப்பு முறையும் எனலாம்.

சிறுவர் ஆங்கிலக் கவிதை நூல்கள் மற்றும் வண்ணம் தீட்டுவதற்கு ஏற்ற நூல்கள் பல வடிவங்களில் வருவது போன்று தமிழிலும் சிலர் முயன்றுள்ளனர்.

### 3.5.1. நூல் வடிவம்:

சாரதா பதிப்பகம் வெளியிட்டிருக்கும் மதி ஒளி சரஸ்வதியின் 'இளந்தளிர்கள்' என்ற நூல் ஆலிலை வடிவிலும் வண்ணத்திலும் அமைந்துள்ளது. அழகிய கண்ணனை முகப்பு அட்டையாகக் கொண்டது. வெற்றிலை, மாவிலை, புகையிலை முதலான 13 இலைகளைப் பற்றிய பாடல்கள் கொண்டது. ஒரு பக்கம் பாட்டு, அதற்கு எதிர்ப்பக்கம், ஓவியர் ஜெயராஜின் வண்ணப்படம். பல வண்ணங்களில் படங்கள் இடம்பெற்றுள்ளன.

1961ஆம் ஆண்டு வெளியிட்ட 'குழந்தை இலக்கிய மலர்' விளம்பரத்தில் தென்மொழிகள் புத்தக டிரஸ்ட் வெளியிட்ட குழந்தைகளுக்கான புத்தகங்களில் 'மணி என்ன?'[154] என்ற புத்தகம் கடிகாரம்போல் வடிவம் கொண்டது எனக் குறிப்பிட்டுள்ளனர். மற்ற நூல்கள் 50 பைசா, 1 ரூபாய் விற்ற காலத்தில் இந்நூலின் விலை 2 ரூபாயாக இருந்திருக்கிறது.

இத்தகைய நூல்கள் குழந்தைகளைக் கவர்ந்திழுத்து வாசிக்கச் செய்யும். ஆனால் இவற்றின் தயாரிப்புச் செலவு மிகுதியாகும்.

### 3.5.2. வடிவில் மாறுபாடு:

வழக்கமான நூல்கள் போலில்லாமல் நீளவாட்டில் அளவில் சிறியதாய் வெளிவரும் நூல்களும் குழந்தைகளைக் கவர்ந்திழுக்கும். தம்பி சீனிவாசனின் 'சிவப்பு ரோஜா', கே.எஸ். லெட்சுமணனின், 'பாப்பாவுக்கு மிருகங்கள்', ஜவஹரின் 'தொடக்கப் பள்ளிக்குத் தொண்ணூறு பாடல்கள்' போன்ற நூல்கள் மேற்குறிப்பிட்ட வடிவின.

உள்ளங்கையளவு நூல்களும் வெளிவந்துள்ளன. மழலை மன்ற வெளியீடான, வா.சி. தனபாலனின், 'அறிவும் அரும்பும்' நூலைக் குறிப்பிடலாம். படங்கள் ஏதுமில்லை. ஆனால் பெரிய எழுத்தில் நான்கு அடிப் பாடலாக ஒரே பக்கத்தில் முடியும் பாடல்கள் சிலவும் 8, 12, 20 அடிகளாலான பாடல்கள் பலவும் இடம்பெற்றுள்ளன. 1969-ல் ரூ. 1.50க்கு கனத்த அட்டையுடன் கூடிய புத்தகமாக வெளிவந்துள்ளது.

நூலின் வடிவமும், வண்ணமும், ஓவியங்களும் குழந்தையை முதலில் நூலைத் தொட்டுப் பார்க்கச் செய்யும். பிறகு படிக்கத் தூண்டும்.

**3.5.3. அழகிய அட்டையுடன் வண்ணப் படங்கள்:**

"குழந்தைப் புத்தகம் என்றதும் கவர்ச்சியான அட்டை, வண்ணப் படங்கள், பெரிய எழுத்து முதலியவற்றுடன் அது விளங்க வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். படங்களில்லாத புத்தகம் மலர்களில்லாத நந்தவனம் போன்றதே. குழந்தைப் புத்தகங்களில் ஆசிரியருக்கு எத்தகைய முக்கியத்துவம் உண்டோ அத்தகைய முக்கியத்துவம் ஓவியருக்கும் உண்டு."[155] என்கிறார் அழ. வள்ளியப்பா.

குழந்தை நூல்கள் என்றால் நிச்சயம் படம் இருக்க வேண்டும். பெரிய எழுத்தில் அச்சிட வேண்டும். இது குழந்தைகளைக் கவர்ந்திழுக்கும் அமைப்பு உத்தி. 'படம் பார்த்து கதை சொல்' என்பதுபோல குழந்தைகள் படத்தைப் பார்த்தே பாடல் பாடி விடுவார்கள். அழ. வள்ளியப்பாவின் 'பாட்டுப் பாடுவோம்', செல்ல கணபதியின் 'வெள்ளை முயல்', 'வண்டுகளே உங்களைத் தான்' லெமனின் 'கொக்கரக்கோ' குழ. கதிரேசனின் 'பூச்செண்டு', 'தொப்பைக்கோழி' கவிமாமணி சக்தியின் 'நிலா நிலா ஓடிவா' நீரை அத்திப்பூவின் 'நிலவுக்கே போகலாம்', ஜெயந்தி நாகராஜனின் 'மழலையர் பாட்டு' போன்ற நூல்கள் அளவில் பெரியதாக (Crown 18.5 × 25 cm) வண்ணப் படங்களுடன் பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டதாக இருக்கின்றன.

யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த வி.என்.எஸ். உதயச்சந்திரன் 15 பாடல்களை 70 பக்கங்களில் 'பாட்டும் படமும்' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். பாட்டின் தலைப்பைக் கொடியில் எழுதி அதனை ஒரு எலி பிடித்து வருவது போன்று ஒரு பக்க அளவில் ஒரு படம். அதனைத் தொடர்ந்து 3 பக்கங்கள் படங்களும், ஒரு பக்கம் பாடலுமாக அமைத்துள்ளார்.

**3.5.4. படங்களில் புதுமை:**

*நாரா. நாச்சியப்பனின் 'பாடு பாப்பா' என்ற நூலில் இடம்பெற்ற பாடல்களுக்கு அவர் தலைப்பு வழங்கவில்லை. மாறாக விளக்கு பற்றிய பாடல் எனில் விளக்குப் படமும், வள்ளுவர் பற்றிய பாடல் எனில் வள்ளுவர் படமும் தலைப்பாக அமைத்துள்ளார். அரு. சோமசுந்தரனின் 'சிறுவர்க்கு விஞ்ஞானம்' என்ற பாடல் நூலில் அறிவியல் கண்டுபிடிப்பான கருவிகளின் நிழற்படங்களே பாடல்களின் தலைப்புகளாக அமைந்திருக்கின்றன.*

*ரா. பொன்ராசனின் 'மலரும் பூக்கள்' புத்தகத்தில் பாடல்களுக்கான ஓவியங்களுடன், குழந்தைகளின் நிழற்படங்களையும் இடம்பெறச் செய்துள்ளார்.*

**3.5.5. உள்ளடக்கம்:**

*நூலின் உள்ளடக்கம் ஒரு கருத்தை மையப்படுத்திப் பாடப்பட்டவையாக சில நூல்கள் வந்துள்ளன. இவையும் குழந்தைகளைக் கவரும் உத்தி.*

**1. பாவையர்க்கு:**

*1967-ல் திருச்சி தியாகராஜன் தொகுத்த 'பாவையர் பாமாலை' என்ற நூலில் 3 பெண் கவிஞர்கள் உள்ளிட்ட 61 கவிஞர்களின் மாணவியர்க்கான பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பெண் குழந்தைகளுக்கான தனிப்பாடல் நூல் இது ஒன்றாகத்தான் இருக்கும்.*

**2. அறிவியல்:**

*அறிவியல் கருத்துக்களையும், அறிவியலார் வாழ்க்கையையும் குழந்தைப் பாடல்களாகத் தந்தனர் சில கவிஞர்கள்.*

*மு. சாயபு மரைக்காயர், 'அறிவியல் அறிஞர்கள்' என்ற நூலில் 49 அறிவியலார் பற்றிய குறிப்புடன் சிலரின் படமும் இடம்பெற்றுள்ளன. அறிவியல் அறிஞரின் சாதனை, அதனால் மக்கள் பெறும் பயன் எனக் கவிதையாகத் தந்துள்ளார்.*

செம்பை சேவியரின் 'அறிவியல் அறிந்திடு பாப்பா' என்ற நூலில் அறிவியலார் பற்றியும் அவர்களின் சாதனை பற்றியும் எளிமையான கவிதைகள் இடம்பெற்றுள்ளன.

மாமல்லனின் 'அறிவியல் பாக்கள்', குழ. கதிரேசனின் 'பாடுவோம் அறிவியல்', அரு. சோமசுந்தரனின் 'சிறுவர்க்கு விஞ்ஞானம்', சதாசிவம் இயற்றிய 'அறிவியலைப் பாடுவோம்' கவிமாமணி சக்தியின் 'ஆடுவோம் பாடுவோம் அறிவியலை நாடுவோம்' போன்ற நூல்கள், நாம் பயன்படுத்தும் அறிவியல் சாதனங்கள், நம்மைச் சுற்றியுள்ளவற்றின் அறிவியல் தன்மைகளைப் பாடல்களாகத் தருகின்றன.

பிறையணிவோனின் 'உங்களுக்குத் தெரியுமா?' என்ற நூலில் 4 அடிப் பாடல்கள் 124 உள்ளன. ஒவ்வொன்றும் விடுகதை போன்ற புதிராக அமைந்துள்ளது. பின் பகுதியில் விடையும் கொடுக்கப் பட்டுள்ளது.

''பறவை ஒன்றின் அலகினிலே
பசிக்கும் வயிற்றில் கொள்கின்ற
இரையை விடவே மிகுதியான
இரைதான் பிடிக்கும் அதுவெதுவெனச் சொல்''[156]
(பெலிக்கன்–Pelicon)

''பல்லி வகையில் மிகப் பெரிது
பார்த்தால் அளந்து பத்தடியாம்
சொல்ல முடிந்தால் அதன் பெயரைத்
துரித மாகக் கூறிடுவாய்''[157]
(கொமோடோடிராகன்–Komodo Dragan)

**3. ஒரே பொருள் பற்றியன:**

விலங்குகளைப் பற்றிய பாடல்கள் மட்டுமே கொண்ட கே.எஸ். லெட்சுமணனின் 'பாப்பாவுக்கு மிருகங்கள்' என்ற நூலில் பாடல் ஒரு பக்கமும், எதிர் பக்கத்தில் அந்த விலங்கின் படமும் இடம் பெற்றிருக்கும்.

காய்கனி பற்றிக் குறிப்பிடுவன இராஜம்மாள் பி. தேவதாஸ் எழுதிய 'பாப்பா பாப்பா பாடவா' என்ற நூல்.

பு.ஆ. முத்துக்கிருஷ்ணனின் 'சிறுவர் உலகம்' என்ற நூலில் தமிழக ஊர்கள், இந்திய மாநிலங்கள், உலக நாடுகள் இவற்றைச் சேர்ந்த சிறுவர்கள் தங்கள் நாடுகளைப் பற்றியும் வாழ்க்கை முறைகளைப் பற்றியும் பெருமையாகப் பாடும் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அதற்கேற்ப கருப்பு வெள்ளைப் படமும் இடம்பெற்றுள்ளன. 20 பாடல்கள் உள்ளன. பாடல் எண்கள் தமிழில் 'க, உ' என வழங்கப்பட்டுள்ளன. புதியன அறிய விரும்பும் குழந்தைகளின் ஆவலைத் தூண்டும் நூலாக இது அமைந்துள்ளது.

மதிஒளி சரஸ்வதியின் 'தூண்டா விளக்கு' என்ற நூலில் 'இயற்கை உலகம்' 'ஆசை உலகம்' 'சரித்திர உலகம்' என்பதாக உலகம் என்ற தலைப்பில் பாடற் கருத்துக்கள் அமைந்துள்ளன. அதே போல் இவரின் 'இணைந்திடுவோம் வாருங்கள்' என்ற நூலில் 'நல்லோரை நாடு' 'உதவி செய்' 'பகையை வெல்' என்ற தலைப்புகளில் கட்டளைச் சொல்லாக அறிவுரை கூறுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

பி. வெங்கட்ராமனின் 'சிறுவர் சிறுமியருக்கான சாலை விதிப் பாடல்கள்' படங்களுடன் சாலை விதிகளைத் தெளிவாகச் சொல்லும் பாடல்களின் தொகுப்பு. ஒவ்வொரு பக்கத்திலும் 2 படங்கள். ஒவ்வொரு படத்திற்குக் கீழும் நான்கு அடிப் பாடல்கள் என்ற அமைப்பில் நூல் உள்ளது. பாடல்களுடன் சாலைப் பாதுகாப்பிற்கான புதிர்க்கட்டம் ஒன்றும் சாலை விதிகள் குறித்த சின்னங்கள் பற்றிய விளக்கங்கள் 5 பக்கங்களிலும் வெளியாகியுள்ளன. இவையனைத்தும் குழந்தைகளைக் கவரும் அமைப்பு உத்தியாகப் பயன்படுகின்றன.

நீரை, அத்திப்பூவின் 'அஞ்சல் தலை அறி(ரி)ய பாட்டு' என்ற நூலில் அஞ்சல் தலைகள் மற்றும் அஞ்சல் தலை கண்காட்சி பற்றிய அரிய செய்திகளை உள்ளடக்கிய அறிய வேண்டிய 31 பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**4. திட்டங்கள்:**

'அன்பே தெய்வம்' என்ற பு.ஆ. முத்துக்கிருஷ்ணனின் நூலில் பல திட்டங்கள், 'தொழிற்கல்வி' 'முதியோர் கல்வி' ' ஐந்தாண்டுத் திட்டம்' போன்றவை பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்லும் எளிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

மேலும் 'சத்துணவுத் திட்டம்' குறித்து பி. வெங்கடேசன் 'சத்துணவுப் பாடல்கள்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

சொ. அடைக்கலம் அவர்கள் 'இரவுப் பாடசாலை' என்ற தலைப்பில் 'பாலர் மலர்கள்' என்ற நூலில் ஒரு பாடல் எழுதியுள்ளார். இதுவும் முதியோர் கல்வித் திட்டம் குறித்த பாடலாகும்.

இன்று பள்ளிகளில் 'பசுமைப் படை' என்ற அமைப்பின் மூலம் மரம் வளர்க்கின்றனர். இதனை மலேயக் கவிஞர் எல்.எம். பஹதூர் 'பூங்காராயா' என்ற நூலில் 'திட்டம்' என்ற தலைப்பில் எழுதியுள்ளார்.

> ''பச்சைப் புத்தகத் திட்டமாம்
> பயிர் வளர்க்கும் திட்டமாம்
> பிச்சைப் போக்கும் திட்டமாம்
> புதிய நல்ல திட்டமாம்''[158]

என்று பாடியுள்ளார்.

இத்தகைய பாடல்கள் நம் நாட்டில் தீட்டப்படும் பல்வேறு திட்டங்கள் பற்றிக் குழந்தைகள் முழுமையாகத் தெரிந்துகொள்ள உதவுகின்றன.

**5. தலைப்பு:**

நூலின் தலைப்பும் பாடல்களின் தலைப்பும் குழந்தைகளைப் படிக்கத் தூண்டும் வகையில் அமைப்பது ஒரு வகை உத்தி எனலாம்.

**நூலின் தலைப்பு:**

நூலின் நுழைவாயிலாய் அமையும் அட்டையில் உள்ள தலைப்பே குழந்தைகளைக் கவர்ந்திழுக்க வேண்டும். குழந்தைகள் மலர் போன்று

மென்மையான உள்ளம் கொண்டவர்கள். எனவே மலருடன் தொடர்புடைய தலைப்புகளில் பல நூல்கள் உள்ளன.

கவிமணியின் 'மலரும் மாலையும்' அழ. வள்ளியப்பாவின் 'மலரும் உள்ளம்', செல்ல கணபதியின் 'மலரும் மொட்டுக்கள்', பொன்ராசனின் 'மலரும் பூக்கள்', வ. நீலகண்டனின் 'கவிதை மலர்கள்' அபிராமியின் 'வாடா மலர்கள்' சிற்பியின் 'வண்ணப் பூக்கள்', அழகு பழனிச்சாமியின் 'மணக்கும் மலர்கள்' கிருங்கை சேதுபதியின் 'பூந்தடம்' போன்று மலர்கள், பூக்கள் என்ற தலைப்புகளில் பல நூல்கள் வெளிவந்துள்ளன.

மழலை என்ற தலைப்பில் பல நூல்கள் உள்ளன. ஆர்.பி. சாரதியின் 'மழலைக் கனிகள்', அருவியின் 'மழலை அமுதம்', மா. கண்ணப்பனின் 'மழலை மலர்கள்', எஸ். சாந்தலெட்சுமியின் 'மழலை இன்பம்', ஜெய்வாணனின் 'மழலை முத்துக்கள்' போன்று பல நூல்கள் 'மழலை' என்பதுடன் இணைந்த தலைப்பாக அமைந்துள்ளன.

'நிலா'வைப் பற்றிப் பாடாத கவிஞர்கள் இல்லை. 'நிலா' என்பது குழந்தைகளுக்குப் பிடித்த ஒன்று. எனவே நிலாவுடன் தொடர்புடைய தலைப்புக் கொண்ட நூல்கள் பல உள்ளன. சான்றுக்கு, பி.வி. கிரியின் 'நிலாச் சோறு' தளவை இளங்குமரனின் 'பிஞ்சு நிலா' பெ. மலர்விழியின் 'அம்புலி', கோ. சாரங்கபாணியின் 'பிள்ளை நிலா' தமிழ் ஒளியின் 'அந்தி நிலா பார்க்கவா', புத்தனேரி ரா. சுப்பிரமணியத்தின் 'அம்புலிப் பாட்டுப் பாடாதே!' செ.சு. மலரடியானின் 'நிலா ராணி' போன்றவையாகும்.

மாறுபட்ட தலைப்புகள் குழந்தைகளைக் கவரக்கூடியன. எனவே கவிஞர்கள் சிலர் அத்தகைய தலைப்புகளை நூலுக்குச் சூட்டுவதை உத்தியாகக் கொண்டுள்ளனர். 'கொக்கரக்கோ' என்ற தலைப்பில் லெமன், அழகனார் இருவரும் நூல்கள் படைத்துள்ளனர். மா. காயாம்பு 'வேலை கொடுக்கணும் மூளைக்கி' என்றும், செம்மங்குடி துரையரசன் 'கொஞ்சும் கிளியே கொஞ்சம் பேசு' என்றும், கருமலைப்பழம்நீ 'காற்றாடி' என்றும் இன்பவண்ணன் 'பொம்மை வீடு' என்றும், கிருஷ்ணன் நம்பி 'யானை என்ன யானை' என்றும், வி.ஜி. சந்தோசம் 'சந்தோசப் பாப்பா பாட்டு' என்றும் மாறுபட்ட தலைப்பிட்டுள்ளனர்.

குழ. கதிரேசன் 'தொப்பைக் கோழி', 'பள்ளிக்கூட வெள்ளாடு', 'எலி கடித்த பூனை', 'கூட்டாஞ் சோறு' போன்ற வித்தியாசமான தலைப்புகளில் நூல்கள் தந்துள்ளார்.

**பாடல் தலைப்பு:**

நூலின் தலைப்பைக் கண்டு நூலைக் கையில் எடுத்த குழந்தைகள் அதனைப் படிக்க முற்படுவர். அப்போது பாடலின் தலைப்பு அவர்களைக் கவர்ந்திழுப்பதாக இருந்தால் அந்தப் பாடல்களை முதலில் படிப்பர். எனவே பாடல் தலைப்பிலும் சில கவிஞர்கள் உத்திகளைப் புகுத்தியுள்ளனர். சான்றுக்கு 'நண்டு மாமா', 'காக்காய் வாத்தியார்' 'என்னிடம் இருந்தால்' 'கடவுள் யார்', 'பறவைக் கப்பல்', 'நகரும் நகரம்', 'ராணியின் வேலை' போன்றவை சில இவ்வகையில் இடம்பெற்ற பாடல்களின் தலைப்புகள். தலைப்பு வேடிக்கையாகவோ, ஆர்வத்தைத் தூண்டுபவையாகவோ இருந்தால் குழந்தைகள் விரும்பிப் படிப்பர்.

பொதுவாக எதைப் பற்றிய கவிதையோ அதன் பெயரையே பாடல் தலைப்பாக வைப்பதைப் பலரும் பின்பற்றுகின்றனர். சான்றுக்கு 'லட்டு', 'ரொட்டி', 'யானை', 'நாய்', 'கழுதை', 'பள்ளிக்கூடம்', 'நூலகம்' இப்படிப்பட்ட தலைப்புகளே பிள்ளைப் பாடல்களில் அதிகம் காணப்படுகின்றன.

### 3.6. ஒலி, ஒளி:

'கற்றிலனாயினும் கேட்க' என்ற மொழிக்கேற்ப, பாடல்களைப் படித்துக் குழந்தைகள் அறிவதிலும் கேட்டறிவது சிறப்பு. அத்துடன் காட்சியாகக் கண்டறிவது மேலும்சிறப்பு.

#### 3.6.1. இசைத்தட்டு:

கிராமபோன் கருவியில் பயன்படுத்தப்படும் இசைத்தட்டுக்களில் குழந்தைப்பாடல்களை இனிய இசையுடன் வெளியிடும் முயற்சியிலும் தென்னாப்பிரிக்கத் தமிழர்கள் ஈடுபட்டனர்.

“நெட்டால் வைதீக தமிழ் வேதாந்த சபையோரால் 1960-களில் பாரதியார், கவிமணி, அழ. வள்ளியப்பா ஆகியோரின் பாடல்கள் ‘சில்ரன் கார்டன் பள்ளி’யின் ஆசிரியை சாந்தலெட்சுமி அம்மையாரால் இசை அமைக்கப்பட்டு, அப்பள்ளிக் குழந்தைகளால் பாடப்பட்டு இசைத்தட்டாக வெளிவந்தது. இதன் காகித மேலுறை, பொருத்தமான படங்களுடன் ஓவியர் சுப்பு அவர்களால் தயாரிக்கப்பட்டது.” என்ற செய்தி குழந்தை எழுத்தாளர் ஈ.எஸ். ஹரிஹரன் அவர்கள் மூலம் ஆய்வாளர் அறிந்த செய்தியாகும்.

**3.6.2. ஒலிப்பதிவு நாடா:**

கூட்டுக் குடும்ப முறை வழக்கொழிந்து வரும் இக்காலக்கட்டத்தில் தனிக் குடும்பமாக அதுவும் பெற்றோர் இருவரும் பணிக்குச் செல்பவராக இருக்கும் இந்நாளில், குழந்தைகளுக்குப் பாடிக் காட்டவோ, படித்துக் காட்டவோ பெற்றோருக்கு நேரமில்லை. இத்தகு சூழலில் குழந்தைகளுக்கு ஒலி நாடாப் பதிவின் மூலம் குழந்தைப் பாடல்கள் கேட்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

பாரதியார், கவிமணி, அழ. வள்ளியப்பா ஆகிய மூவரின் பாடல்கள் அடங்கிய ஒலிநாடா கீதாஞ்சலி நிறுவனத்தின் மூலம் டி.எம்.சௌந்தர்ராஜன், பி. சுசீலா ஆகியோர் பாடி வெளியிடப்பட்டது.

‘கல்கி’யின் மகள் ஆனந்தி, அழ. வள்ளியப்பாவின் பாடல்களுடன் பழம்பாடல்கள் சிலவற்றையும் இணைத்து ஒரு ஒலி நாடாவை உருவாக்கினார்கள்.

செல்லகணபதியின் ‘பாப்பா பாட்டு பாடுவோம்’ தொகுதி 1, 2, 3 என்ற ஒலிப்பதிவு நாடாக்கள் சங்கர் கணேஷ் இசையமைப்பில் வெளிவந்தன.

குழ. கதிரேசனின் ‘மழலைப் பூக்கள்’, ‘பேசுங்கிளியே’ ஆகிய ஒலிப்பதிவு நாடாக்கள் வெளிவந்துள்ளன.

இவ்வாறு ஒலிப்பதிவான இசையுடன் கூடிய பாடல்கள் குழந்தைகளைக் கவர்ந்தன. மீண்டும் மீண்டும் பாடச் செய்தன.

### 3.6.3. குறுவட்டு:

வானொலியும் ஒலிப்பதிவுக் கருவியும் வழக்கொழிந்த இன்றைய நிலையில் தொலைக்காட்சியும் கணினியும் அவற்றின் இடத்தைப் பிடித்தன. இந்நிலையில் காதால் கேட்பதுடன் கண்டு ரசிக்கவும் வாய்ப்புள்ளது. எனவே கவிஞர்களின் பாடல்கள் குழந்தைகளின் கருத்தைக் கவரும் காட்சிகளாக்கப்பட்டுள்ளன. பாரதியாரின் பாப்பா பாடல், பபூலு நிறுவனம் மூலமும், அழ. வள்ளியப்பாவின் பாடல்கள் கேம்ப்கேர் நிறுவனம் மூலமும் செல்ல கணபதியின் பாடல்கள் பழனியப்பா நிறுவனம் மூலமும் கவிமாமணி சக்தியின் பாடல்கள் பண்மொழிப் பதிப்பகம் மூலமும் குறுவட்டுக்களாக வந்துள்ளன. தொடர்ந்து பல குழந்தைப் பாடல்கள் குறுவட்டுக்களாக வந்த வண்ணம் உள்ளன.

மலேயக் கவிஞர் முரசு நெடுமாறனின் பாடல்களை அவர்தம் குடும்பத்தார் பாடி, நடித்து, 'பாடிப் பழகுவோம்' என்ற பெயரில் குறுவட்டாகத் தயாரித்துள்ளனர். இது ஒரு புது முயற்சி. முரசு கணினி நிறுவனம் இதனை வெளியிட்டுள்ளது.

லதா ரஜினிகாந்த் தனது பள்ளிக் குழந்தைகளை வைத்துப் பல குழந்தைப் பாடல்களை இசையோடு குறுவட்டாகத் தயாரித்துள்ளார். அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியால் பல பள்ளிகள், போட்டிகள், பள்ளி விழாக்களுக்கு கலைநிகழ்ச்சிகள் தயாரிக்கும்போது, தம் பள்ளி மாணவர்கள், ஆசிரியர்கள் உதவியோடு இசையமைத்து, பாடி குறுவட்டாகத் தயாரிக்கும் முயற்சிகளில் ஈடுபடுகிறார்கள்.

### 3.6.4. திரைப்படப்பாடல்கள்:

குழந்தைகளை அன்றும் இன்றும் என்றும் கவர்வன பெரிய திரையில் காணும் திரைப்படங்களாகும்.

திரைப்படங்களில், குழந்தைகளுக்கான பாடல்கள் மிகக் குறைவாகவே உள்ளன.

ஏ.வி.எம்.-மின் 'வா ராஜா வா' என்ற படத்தில் அழ. வள்ளியப்பாவின் 'கல்லெல்லாம் சிலை செய்தான்' என்ற பாடல் குழந்தைகளுக்கானது.

'திக்குத் தெரியாத காட்டில்' என்ற படத்தில் 'பூப்பூவா பறந்து போகும் பட்டுப்பூச்சி அக்கா...' என்ற பாடலும் குழந்தைகளுக்கானது. இவை 35 ஆண்டுகளுக்கு முன்பு திரைப்படத்தில் இடம்பெற்றவை.

'நம்ம குழந்தைகள்', 'ராஜா சின்ன ரோஜா', 'அன்புள்ள ரஜினிகாந்த்' போன்ற படங்களில் குழந்தைகளுக்கான சில பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

குழந்தைகளின் மனங்களைக் கொள்ளை கொள்ளக் கவிஞர்கள் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்தியுள்ளமையை இவ்வியலில் கண்டோம்.

**தொகுப்புரை:**

படைப்பாளர் தம் மதிநுட்பத்தால், படிப்போரைக் கவர்ந்து, படைப்பில் கவனம் செலுத்த வைப்பது உத்தியாகும். அத்தகைய உத்திகள் பலவற்றைக் குழந்தை இலக்கியப் பாடல்களில் கண்டோம்.

- ❖ உத்தியின் இயல்பும் பயனும் விளக்குதல்.
- ❖ குழந்தைப் பாடல்களில் குழந்தைகளின் உளவியல், இயல்பு அடிப்படையில் கவிஞர்கள் உத்திகளைக் கையாளுதல்.
- ❖ உத்தியினை 'இலக்கண உத்தி', 'இலக்கிய உத்தி' என இரு வேறாகப் பிரித்துக் காணுதல்.
- ❖ இலக்கண உத்தியை யாப்பு, அணி அடிப்படையில் பகுத்துக் காணுதல்.
- ❖ மேலும் இலக்கணத்தில் இடம்பெறும் சுட்டு, மரபு, ஒலிப் பிழையற்ற உச்சரிப்பு நிலைகளைப் பாடல் வழி அறிமுகம் செய்தல்.

- ❖ இலக்கிய உத்தியைப் பல்வேறாகக் காணுதல். பொருள் உத்தி என்பதில் பாடுபொருளின் சிறப்புரைத்தல். பேசாதவற்றைப் பேசுபவையாகக் காணுதல். விலங்கு பறவைகளை ஆளாக நோக்கும் ஆளுருவாக்கம், உறவினர்களைப் பாடுதல், வேண்டுகோளாகக் கூறிக் குழந்தையைச் செயல்பட வைத்தல், நல்லன, தீயனவற்றை இனம் காண வைத்தல், கற்பனை நயம்படப் பாடச் செய்தல், சிந்திக்கத் தூண்டும் வகையில் அமைத்தல், புதிய சொற்களை உருவாக்குதல், ஒலி நயம் அமையப் பாடுதல், ஒத்துணர்வு, புலன் மாற்று, குறிப்பு, நகைச்சுவை போன்ற உத்திகள் அமையப் பாடுதல்.

- ❖ பாடலுக்கான நடை பழகு தமிழ், பேச்சு வழக்கு, இலக்கிய வழக்கு, பிறமொழிச் சொல் கலப்பு என்ற வகையில் அமையும் உத்திகள் பற்றிக் கூறுதல்.

- ❖ இலக்கிய உத்தியின் உட்பிரிவான அமைப்பு முறை உத்திகளைச் சுட்டுதல், வினா-விடை, உரையாடல், விவாதம் போன்ற திறன்களை வளர்க்கும் உத்திகளை அமைத்தல்.

- ❖ கவிதை நாடகம், வில்லுப்பாட்டு, இசைப்பாடல், கதைப்பாடல் உத்திகளை அமைத்தல்.

- ❖ மேலும் சங்கிலித்தொடர், எதிர்ச்சொல், பொருள் கூறல், எழுத்து அமைப்பில் புதிய முயற்சி என உத்திகளை அமைத்தல். கூறியது கூறல் குழந்தைப் பாக்களில் வழுவல எனல்.

- ❖ நூல் அமைப்பிலும் வடிவிலும் உத்திகள் அமைத்தல்.

- ❖ நூல் மற்றும் பாடல் தலைப்பிலான உத்திகளைச் சுட்டுதல்.

- ❖ ஒலிநாடா மற்றும் குறுவட்டு மூலம் குழந்தைப் பாடல்களை வெளியிடும் உத்திகளைக் கூறுதல்.

# இயல் மூன்று
# குழந்தைப் பாடல் உத்திகள்

## சான்றெண் விளக்கம்:


1. ச.வே. சுப்பிரமணியன், ''கம்பன் இலக்கிய உத்திகள்'', ப. 37.
2. அமிதசாகரர், 'யாப்பருங்கலக்காரிகை', செய்யுளியல், நூற்பா.-22.
3. த. கோவேந்தன், 'சிந்தனைப் பண்ணையில் பாரதி' (தொ.ஆ.) குமரி அனந்தன் பொன்னருவி ப. 29, 31.
4. சு. செல்லப்பன், 'வளரும் தமிழ்', ப. 25.
5. கதி. கணேசன், 'குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி', ப. 139.
6. வெ. தனலக்குமி, 'குழந்தைப் பாடல்களில் பாடுபொருளும், பாடு நெறியும்', ப. 289.
7. அம்புயம் யுவச்சந்திரா, 'குழந்தை இலக்கியமும் குழந்தைக் கவிஞர் வள்ளியப்பாவும்', ப. 297.
8. த. சரவணத் தமிழன், 'யாப்பு நூல்; நூற்பா விரிவுரை', ப. 131.
9. பூவண்ணன், 'குழந்தை இலக்கியம் ஒரு மதிப்பீடு', ப. 29.
10. ஔவையார், 'நீதி நூல்கள்', 'ஆத்திசூடி', ப. 1, 26.
11. பாரதியார், 'பாரதியார் கவிதைகள்', ப. 259, 260.
12. பால. நடராஜன், 'வட்ட நிலா', ப. 39.
13. மகிழ்ச்சிக் கண்ணன், 'எங்கள் கையிலே', ப. இல்லை.
14. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் - இரண்டாம் தொகுதி', ப. 53.
15. கோ. பெரியண்ணன், 'சிறுவர் இன்னிசைப் பாடல்கள்', ப. 34.
16. இமய பாரதி, 'பாப்பா விரும்பும் பாட்டு', 'தமிழ் மகள் துதி', ப. இல்லை.
17. அமிதசாகரர், ''யாப்பருங்கலக்காரிகை'' ஒழிபியல் ப. 162.
18. இன்பவண்ணன், 'சிறுவர் சோலை', ப. 14.
19. ர. அய்யாசாமி, 'பால ராமாயணம்', ப. 7.
20. செல்ல கணபதி, 'மலரும் மொட்டுக்கள்' ப. 25.
21. சிற்பி பாலசுப்பிரமணியன், ''ம.ப. பெரியசாமித் தூரன்'', ப. 76.
22. இளையவன் 'பாடங்கள்' பாடல் 5.
23. மேலது பாடல் 12.
24. துரை. தில்லான், 'குழந்தைப் பாடல்கள்', ப. 37.
25. அம்புயம் யுவச்சந்திரா 'குழந்தை இலக்கியமும் குழந்தைக் கவிஞர் வள்ளியப்பாவும்', ப. 99.
26. செம்பை சேவியர், 'அறிவியல் அறிந்திடு பாப்பா', ப. 66.
27. மதி ஒளி, 'தூண்டா விளக்கு', ப. 22.
28. வெ. நல்லதம்பி, 'கண்ணே பாப்பா', ப. 18.
29. எல்.எம். பஹதூர், 'பூங்கா ராயா' ப. 35.
30. அ.ரவி, 'சிங்கை தமிழ்ச் செல்வம்- கீழை நாட்டுக் கவிதை மஞ்சரி பாகம்-2' ப. 137, 138.

31. வெ. நல்லதம்பி, 'கண்ணே பாப்பா' ப. இல்லை.
32. தமிழ்மொழி, 'சுட்டி விகடன்', நவம்பர் 2007 ப. 27.
33. புகழேந்தி 'கரும்பலகையில் எழுதாத கவிதைகள்' ப. 5.
34. செல்லகணபதி, 'வளர்ச்சிப் பாதையில் குழந்தை இலக்கியம்' ப. 1.
35. அ. அகமது பஷீர், 'குழந்தை இலக்கியம்' ப. 43.
36. சு. வேல்முருகன், 'வாணிதாசன் குழந்தை இலக்கியம்' ப. 37.
37. தம்பி சீனிவாசன், 'சிவப்பு ரோஜா', ப. 77, 78.
38. ரா. பொன்ராசன், 'பாலும் தேனும்', ப. இல்லை. பாடல்-2.
39. அழ. வள்ளியப்பா, 'சிரிக்கும் பூக்கள்' ப. 55.
40. புலமைப் பித்தன், 'குறள் விளக்கக் குழந்தைப் பாடல்கள்' பாடல் -13.
41. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 22.
42. கலியபெருமாள், 'பாடு பாப்பா', ப. 44.
43. மீனவன், 'நெஞ்சும் நினைவும்' ப. 67.
44. தொல்காப்பியர், 'தொல்காப்பியம்-செய்யுளியல்' நூற்பா - 198.
45. பல்லவன், 'மயில்தோகை' ப. 31.
46. இல. மகிழ்ச்சிக் கண்ணன், 'எங்கள் கையிலே' ப. 7.
47. இன்ப வண்ணன், 'பொம்மை வீடு' ப. 22, 23.
48. சுப்பு ஆறுமுகம், 'குழந்தைக் கவிஞர்கள்' (தொ.ஆ.) பூவண்ணன் ப. 147.
49. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் முதல் தொகுதி' ப. 43, 44.
50. வெ. நல்லதம்பி, 'கண்ணே பாப்பா', ப. 13.
51. பல்லவன், 'மயில் தோகை', ப. 57.
52. கொ.மா. கோதண்டம் 'சின்னச் சின்ன அரும்புகள்', ப. 30.
53. கதி. கணேசன், 'குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி', ப. 108.
54. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 50.
55. எஸ். விஜயலெட்சுமி, 'சின்னக் கண்ணன் பிறக்கிறான்', ப. 22, 23.
56. அழகனார், 'கொக்கரக்கோ', ப. 20.
57. பால. நடராஜன், 'வட்ட நிலா' ப. 77.
58. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி', ப. 91.
59. கொ.மா. கோதண்டம், 'சின்னச் சின்ன அரும்புகள்', ப. 17.
60. பல்லவன், 'மயில் தோகை' ப. 70.
61. மா. இராச மாணிக்கனார், 'குழந்தைப் பாடல்கள்', ப. இல்லை.
62. மு. வரதராசனார், 'சிறுவர் பாட்டு நூற் கோவை', ப. 28.
63. செல்ல கணபதி 'முத்துக் குவியல்' (தொ.ஆ.) ர.அ. & பூவ. ப. 59.
64. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 37.
65. ஆர்.பி.சாரதி, 'சிறுவர் கவிப்பூங்கா', ப. 27.
66. மேலது ப. 28.
67. மேலது ப. 26.
68. தொல்காப்பியர், 'தொல்காப்பியம்' செய்யுளியல் நூற்பா. 210.

69. கலியபெருமாள், 'பாடு பாப்பா', ப. 4.
70. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 23.
71. தமிழவேள் 'குழந்தை விருந்து' ப. 15.
72. இன்பவண்ணன், 'பொம்மை வீடு' ப.இல்லை.
73. கி.வா.ஜகந்நாதன், 'குழந்தை உலகம்' ப. 33, 34.
74. மு.வை. அரவிந்தன், ''அரவிந்தன் கவிதைகள்', ப. 6.
75. வா.சி. தனபாலன், 'அறிவும் அரும்பும்' ப. 31.
76. மு.வை. அரவிந்தன், 'அரவிந்தன் கவிதைகள்' ப. 6.
77. தம்பி சீனிவாசன், 'சிவப்பு ரோஜா', ப. 44.
78. கி.வா. ஜகந்நாதன் 'குழந்தை உலகம்', ப. 8.
79. பூவண்ணன் ''குழந்தைக் கவிஞர்கள்'' ப. 142.
80. கி.வா.ஜகந்நாதன் 'குழந்தை உலகம்', ப. 30.
81. நா.ஆ. சுப்பிரமணியன், 'சிறுவர் கவிதை மலர்', ப. 8.
82. சி.து. கண்ணுசாமி 'கழகச் சிறுவர் பாட்டு' ப. 6.
83. மா. காயாம்பு, 'வேலை கொடுக்கணும் மூளைக்கி', ப. 15.
84. வா.சி. தனபாலன், 'அறிவும் அரும்பும்' ப. 12.
85. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 219.
86. ஆர்வி, 'சிறுவர் இலக்கியம் எழுதுவது எப்படி?' மகரம் (தொ.ஆ.) 'எழுதுவது எப்படி? ப. 321.
87. பெ. தூரன், 'ஆனையும் பூனையும்' ப. 1.
88. அழ. வள்ளியப்பா, 'வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்' ப. 50.
89. குழ. கதிரேசன், 'குழந்தைப் பாக்கள்' ப. 5.
90. செல்ல கணபதி, 'வண்டுகளே உங்களைத்தான்' ப. 15.
91. பாரதிதாசன், 'இளைஞர் இலக்கியம்' முன்னுரை.
92. பஷீர், 'சிரித்த முல்லை' ப. 32.
93. எஸ். விஜயலெட்சுமி, 'சின்னக் கண்ணன் பிறக்கிறான்', ப. 38.
94. மீனவன், 'கொஞ்சும் குழந்தை' ப. 127.
95. முரசு நெடுமாறன், 'இளந்தளிர்' ப. 34.
96-100. சுத்தானந்த பாரதியார், 'குழந்தையின்பம்', ப. 28, 20, 19, 18, 17.
101-104. ஸ்ரீ ஞானப்பிரகாசன், 'இளந்தளிர் பாடல்கள்' ப. 16.
105-107. லெமன் 'கொக்கரக்கோ' ப. 10.
108. மேலது ப. 11.
109. அழ. வள்ளியப்பா, மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி, ப. 85.
110. பெ. தூரன், 'நல்ல நல்ல பாட்டு' ப. 4.
111. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் முதல் தொகுதி' ப. 26.
112. அரிமழம் இராம. கணபதி 'வெள்ளை முயல்', ப. இல்லை.
113. லெமன், 'கொக்கரக்கோ', ப. 12.
114. வல்லநாடு ராமலிங்கம், 'சிறுவர் பாடல்கள்', ப. 14.

115. மேலது ப. 45.
116. சுத்தானந்த பாரதி, 'குழந்தையின்பம்' ப. 43.
117. லெமன் 'கொக்கரக்கோ', ப. 16.
118. நீரை அத்திப்பூ 'நிலவுக்கே போகலாம்', ப. 23.
119. வல்லநாடு ராமலிங்கம், 'சிறுவர் பாடல்கள்' ப. 42.
120. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 91.
121. வல்லநாடு ராமலிங்கம், 'சிறுவர் பாடல்கள்' ப. 32.
122. முத்துக்காளத்தி, 'பாப்பா விரும்பும் பாடல்கள்', ப. 31.
123. கு.அ. தமிழ்மொழி, 'சிறகின் கீழ் வானம்', ப. 111.
124. மின்னூர் சீனிவாசன், 'கண்மணிப்பாட்டு', ப. 47.
125. வி. நடேசன் 'மலர் மனம்', ப. 15.
126. இமயபாரதி, 'பாடு தம்பி பாடு', ப. 47.
127. கு. காண்டீபன் 'இந்தியத் தூண்கள்', ப. 39.
128. லெமன், 'சிப்பாய் வறார்', ப. 19.
129. வெ. தனலக்குமி, 'குழந்தைப் பாடல்களில் பாடு பொருளும் பாடு நெறியும்' ப. 292.
130. கவிமணி 'மலரும் மாலையும்' ப. 99, 100.
131. அழ. வள்ளியப்பா 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப. 31.
132. த. பரசுராமன், 'சிறுவர் இலக்கியம்' ப. 55.
133. மேலது ப. 59.
134. மேலது ப. 56.
135. அழ. வள்ளியப்பா, 'சிரிக்கும் பூக்கள்' ப. 197.
136. தங்கப்பா, 'மழலைப் பூக்கள்' ப. 9.
137. கிருஷ்ணன் நம்பி, 'யானை என்ன யானை', ப. 10.
138. மா. கண்ணப்பன், 'மழலை மலர்கள்', ப. 35-39.
139. அழ. வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் முதல் தொகுதி' ப. 135-137.
140. அழ. வள்ளியப்பா, 'சிரிக்கும் பூக்கள்' ப. 184.
141. சுப்பு ஆறுமுகம், 'காந்தி வந்தார்', ப. 9, 63.
142. கவிமணி, 'குழந்தைச் செல்வம்' ப. 84.
143. பாரதிதாசன், 'இசையமுது', ப. 18.
144. பெரியண்ணன், 'சிறுவர் இன்னிசைப் பாடல்கள்', ப. 87.
145. கவிமணி, 'மலரும் மாலையும்' ப. 57.
146. சூடாமணி 'கண்ணன் கதம்பம்' ப. 7.
147. அரு. சோமசுந்தரன், 'சிறுவர்க்குப் பாடல்', ப. 19-21.
148. சொ. அடைக்கலம், 'பாலர் மலர்கள்', ப. 109-115.
149. மீனவன், 'நெஞ்சும் நினைவும்' ப. 123-125.
150. மேலது ப. 128-131.
151. மேலது ப. 135-137.
152. பி.ஆர். ராஜ சூடாமணி 'என் பெயர் என்ன?'.

153. அழ. வள்ளியப்பா, 'வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்' ப. 54.

154. 'குழந்தை இலக்கிய மலர்' 1961, (தொ.ஆ.) பெ.நா. அப்புஸ்வாமி, பெ. தூரன் ப.122.

155. 'குழந்தை இலக்கிய மலர்' 1959, (தொ.ஆ.) மயிலை சிவமுத்து, தி.ஜ.ர., ப. 12.

156. பிறையணிவோன், 'உங்களுக்குத் தெரியுமா?' ப. 18.

157. மேலது ப. 17.

158. எல்.எம். பஹதூர், 'பூங்ஙாராயா', ப. 20.

## இயல் நான்கு

# ஒப்பீட்டுப் பார்வையில்
# குழந்தை இலக்கியம்

# இயல் நான்கு

# ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம்

குழந்தை இலக்கியம் என்பது உலகளாவிய இலக்கியம். இந்திய மொழிகளிலும் உலக நாடுகளில் பேசப்படும் மொழிகளிலும் குழந்தை இலக்கியம் இடம் பெற்றுள்ளது.

குழந்தைகளுக்கு இடையே மொழி, இனம், மதம் என்ற பாகுபாடு கிடையாது. குழந்தைகள் உணர்வால் ஒத்த தன்மை உடையவர்கள். மொழி என்ற கருவியின் துணையால் பல கருத்துக்களைத் தெரிந்து கொள்கின்றனர். அதன் அடிப்படையில், அவர்கள் சிந்தனையின் விளைவில் தோன்றிய வினாக்களை எழுப்பியும் கருத்துக்களைக் கூறியும் வருகின்றனர்.

குழந்தை வளர்ப்பில் குழந்தை இலக்கியத்திற்கும் ஒரு முக்கியப் பங்குண்டு. பெரும்பாலான மொழிகளில் எழுதா இலக்கியம் எனப்படும் வாய்மொழி இலக்கியமான நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புறப் பாடல்கள் என்பவையே குழந்தை இலக்கியத்தின் தோற்றுவாயாக உள்ளன. ஆய்வாளர் அறிந்த வகையில் பிறமொழி குழந்தை இலக்கியம் பற்றிய செய்திகள் ஒப்பு நோக்கப்படுகின்றன.

**4.1. இந்திய மொழிகளில் குழந்தை இலக்கியம்:**

இந்திய மொழிகளில் சென்ற நூற்றாண்டு வரை குழந்தை இலக்கியத்தில் தேவதை மற்றும் புராணக் கதைகளும் பாடல்களும் இடம் பெற்றிருந்தன.

ஆங்கிலேயர் வருகையைத் தொடர்ந்து இந்திய இலக்கியங்களில் மாற்றம் நிகழ்ந்தன. அதைப் போன்று குழந்தை இலக்கியத்திலும் மாற்றங்களும் வளர்ச்சியும் ஏற்பட்டது.

குழந்தை இலக்கியத்தின் பல்வேறு வகைகள் அதாவது கவிதை, கதைப்பாடல், சிறுகதை, நாவல், நாடகம் என அனைத்தும் பல்வேறு கருப்பொருட்களுடன் வளர்ச்சி அடையத் தொடங்கின. அவை நூல் வடிவம் பெற்றன.

இந்திய மொழிகள் அனைத்திலும் பெரியோர் இதழ்களில் சிறுவர் பகுதியும் தனியே சிறுவர் இதழ்களும் வரத் தொடங்கின.

அகில இந்திய வானொலி நிலையம் மாநில மொழிகளில் சிறுவர்க்கான நிகழ்ச்சிகளை வழங்கியது.

### 4.1.1. திராவிட மொழிகள்:

''திராவிட மொழிகளை ஒரு குடும்ப மொழி என்னும் அடிப்படையில் ஒப்பிட்டு ஆராய்ந்து கால்டுவெல் அவற்றிடையே அமைப்பிலும் பொருளிலும் வடிவிலும் காணப்படும் ஒற்றுமைகளை விளக்கி 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் நூலை இயற்றினார்''.[1]

''தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு முதலியவை ஒரே குடும்ப மொழிகளாம். இவற்றைத் திராவிட மொழிகள் என்பர்.''[2]

### 4.1.2. பிற இந்திய மொழிகள்:

திராவிட மொழிகளல்லாத, பிற பகுதிகளில் பேசப்படுவன மராத்தி, அஸ்ஸாமி, இந்தி, வங்க மொழி , ஒரியா போன்றவையாகும்.

ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம் எனும் இவ்வியலில், இந்திய மொழிகளில் குழந்தை இலக்கியம் குறிப்பாகப் பாடல்கள் குறித்த செய்திகள் தொகுத்து வழங்கப்படுகின்றன.

## 4.2. இந்திய மொழிகளில் குழந்தை இலக்கியத் தோற்றமும் வளர்ச்சியும்:

### தெலுங்கு:

''சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து''[3] என்று பாடினார் பாரதியார்.

*அழகுமிக்க தெலுங்குமொழியில் 18-ஆம் நூற்றாண்டில் குழந்தை இலக்கியம் மலர்ந்தது. ஆந்திரத்தின் கலாச்சாரத் தந்தையான கத்து கூரி வீரேசலிங்கம் அவர்களை (1848-1919) தெலுங்கில் குழந்தை இலக்கிய முன்னோடியாகச் சொல்லலாம். அவரது 'நீதி தீபிகா' நீதி புகட்டும் பாடல்களைக் கொண்ட நூல்.*

*வீரேசலிங்கம் வழியைப் பின்பற்றி புதிய தெலுங்குக் கவிஞர்கள் கடினமான, அலங்காரச் சொற்களைக் கைவிட்டனர். அடுத்த தலைமுறை எழுத்தாளர்கள் குழந்தை இலக்கியத்தில் ஆழ்ந்த அறிவும், சிறந்த கற்பனை ஆற்றலும் கொண்டு விளங்கினர்.*

*எதுகுரி வேங்கட நரசையா, 'கேய தெலு' என்னும் நூலில் சிறந்த இசைப் பாடல்களைக் குழந்தைகளுக்காக இயற்றியுள்ளார். நர்லா சிரஞ்சீவி, ரஜினிகாந்த ராவ்,வேஜெண்ட்லா, சாம்பசிவராவ் ஆகியோர் குழந்தைகளுக்கான ஓசைநயம் மிக்க பாடல்களை இயற்றினர். உத்பலா என்பவர் குழந்தைகளுக்கேற்ற சிறந்த கதைப் பாடல்களை இயற்றினார்.*

**கன்னடம்:**

*இந்தியக் கல்வி முறையில் ஏற்பட்ட மாற்றங்கள், கன்னடக் குழந்தை இலக்கியத்திலும் மாற்றத்தை ஏற்படுத்தியது. எழுத்தாளர்கள் குழந்தைகளுக்காகப் பாடப் புத்தகங்களில் பல்வேறு படைப்புகளைப் படைக்கும் சூழல் ஏற்பட்டது. பாடப் புத்தகங்களுக்காகப் படைக்கப்பட்ட கதைகளும் பாடல்களும் குழந்தைகளுக்கான தனி நூல்கள் வெளிவரக் காரணமாயின.*

*எம்.எஸ்.புட்டண்ணா, ஜி.பி.ராஜரத்னம், ஆர்.கல்யாணம்மாள், ஜெயலட்சுமி சீனிவாசன் போன்றோர் கன்னட குழந்தைப் பாடல்களைத் தந்த கவிஞர்கள்.*

*டி.ஜி.தேசிகௌடா என்பவர் ஓசை நயம் மிக்க மழலைப் பாடல்களைத் தொகுத்துக் கன்னட சாகித்ய பரிக்ஷத் மூலம் வெளியிட்டுள்ளார்.*

**மலையாளம்:**

'மலையாளத்தில் வளமானதொரு குழந்தை இலக்கியத் துறையை வளர்க்கப் போதுமான முயற்சிகள் தொடங்கப்படவில்லை' என்கிறார் மலையாளக் குழந்தை எழுத்தாளர் தாயாட்டு சங்கரன்.

கல்விப் பயிற்சியில் மற்ற மாநிலங்களை விட அதிகமாக முன்னேறியுள்ள கேரளம், குழந்தை இலக்கியத் துறையிலும் முன்னணியில் நிற்கும் என்ற எதிர்பார்ப்பிருக்கும். ஆனால் உண்மையில் மலையாளக் குழந்தை இலக்கியம் அத்தகைய வளர்ச்சி பெறவில்லை. காரணம் கேரளத்தில் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கான இயக்கமோ, நிறுவனமோ இல்லை.

மலையாளக் குழந்தை இலக்கியம் தோன்றிய ஆண்டு 18 ஆம் நூற்றாண்டென்பர். மகாகவி குஞ்சன் நம்பியார் குழந்தைகளுக்காக எழுதிய முதல் கவிஞர் ஆவார். அவர் இயற்றிய 'ஸ்ரீ கிருஷ்ண சரிதம்' மலையாளமும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் கிருஷ்ணரின் பால லீலைகளை எளிமையாக விவரிக்கிறது.

நவீன குழந்தை இலக்கியத்தில் குமரன் ஆசான் இயற்றிய ''புஷ்ப வாடி'' (பூஞ்சோலை), பால ராமாயணம் ஆகியவை சிறந்த படைப்புகளாகும். இவரைத் தொடர்ந்து உள்ளூர் பரமேஸ்வரனும் வள்ளத்தோலும் குழந்தைகளுக்காகப் பல கவிதைகளைத் தந்தனர்.

கவிதைத் துறையில் ஞானபீட விருது பெற்ற மகாகவி சங்கர குரூப் குழந்தைகளுக்காக 'ஓலப் பீப்பி' 'இளம் சுண்டுகள்' என்ற கவிதைத் தொகுப்புகளைப் படைத்துள்ளார். வில்லோப்பள்ளி ஸ்ரீதர மேனன், ''குன்னி மணிகள்'' என்ற கவிதை நூலையும் அக்கிதாத் அச்சுதம் நம்பூதிரி என்பவர், ''அகிதத்திலே குட்டிக் கவிதைகள்'' என்ற கவிதை நூலையும் இயற்றியுள்ளனர்.

மலையாளத்தில் மொழி பெயர்ப்புக் கவிதை நூல்களும் வெளியாகியுள்ளன. புத்தெழத் ராமன்மேனனும் வி.உன்னி கிருஷ்ணன் நாயரும் பல மொழிக் குழந்தைக் கவிதைகளை மலையாளக் குழந்தைகளுக்கு மொழி பெயர்த்துத் தந்துள்ளனர். ரவீந்திர நாத்

*தாகூரின் வங்கமொழிப் பாடல்கள் சிலவற்றை உன்னி கிருஷ்ணன் நாயர் மலையாளத்தில் மொழி பெயர்த்துள்ளார். 1979-க்குப் பிறகு மலையாளக் குழந்தை இலக்கியம் விரைந்தும் சிறந்தும் வளரத் தொடங்கியது.*

**இந்தி:**

*பதினெட்டாம் நூற்றாண்டில், பள்ளிக் கல்வி ஆய்வாளரான ராஜா சிவா பிரசாத், குழந்தைகளுக்காகப் பல நூல்களைப் படைத்தார். அவற்றுள் 'பச்சோன் கி காஹனி'* (Bachchon Ki Kahani) *1867, 'லடகோன் கி காஹனி'* (Ladakon Ki Kahani) *1876 போன்றவை குறிப்பிடத்தக்கவை.*

*இந்தியில் குழந்தை இலக்கியம், துவக்க காலத்தில் இந்தியக் கலாச்சாரத்தைக் குழந்தைகளுக்குக் கற்பிக்கும் நோக்கில் படைக்கப்பட்டது. விடுதலைப் போராட்ட காலத்தில் போராட்டத்திற்கான காரணத்தைக் கூறி, குழந்தைகளைப் போராடத் தயார் செய்யும் வகையில் குழந்தை இலக்கியம் படைக்கப்பட்டது.*

*அயோத்ய சிங் உபாத்யாயா, காந்த பிரசாத் குரு, சுபத்ரா குமாரி சௌகண் போன்றோர் விடுதலைப் போராட்ட காலத்துக் குழந்தை எழுத்தாளர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள்.*

*நாட்டு விடுதலை குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குப் புதிய வேகத்தை அளித்தது. அநேக எழுத்தாளர்களும் பதிப்பாளர்களும் தோன்றித் தங்களின் கடமையை உணர்ந்து செயல்பட்டனர். உலகின் மிகச்சிறந்த இலக்கியங்களுக்கு இணையாக இந்தி குழந்தை இலக்கிய நூல்களின் தரத்தை உயர்த்த அரும்பணி ஆற்றினார்.*

*ஏராளமான கவிதை நூல்கள் இந்தியில் வெளிவந்துள்ளன. குழந்தைகளின் வயதுக்கு ஏற்றவாறு கவிதை நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. சோகன்லால் துவேதி, சுவரண் சகோதரர், அர்சி பிரசாத் சிங், துவாரக பிரசாத், மகேஸ்வரி, சகுந்தலா கிரோதியா, நிரங்கர் தேவ சேவக் போன்றோர் சிறந்த கவிஞர்களாகக் கருதப்படுகின்றனர்.*

**மராத்தி:**

ஆங்கிலேயர் வருகைக்குப் பிறகே, மராத்தி குழந்தை இலக்கியம் படிப்படியாக வளரத் தொடங்கியது. 1828-ஆம் ஆண்டு குழந்தைகளுக்கான முதல் மராத்திப் புத்தகம், அழகில்லாத லித்தோ முறையில் அச்சிடப்பட்டது. அதன் பெயர் ''பாலமித்ரா'' அது பிரெஞ்சு மொழியில் பார்கிஸ் என்பவர் எழுதிய புத்தகத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பைத் தழுவி எழுதப்பட்டது. அதனை மராத்தியில் எழுதியவர் எஸ்.கே.சாட்ரே.

மராத்திய குழந்தை இலக்கியத்தை நீதி போதனையின் பிடியில் இருந்து விடுவித்துச் சுதந்திரமாக வளரவிட்ட பெருமை நாட்டுப்புறக் குழந்தைகளோடு வாழ்ந்த சில பாதிரியார்களைச் சாரும். மகாராஷ்டிரத்தில் மிகவும் விரும்பப்படும் பள்ளிப் பாடல்கள் பலவற்றை இயற்றித் தந்த மேரி போரே, ஆண்ட் எமிலி பிஸ்ஸெல் ஆகியோரை மாராட்டிய குழந்தை எழுத்தாளர்கள் நன்றியுடன் போற்றுகின்றனர்.

மராட்டிய மொழிப் பண்டிதர்கள் குழந்தைகளுக்கு எழுதுவது தாழ்மையான ஒன்று என்று கருதினர்; புறக்கணித்தனர். இருந்தபோதும் 19-ஆம் நூற்றாண்டின் பின் பகுதியில் எழுத்தாளர்கள் ஒகா, ஆப்தே, லோண்டா, கார்கிளிஸ் ஆகியோர் தைரியமாகக் குழந்தை இலக்கியம் படைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர்.

குழந்தைப் பாடல்களும் பொருளிலிப் பாடல்களும் ஓசை நயத்தால் மராத்திக் குழந்தைகளைக் கவர்ந்திருக்கின்றன. வி.என்.திலக் என்பவர் 1895 முதல் 1910 வரை மராத்திய குழந்தைப் பாடல்களில் சிறப்பானவற்றைப் படைத்துள்ளார். அவரைப்போல் டி.பி.தாம்பிரி என்பவரும் குழந்தைகளுக்கான எளிமையான சிறந்த பாடல்கள் பலவற்றை எழுதினார்.

1910-ஆம் ஆண்டு மராத்திய குழந்தைப் பாடல்களில் ஒரு புதிய நிலை உருவானது. மாண்டிசோரி அம்மையார்,குழந்தை உளவியல் உணர்ந்து பாடத்திட்டம் அமைக்கும் எண்ணத்தில் மகாராஷ்டிராவில்

*தங்கியிருந்தார். அந்த நேரத்தில் குழந்தைகளுக்கு எளிமையான, நாடகத் தன்மையுடன் கூடிய பாடல்கள் பல வெளிவந்தன.*

*1936 முதல் 1960 வரை குழந்தைகளின் வயது அடிப்படையில், உணர்வு அடிப்படையில் பாடல்கள் எழுதப்பட்டன. இயற்கை, அன்பு, வீரம் ஆகிய கருப்பொருட்களுடன் புதிய கருப்பொருட்கள் கொண்ட பாடல்களும் குழந்தைகளுக்காக இயற்றப்பட்டன.*

**அஸ்ஸாமி:**

*பழங்காலந் தொட்டு இன்று வரை அஸ்ஸாமி குழந்தைப் பாடல்களில் நிலவுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருகிறது. குழந்தைகளுக்கு மிகவும் பிடித்த நிலவு குழந்தைப் பாடல்களில் மிகுதியாக இடம் பிடித்துள்ளது. அதுவும் நிலவைச் சகோதரியாகக் கருதி இன்றுவரை பாடி வருகின்றனர்.*

*அஸ்ஸாமி குழந்தைப் பாடல்களில், குழந்தை கிருஷ்ணனுக்குத் தனி இடம் உண்டு. பாடல்வழி குழந்தைகளை மகிழ்விக்க வேண்டும்; வண்ணமயமான இலக்கியங்கள் மூலம் நீதி புகட்ட வேண்டும் என்ற நிலையில் அஸ்ஸாமி குழந்தைப் பாடல்கள் இயற்றப்பட்டன.*

*குழந்தைகளின் தினசரி வாழ்வின் அடிப்படையிலான பாடல்கள் சிலவும் இயற்றப்பட்டன. சான்றாக பத்மா கோஸ்வாமி எழுதிய 'பாடிய மாலா' (பாமாலை) நூல் உருவானது. இது போன்று 'ஜெய் பூவார் கீத்' (இனிய காலை) 'பான்ச் ஆங்குலர் கீத்' (ஐந்து விரல்கள்) என்ற பாடல் நூல்கள் வெளிவந்தன.*

*அஸ்ஸாமியக் குழந்தைப் பாடல்கள் பரவலாகப் பல இதழ்களில் காணப்படுகின்றன. நூலாக வெளிவந்தவை சிலவே. ஷாரட்டூட்டா எழுதிய 'கவிதார் மோர் கூ' (தேன் கூடு பாடல்கள்) மற்றும் ஹிரான் மயிதேவி எழுதிய 'அக்கானீர் கீத்' (குழந்தைப் பாடல்) ஆகியவை 1960-களில் வெளிவந்தன.*

**வங்கமொழி:**

வங்க மொழியில் சிறார் இலக்கியம் வெகுகாலத்திற்கு முன் தோன்றியது.

''வங்க மொழியில் சிறுவர் இலக்கிய வளர்ச்சி நிலையினை அடைய ஏனைய இந்திய மொழிகளுக்குப் பல ஆண்டுகள் பிடிக்குமென்ற செய்தி பலருக்கும் ஆச்சரியத்தை விளைவிக்கலாம். தங்கள் மொழியின் பால்கொண்ட ஈடுபாடு, மேலை நாட்டு மொழிகளைக் கற்று, அதிலுள்ள சிறந்த அம்சங்களை மனதிற் கொண்டு, அதே சமயத்தில் தங்களது இயற்கையான சமுதாய உணர்ச்சிக்குக் குந்தகமில்லாமல் நூலாசிரியர்கள் நூல்கள் இயற்றுகின்ற பெருமை முதலியவற்றை இம்மொழி நூல்களில் பரக்கக் காணலாம்''.[4]

வங்கமொழிக் கவிஞர்கள் குழந்தைகளின் ஒழுக்கத்தைப் பாடல் வழி வளர்த்தனர்.

இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்திவ் உபேந்திர நாத்ராய் சௌத்ரி சிறுவர் பாடல்களுக்கான வடிவத்தை வளர்த்து வரத் தொடங்கினார் எனலாம். அவருடைய புதல்வர் சுகுமார் ராய் சௌத்ரி அங்கதம் மிகுந்த வேடிக்கைக் கவிதைகள் எழுதுவதில் வல்லவர். அவற்றுள் 'ஹஜவால', 'அவல்தவல்' என்பவை குறிப்பிடத்தக்கவை. சுகுமார் ராயின் பொருளிலிப் பாடல்கள் குழந்தைகளைக் கவர்ந்தன.

வங்கக்கவிஞர் ரவீந்திரநாத்தாகூர், குழந்தை இலக்கியத்தின் பல்வேறு துறைகளிலும் சிறந்த படைப்புகளைத் தந்தவர். குழந்தைகளுக்கான பாடல்கள் பலவற்றை இயற்றியவர். அவற்றுள் 'பிர்புரீருஸ்' என்ற அபிநயப்பாடல் வங்கக் குழந்தைகளால் போற்றிப் பாடப்பட்டது. இப்பாடல் விஸ்வ பாரதி வெளியீடாக, நந்தலால் பாஸுவின் வண்ண ஓவியங்களுடன் வெளிவந்தன.

தாகூர் குடும்பத்தில் அவர் மட்டுமன்றி அபினந்திரநாத், சத்தியேந்திரநாத், ஸ்வர்ண குமாரி, சரளாபாலா, ஞானோத நந்தினி தேவி போன்றோரும் சிறுவர் இலக்கியத்திற்குப் புது வடிவம் கொடுத்தனர்.

சுனிர்மார் பாசு குழந்தைப் பாடல்கள் பலவற்றை இயற்றியவர். அத்துடன் தம் நூலுக்கான படங்களையும் தாமே வரைந்து வெளியிட்டார்.

நஸ்ருல் இஸ்லாம் சிறுவர்க்காகச் சிறந்த பல பாடல் நூல்களைத் தந்தவர். அவை ''ஜங்கிஃபால்'', ''லிச்சுசோர்'', ''காண்டா டாடு'', ''சுக்கூஓ காத்பெரில்லா'' போன்றவை குறிப்பிடத்தக்கவை. இவர் பாடல்கள் கற்பனை நயத்துடன் சிறந்த சொல்லாட்சியும் ஓசை நயமும் மிக்கவையாகத் திகழ்ந்தன.

வங்கமொழிக் குழந்தைப் பாடல்களில், அறிவியல், சமுதாயச்சூழல், வாழ்வியல்முறை என அனைத்தும் இடம் பெற்று வளர்ந்து வருகிறது.

தமிழைப் போலவே பிற இந்திய மொழிகளிலும் குழந்தை இலக்கியம் வளர்ச்சியடைந்த விதத்தைக் கண்டோம்.

### 4.3. அயல்மொழிகளில் குழந்தை இலக்கியம்:

இந்திய மொழிகளைப் போலவே அந்நிய மொழிகளிலும், குழந்தை இலக்கியம் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. கிரேக்கம், ஆங்கிலம், ரஷ்ய மொழிகளில் குழந்தை இலக்கியம் பற்றிய செய்திகளைக் காண்போம்.

**கிரேக்கம்:**

தொன்மையான மொழி என்று போற்றப்படும் கிரேக்க மொழியில், கிறிஸ்து பிறப்பதற்கு 620 ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தவர் ஈசாப். அவர் குழந்தைகளுடன் ஆடிப்பாடி விளையாடுவதில் மகிழ்ச்சி கொள்வார்.

குழந்தைகளுக்கு அவ்வப்போது பல கதைகளைச் சொல்லுவார். பெரியோர்களிடையே பிரச்சனை வரும்போது அவற்றைத் தீர்க்கவும் சில கதைகள் சொல்லி சமாதானம் செய்வார்.

ஈசாப் கூறிய குட்டிக் கதைகள் எல்லாம் வாய்மொழி வடிவில் இருந்தன. அவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, 1485-ல்

பிரிட்டிஷார் வெளியிட்டனர். அதன் ஒரு பிரதி பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் இன்றும் இடம்பெற்றுள்ளது.

ஈசாப் கதையாகச் சொன்ன நீதிகள், பல மொழிகளில் பாடல்களாக வெளிவந்துள்ளன.

**ஆங்கிலம்:**

ஆங்கிலேயர்கள் பிறமொழியினைப் பின்பற்றி இலக்கியம் படைத்தாலும், தமக்கெனத்தனித் தன்மையுடன் படைக்கும் ஆற்றல் பெற்றிருந்தனர். குழந்தை இலக்கியத்திலும் தடம் பதித்தனர்.

1671 முதல் 1757 வரையிலான காலகட்டத்தில் வாழ்ந்த லண்டனைச் சேர்ந்த கோலி சிப்பர் பள்ளி மாணவராக இருந்த காலத்திலேயே எழுதத் தொடங்கினார். நடிகனாக வாழ்வைத் தொடங்கியவர் கவிஞனாக மாறினார். அவர் குழந்தைகளுக்கான பாடல்களில் நாட்டு நடப்பை எழுதினார்.

1730 முதல் 1774 வரையிலான காலகட்டத்தில் வாழ்ந்த ஆலிவர் கோல்ட் ஸ்மித், குழந்தை எழுத்தாளராகத் தடம் பதித்தார். குழந்தைகளுக்காகப் பல பாடல்களை எழுதியவர். அத்துடன் வேற்றுமொழிப் பாடல்களைப் பெயர்த்துக் குழந்தைகளுக்காகத் தந்துள்ளார்.

ஆல்பிரட் லார்ட் டென்னிசன் 18-ஆம் நூற்றாண்டின் குழந்தைக் கவிஞர்களுள் வெற்றி பெற்றவர் எனலாம். அவர் மாணவரிடையே பிரபலமான கவிஞராக விளங்கினார்.

ரூடியார்ட் கிப்ளிங் பம்பாயில் பிறந்தவர். அவரின் தந்தை, பள்ளித் தலைமை ஆசிரியராக விளங்கினார். கிப்ளிங் மாணவப் பருவத்திலேயே பள்ளி இதழின் ஆசிரியராகத் திகழ்ந்தார். அவர் இங்கிலாந்து நாட்டில் மிகச் சிறந்த குழந்தை எழுத்தாளராக விளங்கினார். பல பாடல்களை எழுதிக் குழந்தைகளின் மனம் கவர்ந்தார்.

ஜான் எட்வார்ட் மாஸ்பில்ட் 1878-1967-க்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர். அவரும் குழந்தை இலக்கியப் படைப்புகள்

பலவற்றைப் படைத்துத் தந்துள்ளார். மேலும் குழந்தைப் பாடல்கள் 50 தொகுதிகள் வெளியிட்டுள்ளார்.

ஜான் எட்வார்டைத் தொடர்ந்து இன்று வரை பலரும் ஆங்கிலக் குழந்தைப் பாடல்களை இயற்றி வருகின்றனர்.

**சோவியத்து நாடு:**

சோவியத்து யூனியன் என்ற பெயரில் பல சிறு நாடுகள் சேர்ந்திருந்தன. அவற்றை ஜார் என்ற மன்னன் ஆட்சி செய்து வந்தார். அவர் காலத்தில் மக்கள் புழுப்பூச்சி, புல்கல்லாய் மதிப்பிழந்து துன்பப்பட்டனர். பஞ்சம், பட்டினி என வாடினர்.

மக்கள் அனைவரும் மாவீரர் லெனின் தலைமையில் ஒன்று திரண்டனர். ஜார் மன்னரை எதிர்த்து வெற்றி பெற்றனர். சோவியத்து நாட்டில் சமதர்ம ஆட்சி மலர்ந்தது.

சோவியத்து நாடு இந்தியாவைப் போன்று பல மொழிகள் பேசும் மக்களைக் கொண்டது. குழந்தைகளுக்காக மொத்தம் 89 மொழிகளில் நூல்கள் வெளி வருகின்றன.

பள்ளிப் பருவம் முதல், நூல்கள் படிக்கும் பழக்கத்தைக் குழந்தைகளிடம் வளர்த்து வருகின்றனர். பள்ளிப் பருவத்தில் படிக்கத் தொடங்கிய குழந்தைகள் வாழ்நாளின் இறுதிவரை படித்து மகிழ்கின்றனர்.

மாஸ்கோவில் குழந்தை நூல்கள் பதிப்பகம் என்ற பதிப்பகம் குழந்தைகளுக்கான நூல்களை மட்டுமே பதிப்பிக்க, மாக்ஸிம் கார்க்கி என்பவரால் நிறுவப்பட்டது. குழந்தைகளுக்கான தரமான நூல்கள் அச்சிட வேண்டும் என்ற எண்ணத்தில் நிறுவப்பட்டது. சோவியத்து நாட்டுக் குழந்தை நூல்கள் வழவழப்பான தாளில், வண்ண ஓவியங்களுடன் வெளியிடப்பட்டன.

சோவியத்து நாட்டில் குழந்தைப் புத்தகங்கள் ஆண்டொன்றிக்கு 27 கோடி பிரதிகள் விற்பனையாகின்றன.

கார்க்கி ஒருமுறை, ஒரு விளம்பரம் கொடுத்தார் 'நான் குழந்தைகளுக்காக எழுதப் போகிறேன். எப்படிப்பட்ட நூல் வேண்டும்? எனக் குழந்தைகள் கடிதம் மூலம் தெரிவிக்கலாம்' என்று கூறியிருந்தார். அதற்கு 2000 குழந்தைகள் பதிலளித்தனர்.

மேலும், குழந்தை நூல்களின் பின்பகுதியில், அந்நூல் பற்றிய வினாப் பட்டியல் ஒன்று இடம்பெறச் செய்தார். நூலைப் படித்து முடித்த குழந்தைகள் வினாவுக்கு விடையெழுதி, பதிப்பக முகவரிக்கு அனுப்புவர். பதிப்பகம் குழந்தைகளின் விடையை உரிய நூலாசிரியரிடம் சேர்த்து விடும்.

மேற்கண்ட செயல்கள் மூலம் குழந்தைகளின் ஈடுபாடு, விருப்பம், தேவை போன்றவற்றை உணர்ந்து குழந்தை எழுத்தாளர்கள் நூல் படைத்தனர்.

சோவியத்து நாட்டில் குழந்தை வாசகர்களுக்காக மாநாடு நடத்துகிறார்கள். ஒரே நேரத்தில் நாட்டின் பல பகுதிகளில் இத்தகைய மாநாடுகள் நடைபெறுகின்றன. அம்மாநாட்டிற்கு பெற்றோர்கள், குழந்தைகளைத் திருவிழாவிற்கு அழைத்துச் செல்வதுபோல் அழைத்துச் செல்கின்றனர். குழந்தை நூல் படைப்பாளர்களும் பதிப்பாளர்களும் இம்மாநாட்டிற்கு அழைக்கப்படுகின்றனர். குழந்தைகளுடனான கலந்துரையாடல் மூலம் குழந்தைகளின் விருப்பங்களை அறிந்து குழந்தை நூல்களை உருவாக்குகின்றனர்.

**4.4. குழந்தை இலக்கிய வளர்ச்சியில் இதழ்கள்:**

தமிழில் குழந்தை இலக்கியம் தோன்றி வளர வார, மாத இதழ்கள் துணை செய்த விதத்தை முன்பு குறிப்பிட்டோம். அதே போல் பிற மொழிகளிலும் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு இதழ்கள் காரணமாயிருந்தன.

பெரும்பாலான மொழிகளில் குழந்தைகளுக்கென தனி இதழ்கள் வெளி வரும் முன்பாக, பெரியோர் இதழ்களின் ஒரு பகுதியில் குழந்தை இலக்கியம் இடம்பெற்றது. அதற்குக் குழந்தைகளிடம் கிடைத்த வரவேற்பின் அடிப்படையில் சிறுவர்க்கான மாத, வார இதழ்கள்

வெளிவரத் தொடங்கின. குழந்தைகளிடையே படிக்கும் பழக்கத்தையும் படைப்பாற்றலையும் ஏற்படுத்தி வளர்த்தவை இதழ்கள்.

தெலுங்கில் 1885-ல் 'ஜனவினோதினி' என்ற மாத இதழ் அவ்வப்போது குழந்தைகளுக்கான படைப்புகளை வெளியிட்டன. அதனைத் தொடர்ந்து பல பெரியோர் இதழ்களில் சிறுவர் பகுதி வெளிவரத் துவங்கின.

சிறுவர்க்காகவே 1945-ல் 'பாலா' என்ற தெலுங்கு இதழ் வெளியானது. அதனைத் தொடர்ந்து 'சந்த மாமா', 'பாலமித்ரா', 'பாலபந்து', 'பாலானந்தம்', 'பாலவிநோதம்' போன்ற சிறுவர் இதழ்கள் வெளிவந்தன.

கர்நாடக மாநிலத்தில் ஆர். கல்யாணம்மாள், கன்னட குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கும் குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கும் தன் வாழ்நாள் முழுவதும் அரும்பணியாற்றினார். அவர் 'அகில கர்நாடக மக்கள கூட்ட' என்ற குழந்தைகள் சங்கத்தைத் துவங்கினார். அவ்வமைப்பின் கிளைகள் கர்நாடகா முழுவதும் இருந்தது. 'கன்னட பவுட்டா' என்ற குழந்தைப் பத்திரிகையைத் துவங்கினார். உதய சங்கரன் என்ற சிறுவனை அவ்விதழின் ஆசிரியராக்கினார். குழந்தைகளின் படைப்புகள் வெளிவர இவ்விதழ் உதவியது.

மேலும் கன்னடத்தில் 'மக்கள புஸ்தகா' 'நம்ம புஸ்தகா' 'சந்தமாமா' 'பாலமித்ரா' போன்ற குழந்தை இதழ்கள் வெளிவந்தன.

கேரள மாநிலத்தில் 'மாத்ருபூமி', 'ஜெய கேரளம்' போன்ற பெரியோர்க்கான இதழ்கள் சிறந்தமுறையில் சிறுவர் பகுதியை வெளியிட்டன. அத்துடன் சிறுவர் அமைப்பையும் ஏற்படுத்தி, குழந்தை இலக்கிய நிகழ்ச்சிகள் நடத்தின.

சிறுவர்க்கான மலையாள இதழ் 1948-ல் 'பாலான்' என்ற பெயரில் வெளி வந்தது. அதனைத் தொடர்ந்து 'பூம்பாட்டா', 'கிங்கிணி', 'பாலராமா' 'பாலயோகம்' போன்ற சிறுவர் இதழ்கள் வெளிவந்தன. மேலும் பள்ளிகளில் குழந்தைகளின் படைப்பாற்றலை வளர்க்க, ஆண்டு விழா மலர்கள் பள்ளியின் சார்பில் வெளியிடப்பட்டன.

இந்தியில், விடுதலைப் போராட்ட காலத்தில், 'பாலசகா' 'சிசு' 'பாலக்' போன்ற புகழ் பெற்ற குழந்தை இதழ்கள் வெளிவந்தன.

1947-க்குப் பிறகு 'பரக்' 'நந்தன்' 'பாலபாரதி' போன்ற இதழ்கள் குழந்தைகளுக்காக வெளியிடப்பட்டன. இந்திய மொழிகள் பலவற்றில் வெளியான 'சந்தமாமா' 'பாலமித்ரா' போன்றவை இந்தியில் வெளிவந்தன.

மராத்தியில் 1910-ஆம் ஆண்டு "ஆனந்தா" என்ற சிறுவர் மாத இதழ் தொடங்கப்பட்டது. குழந்தை இலக்கியத்தில் பல புதிய மாற்றங்களைக் கொண்டுவந்த பெருமை இவ்விதழுக்கு உண்டு.

அஸ்ஸாமில் 1883-ல் 'லாரா பந்து' என்ற சிறுவர் இதழ் வெளிவந்தது. ஆனால் அது தொடர்ந்து, வெளிவர இயலாது நின்றது. அதனை அடுத்து 1916-ல் 'அக்கன்', 1923ல் 'மைனா' போன்ற இதழ்கள் வெளிவந்தன.

வங்கமொழியில் சிறுவர் இலக்கியம், சிறுவர் இதழ்கள் மூலம் மாற்றம் பெற்று படிப்படியாக வளர்ச்சி அடைந்தது.

உபேந்திர நாத் ராய் சௌத்ரியும் அவரது குடும்பத்தாரும் 'சந்தோஷ்' என்ற சிறுவர் இதழைத் துவங்கினர்.

1878-ல் 'பாலக்பந்து' என்ற சிறுவர் இதழ் துவங்கப்பட்டது. இது குழந்தைகளைப் படைப்பாளியாக்கியது. 'பாலக்' என்ற சிறுவர் இதழ் தாகூரால் நடத்தப்பட்டது. இது சிறுவர் இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளான கதை, கவிதை, நாடகம், நாவல் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உதவியது.

**4.5. வானொலி நிகழ்ச்சிகள்:**

இந்திய மொழிகள் பலவற்றிலும் குழந்தைகளுக்கான வானொலி நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன. தமிழகத்தைப் போலவே தெலுங்கு, வங்கம் போன்ற மொழிகளில் மழலையர்க்கும் சிறுவர்க்கும் ஏற்ற வானொலி நிகழ்ச்சிகள் தயாரிக்கப்பட்டுக் குழந்தைகள் சிறப்பாக பங்கேற்கின்றனர்.

அகில இந்திய வானொலி நிலையம் சென்னை, விஜயவாடா, ஹைதராபாத் ஆகிய நிலையங்களில் தெலுங்கு சிறுவர்களுக்கான நிகழ்ச்சிகளை ஒலிபரப்பின. ராகவ்ராவ், காமேஸ்வரி ஆகியோர் அக்காலத்தில் 'வானொலி அன்னையா', 'வானொலி அக்கையா' என்று தெலுங்குக் குழந்தைகளால் போற்றப்பட்டனர்.

சென்னை வானொலியில் தெலுங்கு சிறுவர் நிகழ்ச்சி தொடங்குகையில்,

''ரார சின்ன பில்லாரா
ரார சிட்டி தல்லுலாரா''.

என்ற பாடல் ஒலிபரப்பாகும். இது குழந்தைகளை நிகழ்ச்சிக்கு அன்புடன் அழைக்கும் பாடல் ஆகும்.

''பேதாமா இக போதாமா
பேதாமா இக போதாமா''.

என்று நிகழ்ச்சியின் முடிவில் 'வீட்டுக்குப் போகலாமா' என்ற பாடலுடன் முடிவடையும்.

இதுபோல் தமிழில், 'மழலை அமுதம்', 'சிறுவர் சோலை' நிகழ்ச்சிகளையும் சென்னை வானொலியில், 'பாப்பா மலர் மலரும் நேரமிது' என்ற பாடலுடன் தொடங்கினர்.

கொல்கத்தா வானொலியில் நிருபேந்திர கிஷோர் சட்டோபாத்யாயா சிறுவர் பகுதியில் பணியாற்றுகையில், அவர் மூலமாக வங்கமொழி குழந்தை இலக்கியத்தின் தரம் மேலும் உயர்ந்ததாகக் குறிப்பிடுகின்றனர்.

தமிழ் தவிர பிற மொழிகளில் குழந்தை இலக்கியம் குறித்த செய்திகளை அறிந்தோம்.

**4.6. குழந்தைப் பாடல்களில் ஒப்பீடு:**

பிறமொழிக் குழந்தைப் பாடல்களைப் போலமைந்த குழந்தைப் பாடல்கள் தமிழில் இருப்பதைக் காணலாம்.

பிறமொழிப் பாடல்களைத் தழுவி எழுதப்பட்ட தமிழ்ப் பாடல்கள் குழந்தை இலக்கியத்தில் இடம்பெற்றன.

குழந்தைகளுக்கான பிறமொழிப் பாடல்கள் தமிழிலும், தமிழ்ப் பாடல்கள் பிறமொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டமையைக் காணலாம்.

பிறமொழிப் பாடல்களைப் போன்ற வடிவமும் கருத்து ஒற்றுமையும் கொண்ட பாடல்களையும் இவ்வியலில் காணலாம்.

குழந்தைப் பாடல்கள் பின்வருமாறு ஒப்பீடு செய்து, பகுத்துக் காணப்படுகிறது.

**ஒப்பீடு:**




என்ற நிலையில் தமிழுடன் பொருந்துவனவற்றைப் பிறமொழிச் சான்றுகளுடன் காண முற்படுவோம்.

**4.6.1. தழுவல்:**

தமிழில், குழந்தை இலக்கியத்திற்கு வித்திட்ட கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பிற மொழிகளில் இருந்து சில பாடல்களைத் தழுவி, தமிழ்க் குழந்தைகளுக்கு வழங்கியுள்ளார்.

குட்ரிச் என்ற கவிஞர் எழுதிய ஆங்கிலப் பாடலைத் தழுவி ‘ஆறு’ என்ற பாடலை எழுதினார்.

''கல்லும் மலையும் குதித்துவந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன்;
எல்லை விரிந்த சமவெளி—எங்கும்நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன்.

ஏறாத மேடுகள் ஏறிவந்தேன்—பல
ஏரி குளங்கள் நிரப்பிவந்தேன்;
ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன்.

அல்லும் பகலும் அலைந்துவந்தேன்—எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன்.
நில்லும் எனக்கினி நேரமில்லை— இன்னும்
நீண்ட வழிபோக வேண்டும்அம்மா''![5]

*வங்கமொழியில் கவிஞர் ஸ்ரீ ராமப்பிரசாதஸேன் இயற்றிய பாடல் ஒன்றைத் தழுவி கவிமணி 'ஞான தீபம்' என்ற பாடலாகத் தந்துள்ளார்.*

''மனமே! நீயும் வருந்துவதேன்?
மகிழ்ந்து தேவி திருநாமம்
தினமும் மறவா தன்போடு
தியானஞ் செய்து வாழ்வாயே!

பூவும் வேண்டாமே—பழமும்
பொரியும் வேண்டாமே
மேவும் உள்ளன்பே—தேவி
விரும்பும் நல்லமுதாம்.

குருடர் கூடிநின்று—கற்பூரம்
கொளுத்திக் காட்டுவதால்,
சிறிதும் நன்மையுண்டோ? இதனைச்
சிந்தனை செய்வாயே.

ஒளியை நோக்கிடவே—விளக்கின்
உதவி வேண்டுவதேன்?

தெளிய உள்ளத்தில் –ஞான
தீபம் ஏற்றிவையே''[6]

கவிமணி ஆங்கிலப்பாடல்கள் சிலவற்றையும் இரவீந்திர நாத் தாகூரின் வங்கமொழிப் பாடல்கள் சிலவற்றையும், சுத்தானந்த பாரதியார் இயற்றிய பிரஞ்சுப் பாடலையும் வடமொழிப் பாடல்கள் சிலவற்றையும் தழுவி தமிழில் குழந்தைப் பாடல்கள் எழுதியுள்ளார்.

கவிமணியைக் குருவாகக் கொண்டவர் அழ.வள்ளியப்பா, அவரும் சில ஆங்கிலப் பாடல்களைத் தழுவி எழுதியுள்ளார்.

ஜார்ஜ் கிறிஸ்டியன் ரோஸ்டி என்ற ஆங்கிலக் கவிஞரின் 'Who has seen the wind?' என்ற பாடலைத் தழுவி அழ.வள்ளியப்பா 'காற்று எங்கே?' என்ற தலைப்பில் இயற்றியுள்ளார். இந்தப்பாடல் அண்ணனும் தம்பியும் உரையாடும் விதத்தில் அமைந்துள்ளது.

''அண்ணண்–காற்றை எந்த இடத்திலேனும்
கண்ட துண்டோ தம்பிநீ?
தம்பி– காற்றை இந்தக் கண்களாலே
கண்ட தில்லை இதுவரை.
அண்ணன்–காற்று உண்டு உலகில் என்று
கண்டு கொள்வ தெப்படி?
தம்பி–கண்டு பிடிக்க வழிகள் உண்டோ?
கற்றுத் தருவாய் அண்ணனே.
அண்ணன்–பட்டம் மேலே செல்வதைப் பார்.
பச்சை இலைகள் அசைவதைப் பார்
கடலில் அலைகள் அலைவதைப் பார்
காகி தங்கள் பறப்பதைப் பார்.
இவைக ளெல்லாம் யாரினாலே?
இன்னும் தெரிய வில்லையா?
தம்பி–ஆமாம்,ஆமாம், காற்றினாலே
அறிந்து கொண்டேன் அண்ணனே!''[7]

*ராபர்ட் லோயிஸ் ஸ்டீவன்சன் என்பாரின்* 'My shadow' *என்ற பாடலைத் தழுவி அழ.வள்ளியப்பா 'நிழல்' என்ற பாட்டை எழுதியுள்ளார்.*

''எங்கெங் கேநான் சென்றிடினும்
என்னைத் தொடர்ந்தே வந்திடுமே.
காதும் மூக்கும் இருந்திடினும்
கண்ணை மட்டும் காணவில்லை.
உருவம் என்னைப் போலிருந்தும்
உரையா தொன்றும் என்போலே.
யாரா யிருப்பினும் அதன்தோற்றம்
என்றும் கறுப்பு நிறமேதான்!''[8]

*இதுபோல் இன்னும் சில ஆங்கிலப் பாடல்களையும் தழுவி அழ.வள்ளியப்பா தமிழில் தந்துள்ளார்.*

*கவிஞர் ரா.பொன்ராசனும்* 'Pussy cat Pussy cat' *என்ற ஆங்கிலப் பாடலைத் தழுவி 'பூனையக்கா' என்ற பாடலை எழுதியுள்ளார்.*

''பூனையக்கா பூனையக்கா
எங்கே போனீங்க?
ராணியக்கா வீடுபார்க்க
லண்டன் போனேன்நான்.
ராணியக்கா வீடுபோயி
என்ன கண்டீங்க?
கோணமூஞ்சிச் சுண்டெலியைக்
கொன்று தின்றேன் நான்!''[9]

*கவிஞர் ஆர்.பி.சாரதி என்ற பெயரில் எழுதும் ஆர்.பார்த்தசாரதி ஆங்கிலம், ஸ்காட், இந்தி ஆகிய மொழிகளில் உள்ள பாடல்களைத் தழுவி தமிழில் குழந்தைப் பாடல்கள் இயற்றியுள்ளார். இவரின் 'இமயம்' என்ற பாடல் இந்தி மொழித் தழுவல்.*

''இமயம் என்னைப் பாரடா
எழுந்தே நீயும் நில்லடா,

புயலும் மழையும் என்செயும்?
புறமுது கிட்டோ டிடும்.

மண்ணில் நின்று உயர்ந்துநான்
விண்ணில் மீனையும் தீண்டுவேன்
மனதில் உறுதி கொண்டுநீ
மேலும் வெற்றி குவித்திடு!''[10]

*ஸ்காட்லாந்தில் பேசப்படும் ஸ்காட்மொழியில் நாட்டுப் பற்றை ஊட்டும் பாடலைத் தழுவி ஆர்.பி.சாரதி 'இருக்கிறதா, உயிர் இருக்கிறதா?' என்ற பாடலை இயற்றியுள்ளார்.*

''இருக்கிறதா, உயிர் இருக்கிறதா?
இது என் நாடு, என் தாய் நாடெனும்
பூரிப்புடனே பெருமிதம் பொங்க
நாடுவிட்டொரு நாடு செல்லினும்
நாட்டு நினைவே நெருப்பா யெரிக்கும்
நெஞ்சம் இல்லா நீசனவற்கே
இருக்கிறதா, உயிர் இருக்கிறதா?''[11]

*ஆர்.பி.சாரதி சில ஆங்கிலப்பாடல்களைத் தழுவியும் தமிழில் குழந்தைப் பாடல்கள் தந்துள்ளார்.*

*அகமது பஷீர், தாகூரின் வங்க மொழிப் பாடலைத் தழுவி 'ஏனம்மா சிரிக்கின்றாய்?' என்ற பாடலை இயற்றியுள்ளார்.*

''கட்டாந் தரையில் உட்கார்ந்து
கன்னக் குழியில் கைவைத்துக்
கட்டிக் கரும்பே என் அம்மா
கவலை என்ன கொள்கின்றாய்?'

ஊர்க்குப் போனார் அப்பாவும்
உனக்குக் கடிதம் எழுதலையோ?
அஞ்சல் காரர் வந்திட்டார்
அம்மா நானும் பார்த்திட்டேன்

அப்பா எழுதும் கடிதங்கள்
அனைத்தும் தானே படித்திடவே
தப்பாய் வைத்துக் கொள்கின்றார்
சரியில் லாத ஆளம்மா!

அழகுக் கடிதம் அத்தனையும்
அவரே படிக்க விடலாமோ?
அப்பா எழுதும் கடிதங்கள்
அனைத்தும் நானே எழுதிடுவேன்

அப்பா போல நான் அந்த
அசடன் கையில் கொடுப்பேனா?
தப்பித் தவறிப் போகாமல்
தருவேன் உனது கைகளிலே!

அம்மா அம்மா என்னைப்பார்
ஆமாம் நீ ஏன் சிரிக்கின்றாய்?''[12]

என்று சிறு குழந்தையின் செயலை தாகூர் கவிதையின் வழி, காட்சிப் படுத்தியுள்ளார் அகமது பஷீர்.

பிறமொழிப் பாடல்களைத் தழுவி தமிழில் குழந்தைப் பாடல்கள் எழுதப்பட்டதைப் போல், பிறமொழிக் கதைகளைத் தழுவியும் பாடல்கள் எழுதப்பட்டன.

தண்டரை முகில் வண்ணன், இராமகிருஷ்ண பரமஹம்சரின் கதையைத் தழுவி 'அந்நியர்க்கு இடங்கொடேல்' என்ற பாடலை இயற்றியுள்ளார்.

''பறவை களுக்குள்
　　தலைவன் யார் எனத்
தேர்தல் வந்ததாம்–ஒரு
　　பருந்தும் பச்சைக்
கிளியும் அதற்குப்
　　போட்டி இட்டதாம்.

ஆயி ரங்கள்

சாதிப் பிரிவு

நம்முள் இருக்கலாம்—பிற

அந்நி யர்கள்

எப்ப டித்தான்

நுழையப் பொறுக்கலாம்?

என்று பருந்து

சொல்லக் கிளியும்

ஏற்றுக் கொண்டதாம்—அவை

இரண்டும் நண்ப

ராகி மனதை

மாற்றிக் கொண்டதாம்''.[13]

*என்று தமிழ்க் குழந்தைகளுக்குப் பாடலாகத் தந்துள்ளார். மேலும் சோவியத்து ரஷ்யக் கதைப்பாடல்களைத் தழுவி இவர் பாடலாகப் படைத்துள்ளார்.*

*'உழைப்பவனுக்கு உணவு', 'தாய் அன்பு', 'யார் அதிக பலசாலி' ஆகியவை ரஷ்யக் கதைகளைத் தழுவி எழுதப்பட்ட பாடல்கள்.*

தம்பி: அண்ணா எனக்கொரு சந்தேகம்

அகிலத்தில் யார்மிக பலசாலி?

அண்ணன்: என் விடை முடிவில் சொல்லுகிறேன்.

உன்பதில் என்ன? நீ சொல்லு!

தம்பி: எனக்குத் தெரிந்த உயிரினத்தில்

யானை தானே பலசாலி!

அண்ணன்: ஒன்பது யானை பலங்கொண்ட

ஒருயிர் இனமது திமிங்கிலமாம்!

தம்பி: அதிசயம்! அந்தத் திமிங்கிலந்தான்

அனைத்திலும் வலியதா? சொல் அண்ணா?

அண்ணன்: யானையை அடக்கிப் பழக்குவதார்?
திமிங்கில வேட்டை நடத்துவதார்?
கிரேனைச் செய்தே இயக்குவதார்?
இரயிலை இணைத்தே ஓட்டுவதார்?
கப்பலைக் கட்டிச் செலுத்துவதார்?
கண்டுகொள் அவரே பலசாலி!

தம்பி: அறிந்தேன்! அறிந்தேன் 'மனிதன்' தான்
அனைத்திலும் மிக மிகப் பலசாலி!''[14]

*அண்ணனும் தம்பியும் உரையாடும் பாடல்வழி மனித பலத்தைக் கூறும் இப்பாடல் ரஷ்யக் கதையின் தழுவலாக அமைந்த, ''யார் அதிக பலசாலி'' என்ற பாடலாகும்.*

*பிறமொழிப் பாடல்களைத் தழுவிக் குழந்தைகளுக்காகப் பல கவிதைகளைத் தமிழ்க்கவிஞர்கள் தந்துள்ளனர். அவற்றையும் நம் சமுதாயச் சூழலுக்கு ஏற்பத் தந்துள்ளனர். மொழியும் சூழலும் மாறுபடினும் உணர்வென்பது குழந்தைகளுக்குப் பொதுவானது என்பதால் குழந்தைகள் இத்தகைய கவிதைகளைப் பாடி மகிழ்வர்!*

**4.6.2. மொழி பெயர்ப்பு:**

''சென்றிடுவீ ரெட்டுத் திக்கும்–கலைச்
செல்வங்கள் யாவுங் கொணர்ந் திங்கு சேர்ப்பீர்!''[15]

*என்றார் மகாகவி பாரதியார்.*

*எட்டுத்திக்கும் சென்று நம் கவிஞர்கள் கலைச் செல்வங்களுள் ஒன்றான கவிதைச் செல்வத்தைக் கொண்டுவந்தனர்.*

**பிறமொழியிலிருந்து தமிழில்:**

''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்''[16]

*என்ற பாரதியின் வாக்கிற்கேற்ப பிறமொழிப் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்த்துத் தந்தனர்.*

*ஆங்கிலக் கவிதைகளையும் தமிழில் மொழிபெயர்த்துக் குழந்தைகள் பாடத் தந்துள்ளனர். கவிஞர் தமிழப்பன் 'சின்ன சின்ன அணில்கள்' என்ற கவிதைத் தொகுப்பின் பின் பகுதியில் ஏழு பாடல்களையும் அதன் ஆங்கில மூலத்தையும் தந்துள்ளார்.*

"What does the bee do- Bring Home Honey
What does the father do-Bring Home Money
And what does the mother do-Lay out the Money
And what does the baby do-Eat up the Honey"[17]

*இந்தப் பாடலைத் தமிழில், 'குழந்தை என்ன செய்கிறது?' என்ற தலைப்பில் தமிழப்பன் மொழி பெயர்த்துள்ளார்.*

**''தேனீ என்ன செய்கிறது?
தேனைக் கொண்டு வருகிறது
தந்தை என்ன செய்கிறார்?
தந்தை பணம் கொணர்கிறார்
அன்னை என்ன செய்கிறாள்?
அதனைச் செலவு செய்கிறாள்.
குழந்தை என்ன செய்கிறது?
கொம்புத் தேனைக் குடிக்கிறது''.[18]**

"One two three four five
Once I caught a fish alive.
Six seven eight nine ten
Then I throw him back again"[19]

*என்ற பாடலைத் தமிழில் 'பத்து வரை சொல்லு' என்ற தலைப்பில்,*

**''ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து
ஒரு முறை மீனை நானே
உயிரோடு பிடித்தேனே
ஆறு ஏழு எட்டு ஒன்பது பத்து**

பின்னர் நானே மீண்டுமதனை
நீரில் விட்டேனே!''[20]

என்று மொழிபெயர்த்துள்ளார்.

சோவியத் குழந்தைப் பாடல்களை அழகி மொழி பெயர்த்துள்ளார். சோவியத்துக் கவிஞர்களான ஏ. பார்ட்டோ, எம்.பிளையாட் ஸ்கோவஸ்கி ஆகியோரின் படைப்புகளை மொழிபெயர்த்துள்ளார்.

ஏ. பார்ட்டோவின் 'பொம்மைக் கூட்டத்தில்' என்ற கவிதையில் ஒவ்வொரு பொம்மையைப் பற்றியும் நான்கு வரிகளில் பாடல் உள்ளது.

''உயரப் பறக்க...
ஏரோப் பிளேன் செய்யலாம்
ஏறி வானில் பறக்கலாம்
காடும் கடலும் கரையுங் கண்டு
வீடு வந்தே சேரலாம்.
லாரி போச்சே!...
பொம்மை லாரி வண்டியில்........நிஜப்
பூனை பிடித்து அமர்த்தினேன்
பூனை துள்ளிப் பாய்ந்தது
போச்சு! லாரி கவிழ்ந்தது!''[21]

குழந்தைகளைக் கவரும் வாகன பொம்மைகள் பற்றிய பாடலைத் தமிழில் அழகி மொழிபெயர்த்துள்ளார்.

பிளையாட்ஸ்கோவஸ்கி (M.Plyatskovsky) என்ற சோவியத் கவிஞரின் நகைச்சுவைப் பாடலை, தமிழில் அழகி 'மேகம் மேலே சவாரி' என்று மொழிபெயர்த்துள்ளார்.

''மெத்தை போல மேகம்– அந்த
மேகம் மேலே சாய்ந்தேன்
பறந்து போச்சு மேகம்– அதில்
கதை படித்துப் போனேன்

காக்கா கூட்டம் கண்டேன்—இரை
கையில் அள்ளிப் போட்டேன்
கிழிந்து போச்சு மேகம்— அதை
எழுந்து தையல் போட்டேன்.
உனக்கும் என்னைப் போல—மேலே
பறக்கும் ஆசை உண்டா?
இருக்கும்! ஆனால் நானும் —கண்ட
கனவை யல்லோ சொன்னேன்''.[22]

*பாரசீகக் கவிஞர் உமர் கய்யாமின் பாடல்களைக் கவிமணி தமிழில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார்.*

''அன்பு செய்யின் அயலாரும்
அண்டி நெருங்கும் உறவினராம்;
அன்பு நீங்கின் உறவினரும்
அகன்று நிற்கும் அயலாராம்;
துன்ப நோயை நீக்கிடுமேல்
துவ்வா விடமும் அமுதாகும்;
துன்ப நோயை ஆக்கிடுமேல்
தூய அமுதும் விடமாமே! ''[23]

*அன்பின் மேன்மையையும், துன்பம் தரும் தீமையையும் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

*போலிஷ் மொழியில், ஸ்டானிஸ்வாங் பான்ஜாக் கிளாரே கவாளக் என்பவர் இயற்றிய கவிதையை, ரைசார்டு க்ரினிக்கி என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க அதனைச் சுந்தரராமசாமி தமிழில் பெயர்த்துள்ளார்.*

''பாவம் விட்டில் பூச்சி
என்னால் உனக்கு உதவ முடியாது
விளக்கை அணைக்க மட்டுமே
என்னால் முடியும்''.[24]

என்ற கவிதையில் விட்டில் பூச்சி விளக்கில் விழுந்து அழிவதையும் அதனைத் தடுக்கும் வழிமுறையையும் கூறுகிறார்.

நா.காமராசன், ரஷ்யக் கவிஞர் கோபுசேவின் கவிதைகளைத் தமிழில் பெயர்த்துள்ளார். ரஷ்யக் கவிஞர் இந்தியாவைப் போற்றிய பாடல் இது.

''இந்தியாவே!
இனிய நட்பிற்குத்
தாய்ப்பால் தரும் நதிநாடே
உன்னை வாழ்த்துகிறேன்.
பூங்குவியலைப் போன்ற இந்தியாவே
நமது நட்பின் பக்குவம்
இந்த யுகத்திலும் பிரதிபலிக்கிறது.
ஒரு இனிய பாடல்
பனிப் போர்வை மூடிய
இந்திய மலைச் சிகரங்களை மோதிப்
பள்ளத் தாக்குகளில் எதிரொலிக்கிறது ''[25]

சீனக்கவிஞர் லுட்புல்லா முட்டாலீப் என்பவரின் கவிதையை தமிழன்பன் முத்துசாமி மொழி பெயர்த்துள்ளார்.

''சீனநன் னாடே சீனநன் னாடே
தேனினும் இனியவென் சொந்தநன் னாடே
நூறுநூ றாயிரம் கோடிபேர் நாங்கள்
கூறுமன் புடைநின் குளிர்நறுங் கைகளால்
ஊறிலா துயில்வளர்ந் துருவாக்கப் பட்டுள்ளோம்
நின்னிட மிருந்தியாம் நிறைகாப் படைந்தோம்''[26]

என்று சீன நாட்டின் பெருமையினைப் பாடுகிறார்.

தாகூரின் 'Crescent Moon' என்ற ஆங்கிலக் கவிதை நூலைத் தமிழில் 'வளர்பிறை' என்ற பெயரில் எஸ்.டோரதி அம்மையார் மொழி பெயர்த்திருக்கிறார். குழந்தை உள்ளத்தைப் படக்காட்சியாகப் பல பாடல்களில் படைத்துள்ளார். 'தொழில்' என்ற கவிதையில்

''பள்ளி செல்லும் வழியில்
வளையல் வியாபாரியைக் கண்டேன்
வளையல் கண்ணாடி வளையல் என்று
கூவி விற்க விரும்புகிறேன்.

வீடு திரும்பும் வேளையிலே
தோட்டக் காரனைக் கண்டேன்—நானும்
தோட்டம் போட்டு மகிழத்
தோட்டக் காரனாக விரும்புகிறேன்.

இரவில் லாந்தர் விளக்கோடு
தெருவில் உலவும் காவலாளியைக் கண்டேன்
இரவுக் காவல் செய்யும்
காவல் காரனாக விருப்பம் கொண்டேன்.''[27]

குழந்தைகளின் விருப்பம் நிமிடத்திற்கொருமுறை மாறும் தன்மை கொண்டதாகவும் காணும் காட்சிகளில் தன்னை இணைத்துப் பார்க்கும் எண்ணம் உடையதாகவும் இருக்கும். அத்தகைய குழந்தை மனத்தைப் படம்பிடித்துக் காட்டும் பாடலாக அமைந்துள்ளது.

மலையாளக் கவிஞர் குமாரன் ஆசானின் கவிதைகள் சிறப்புப் பெற்றவை. 'சிந்தா விஷ்யாய சீத' 'சண்டால பிட்சுகி' 'கருண' ஆகிய மூன்று நூல்களும் 'குமாரன் ஆசான் கவிதைகள்' எனும் தலைப்பில் தமிழில் வந்துள்ளன.

இராமனின் கதையை மலையாளத்தில் குமாரன் ஆசான் குழந்தைகளுக்குக் கவிதையாக எழுத, அதனை இராம. கோபிநாதன் மொழி பெயர்த்துள்ளார்.

சீதை இராமனைப் பற்றிச் சிந்திக்கையில்,

''மரஞ்செடி மான்முதல் மாக்கள் புள்ளொடு
மாந்தர் தேவர் உயிரினம் யாவையும்
தாமெனா திவர் நேசித்து நெஞ்சினில்
தாங்கும் அன்பின் திறத்தினை எண்ணுவேன்''[28]

என்று இராமனின் அன்பு உள்ளத்தினை, உயிர்களை நேசிக்கும் பாங்கினைக் கூறுகிறார்.

பிறமொழிக் குழந்தைப் பாடல்களைத் தமிழ்க் குழந்தைகளுக்காகக் கவிஞர்கள் மொழி பெயர்த்துத் தந்துள்ளனர். அதுபோல் தமிழ்க் கவிஞர்களின் பாடல்களும் பிறமொழியில் மொழி பெயர்க்கப்பட்டுச் சிறுவர்கள் பாடி மகிழ்கின்றனர்.

**தமிழ்ப்பாடல்கள் பிறமொழியில்:**

கருத்துச் செறிவுடன் ஒழுக்கப் பண்புகளை வளர்க்கும் விதமாக எழுதப்பட்ட தமிழ்க் குழந்தைப் பாடல்கள் பிறமொழிகளில் பெயர்க்கப்பட்டன.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், குழந்தைப் பாடல்களுக்கு வித்திட்ட 'பாப்பா பாட்டு' ஆங்கிலத்தில் அதே இனிமையுடன் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

"Run about and play my sweet little child,
And idle not sweet little Child,
In game and sport have many mates
And revile not any one child.

Foster love for all lives my child,
Know Truth to be God my sweet child,
As adamant, be firm in heart;
Know these to form the way of life"[29]

பாரதியார், பாப்பா பாட்டில் ஓடி விளையாடு பாப்பா என்று தொடங்கி, அரிய பல கருத்துக்களைக் கூறி, 'வாழும் முறைமையடி பாப்பா' என நிறைவு செய்கிறார். இதனை எளிய ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது.

அழ.வள்ளியப்பாவின் 'மலரும் உள்ளம்' என்ற நூலில் இடம்பெற்ற 36 பாடல்கள் தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டு 'ரங்கு ரங்குலா பூலூ' என்ற நூலாக வெளிவந்துள்ளது. 1977-ஆம் ஆண்டு சல்லா

ராதாகிருஷ்ண சர்மா மொழி பெயர்த்துள்ளார். பாலலா புஸ்தக நிலையம் இதனை வெளியிட்டுள்ளது.

'மலரும் உள்ளம்' முதல் தொகுதியில் உள்ள அதே பாடல்கள், அதே படங்களுடன் வெளிவந்துள்ளன. 'மரம் ஏறலாம்', 'அணில்', 'யானை', 'சங்குசக்கர சாமி', 'கண்ணன்', 'பாப்பா பாப்பா அழாதே' போன்ற பாடல்கள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

கவிஞர் குழ.கதிரேசனின் தொப்பைக் கோழி, மழலைப் பூக்கள், மழலை அரும்பு, மூன்று நூல்களையும் மலையாளத்தில் பையனூர் பாஸ்கரன், ஆலப்புழா முரளிதரன், ராஜேந்திரபாபு ஆகியோர் மொழிபெயர்த்துள்ளனர். இந்தியில் ராமானுஜன் மொழி பெயர்த்துள்ளார்.

மத்திய மாநில அரசின் சார்பில் குழந்தைகளுக்குப் பாடல் எழுதும் பணிப்பட்டறையில் கலந்து கொண்ட தமிழ்க் கவிஞர்களின் பாடல்கள் Central Institute of Indian Languages வழியாக இந்தி, குஜராத்தி, வங்காளம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு மைசூரில் வெளியிடப்பட்டுள்ளன.

**4.6.3. கருத்து ஒப்புமை:**

குழந்தைகளின் விருப்பங்களும் தேவைகளும் மொழிக்கு மொழி மாறுபடுவதில்லை. இவற்றை உணர்ந்த குழந்தைக் கவிஞர்களின் பாடல்களில், பாடுபொருளில் காணப்படும் ஒப்புமையை ஆய்வோம்.

**ஆங்கிலம்:**

"Boats sail on the river
And ships sail on the sea'
But clouds that sail across the sky
Are prellier far than these
There are bridges on the rivers;
As pretty as you please;
But the bow that bridges heaven,
And over tops the trees".[30]

கிறிஸ்டினா ரோஸ்டி எழுதிய இந்த ஆங்கிலப் பாடலில் படகும் மேகமும் ஒப்புமைப்படுத்தப்பட்டு, மனிதர் கட்டிய பாலத்திற்கு ஈடாக வானவில்லை ஒரு பாலமாகக் காணும் காட்சியும் காட்டப்படுகிறது. இதுபோலவே தமிழில் நாரா.நாச்சியப்பன் எழுதிய கவிதையைக் காணலாம்.

''ஆற்றின் மீது படகு மிதக்கும்
அழகு கண்ட துண்டடா
நேற்று வந்த சீனக்கப்பல்
கடலில் கண்ட துண்டடா
போற்று மிவற்றின் மேலாம்– அந்தப்
புதுமை நீல வானிலே
காற்றில் மிதக்கும் மேகம் தந்த
காட்சி யழகே யழகடா.
அலையடித்து நுரையடித்துப்
போகும் அந்த ஆற்றிலே
கலைபடித்த மனிதர் கட்டி
வைத்த பாலத் தழகினும்
தலையெடுத்த மரங்களோடு
வான வெளியை இணைத்திடும்
நிலை யெடுத்த வானவில்லின்
பாலம் மிக்க நேர்த்தியே!''[31]

ஆற்றின் படகும் கடலின் கப்பலும் நிலத்தின் பாலமும் வானத்தின் வில்லும் பாடு பொருளாயின.

**ஸ்பானிஷ்:**

ஸ்பானிஷ் மொழியில் பூனையைப் பற்றிய பாடல் ஒன்று.

**EL Gatito Vinagrito**

" Vinagrito es un gatito
que parece de algodon,
esun gato limpiecito,
enanito y jungueton

Le gustan Las sardinas
Y es amigo del raton
es un gato may sociable
mi gatito de algoden"[32] -Mango Artemio.

**ஆங்கில பெயர்ப்பு:**

"The Cat Vinagrito
Vinagrito is a kitten
That looks like a cotton,
limpiecito is a cat,
dwarf and playful
He likes sardines
And is a friend of the mouse
A cat is very sociable
My kitten cotton"[33].

''விநோகிரிட்ட ஒரு பூனைக்குட்டி
பார்க்கப் பஞ்சு போலிருக்கும்
லிம்பிஸிட்டோ ஒருபூனை
பஞ்சுப் பொதி போன்றது
எலியிடம் நட்புடன் பழகும்
எல்லாரிடமும் நன்கு பழகும்
என் பஞ்சு பூனைக்குட்டி''

என்பதே மேற்கண்ட பாடலின் பொருள். குழந்தைகளைக் கவரும் பூனையைப் பற்றிப் பாடாத கவிஞர்கள் இல்லை என்று சொல்லுமளவிற்குத் தமிழ்க் குழந்தைப் பாடல்களில் பூனை இடம் பெற்றுள்ளது.

**குண்டுப் பூனை**

''பட்டு மேனிப் பூனையைப்
பார்க்க உனக்கு ஆசையா?

குட்டிப் பூனை பார்க்கலாம்
குண்டுப் பூனை பார்க்கலாம்''[34]

''பஞ்சு போன்ற மேனி—அதற்குப்
பாலும் சோறும் தீனி''[35]

ஸ்பானிஷ் பாடலில் பூனை பஞ்சாகப் பாடப்பட்டுள்ளது. தமிழில் பட்டு, பஞ்சு என அதன் மேனி சுட்டப்படுகிறது. இருந்தும் குட்டிப் பூனையும் குண்டுப் பூனையும் பாடு பொருளானது ஒப்புமை.

**வடமொழி:**

''அயம் நிஜ; பரோ வேதி
கணநா லகு சேதளாம்!
உதார சரிதாணாம் து
வஸீ தைவ குடும்பகம்!''[36]

என்ற வடமொழிப் பாடலின் பொருள்

''இவர் உறவினர் அவர் அந்நியர்
இப்பாகுபாடு குறுகிய மனப்பான்மை
அனைவரும் நம்மவர் என்பதே
பரந்த மனப்பான்மை! அத்தகையோர்க்கு
உலகமே சொந்தம்''

இக்கருத்தமைந்த தமிழ்ப் பாடல்கள் பின்வருமாறு;

''எல்லாரும் என்னவர் என்னுவேன்
எல்லாமும் ஆன்மப்பொது வென்பேன்
பொல்லாத சாதிமத வெறி— போகப்
போர் செய்யும் வீரனைப் பாரம்மா !''[37]

''உலக மெல்லாம் ஒரே நாடாய் நினைக்கவும்—வாடும்
உயிர் களெல்லாம் ஒரு குலமாய் மதிக்கவும்
வளரு கின்ற தலை முறையைப் பழக்கினால்இன்ப
வசந்தம் எந்தக் காலத்திலும் நிலைக்குமே!''[38]

**இந்தி:**

''திதிலி ராணி, திதிலி ராணி
யரற் கஹ் ஸபீ பூலாதே ஹை தும்ஹேட்
ஃபூல் ஃ பூல் கே கானோன் ஹோ?
ஹம்கோ பாஸ் நஹி க்யோன் ஆதி ஹோ?
தூர் தூர் க்யோன் ரஷ்திஹோ?''[39]

என்ற இந்திப் பாடல்,

''வண்ணத்துப் பூச்சிராணி, வண்ணத்துப் பூச்சிராணி
என அனைவரும் அன்புடன் அழைக்கின்றார்.
பூக்களின் காதுகளில் என்ன ரகசியம் பேசுகிறாயோ?
நீஎங்கள் அருகில் மட்டும் வராமல் இருப்பது ஏனோ?
எங்களுக்குக் காரணத்தைத் தெரிவிப்பாயா?''

என்று குழந்தைகள் வண்ணத்துப் பூச்சியிடம் பேசும்முறையில் அமைந்துள்ளது.

தமிழிலும்,

''வண்ண வண்ண நிறத்தில் இந்த
வண்ணத்துப் பூச்சி பாரு!

அழகாய்ப் பறக்குது பாரு
அருகினில் செல்லும் முன்பு
விலகியோடிப் போகுது பாரு!
மென்மையான சிறகைப் பாரு!
மலரை விட்டு மலரைத் தேடி
மகரந்தம் மாற்றுது பாரு''[40]

என்று வண்ணத்துப் பூச்சியின் அழகையும் செயலையும் சொல்கிற பாடல் உள்ளது.

''வண்ணம் பலவும் பூசியே
பூக்கள் தேடித் திரிகிறாய்
பூவில் தேனைக் குடிக்கிறாய்!

போக்குக் காட்டிப் பறந்துமே!
புயலாய்ப் பறந்து மறைகிறாய்!''[41]

என்று வண்ணத்துப் பூச்சியிடம் பேசுகின்ற முறையில் அமைந்த பாடலாக உள்ளது.

**மராத்தி:**

''சந்தோபா சந்தோபா பாகாலாசா கான்?
இத்தா இத்தா பைசா ரீமோரா?''[42]

இது மராட்டிய மாநில நாடோடிப் பாடல். இதன் பொருள் ஓடிக் களைத்த நிலவு சோர்வுடன் ஒய்வெடுக்கிறது. மயிலே அருகில் வா உணவும் நீரும் தருகிறேன் எனத் தாய் குழந்தையை அன்புடன் அழைக்கின்றாள்.

தமிழில்,

''இரவெல்லாம் உலவிச் சோர்ந்ததினாலே
எழில் நிலவே நீ உறங்கிப் போனாயோ!''[43]

என்று இரவில் நிலவு தூங்குவதாகப் பாடியுள்ளார் கவிஞர்.

''நித்தம் எந்தன் அன்னையும்
நிலவே, உன்னைக் காட்டியே
மெத்தப் பரிந்து உணவினை
மெள்ள மெள்ள ஊட்டினாள்!''[44]

என்ற பாடலில் தாய் நிலவைக் காட்டி உணவூட்டும் பழக்கத்தினையும் கூறக் காணலாம்.

**வங்கமொழி:**

வங்க மொழியில்,

"Jain Bouddha Khristan
Subha buddir bristi ann"[45]

என்று ஹரபிரசாத் மித்ரா என்ற கவிஞர் எழுதியுள்ளார்.

தமிழில் இதன் பொருள்: ''சமணர், புத்தர், கிறிஸ்துவர் அனைவரின் நல்விருப்பமும் நல்லனவற்றை மழையாய்ப் பெய்விக்கும்'' என்பதாம்.

இத்தகைய மத நல்லிணக்கத்தை வலியுறுத்தும் பாடல்கள் சில தமிழில் காணப்படுகின்றன.

''நெஞ்சில் நிறைந்த அன்பிலே
நிம்மதி நமக்குண்டு!

புத்தர் காட்டிய அன்பிலே
தூய்மை தெரிகிறது

கர்த்தர் காட்டிய அன்பிலே
கருணை தெரிகிறது!

இராமன் காட்டிய அன்பிலே
நேர்மை தெரிகிறது.

உள்ளம் நிறைந்த வழியிலே
அன்பில் மூழ்குவோம்!''[46]

**கன்னடம்:**

''பன்னா பன்னாடா நூவல்லுகாரி
ஹாகைடு புஸ்தகாடலி மாரி''[47]

வண்ண வண்ண மயிலே உன் மயிலிறகைப் புத்தகத்தில் போடு என்று பாடுகிறது குழந்தை.

இதைப் போல் தமிழில் ,

''இறகு ஒன்றை இரவல் கேட்டேன்
இன்னும் ஏன்நீ தரவே இல்லை''[48]

என்று குழந்தை உரிமையுடன் மயிலிடம் கேட்பதாக அமைந்துள்ளது. மயிலிறகு குழந்தைகளின் மனம் கவர்ந்த ஒன்று என்பதால் பாடுபொருளானது.

**தெலுங்கு:**

தெலுங்கு மொழியில் எழுதா இலக்கியமான வாய்மொழிப் பாடலாக,

''சந்தமாமா ராவே
சாபில்லி ராவே
கொண்டக்கி ராவே
கோகுப்புளு தேவே''[49]

என்று நிலவை அழைப்பதாக உள்ளது. இதன் பொருள்

''நிலா நிலா ஓடிவா
அழகு நிலா ஓடிவா
ஆகாயத்தில் ஓடி வா
பூக்கொண்டு வா''

என்பதாகும். தமிழில்,

''நிலா நிலா ஓடிவா
நில்லா மல் ஓடிவா
மலைமேலே ஏறிவா
மல்லிகைப்பூ கொண்டு வா!''[50]

என்ற வாய்மொழிப் பாடலைப் போன்றது மேற்கண்ட தெலுங்குப் பாடல்.

''சிக்கு சிக்கு ரயிலு ஒஸ்துந்தி
தூரம் தூரம் ஜரகண்டி
ஆகியக்கா எக்கண்டி''[51]

என்று புகைவண்டி விளையாட்டின் போது குழந்தைகள் பாடுவதாக அமைந்த பாடலின் பொருள்,

''சிக்கு சிக்குனு ரயிலு வருது
தள்ளித் தள்ளி போங்க
நிறுத்திய பிறகு ஏறுங்க''

என்பதாகும்.

தமிழ்க் கவிஞர்களும், குழந்தைகளுக்காக இது போன்று ரயில் பற்றிய ஏராளமான பாடல்களைப் பாடியுள்ளனர் .சான்றுக்கு

''புகையில் லாமல் கரியில் லாமல்
போகுது வண்டி குப்குப்குப்!
வகை வகை யான வண்டித் தொடர்கள்
வருமாம் பின்னே குப்குப்குப்!

வெட்ட வெளியில் மாலைப் பொழுதில்
விளையா டுவோமே புகைவண்டி''.[52]

என்ற பாடலைக் கூறலாம்.

**4.6.4. வடிவ ஒப்புமை:**

பிறமொழிக் குழந்தைப் பாடல்களில் தமிழில் உள்ளது போன்ற வடிவமைப்பு உள்ளது.

**குறளடிப் பாடல்கள்:**

எளிமை கருதி குழந்தைக் கவிஞர்கள் இருசீரான குறளடியில் குழந்தைப் பாடல்களைப் படைத்துள்ளனர். தமிழில்,

''சொன்னதைச் செய்
செய்வதைச் சொல்
வாய்மையே பேசு
தூய்மையைக் கடைபிடி''.[53]

என்ற பாடலைப் போல் கன்னடத்தில் உள்ளது.

''கேப்பி கராகரா
தீபா ஜலிஜலி
மவினா வேட்
மாராடாலி போட்டி''.[54]

இதன் பொருள்,

''தவளை கத்துகிறது
படகு மிதக்கிறது
மாவின் விதையோ
மரத்துப் பழத்தில்''

என்பதாகும்.

**சிந்தடிப் பாடல்கள்:**

''மித்து மித்து போபாத்தா
சோனே கீத்தி லாலாவிதா
கானு குத்தா கல்லாசகாலா?''[55]

என்று கிளியிடம் கேட்பது போன்ற மராத்தியப் பாடல் மூன்று சீர்களான சிந்தடியால் ஆனது.

தமிழில் சிந்தடியாலான பாடல்கள் பல உள்ளன. சான்றுக்கு ஒன்று,

''கூடிப் பலரும் சைக்கிளில்
கும்ப லாகச் செல்வதோ?
நாடி வரும் விபத்திற்கு
நாமே வழி வகுப்பதுவோ?''[56]

**அளவடிப் பாடல்:**

நாற்சீரான அளவடிப் பாடல்களும் ஏராளமாக உள்ளன .

''கண்ணா மூச்சி காடி கோடி
ஓடினியா மூட்டி ஓருள் பைட்
நிம்மியா ஹாக்கி பைட் பைட்
நிம்மியா ஹாக்கி ஹிடிடு கோலி''.[57]

கண்ணாமூச்சி விளையாடும் குழந்தைகள் கண்ணை மூடிக் கொண்டு எண்ணுவதும், கண்ணைத் திறக்கபோறேன், பிடிக்கப் போறேன் என்று பாடிக் கொண்டே விளையாடும் கன்னடப் பாடல் இது.

''வானம் கறுத்தால் மழை பெய்யும்
மழை பெய்தால் மண் குளிரும்
மண் குளிர்ந்தால் புல் தழைக்கும்
புல் தழைத்தால் பசு மேயும்''.[58]

என்ற பாடல் அளவடியில் அமைந்த தமிழ்க் குழந்தைப் பாடல்.

**நெடிலடி:**

ஐந்து சீர்களாலான நெடிலடிப் பாடல்கள் சிலவும் குழந்தை இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

மராத்தியில்,

''காம் காம் காம் சுகாஸ் சலே
உரா உரா உரா உராஹோரா சலே''.[59]

என்ற பாடலும்,

தமிழில்,

''உள்ளம் உனக்கிருந்தால் அன்பால் உலகை அணைத்திடுவாய்
துள்ளும் உணர்விருந்தால் என்றும் துடிப்பாய்ச் செயல்படுவாய்![60]

என்ற பாடலும் நெடிலடிகளாலானவை.

**கழி நெடிலடி:**

ஆறு அல்லது அதற்கு மேற்பட்ட சீர்களை உடைய பாடல்கள் கழிநெடிலடிப் பாடல்கள். கழிநெடிலடியிலமைந்த பாடல்கள் பல குழந்தைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

''ஸீந்தரோ அபி ஸீசீலோ அபி
குலீநோ அபி மஹாதன
சோபதே நா விநா வித்யாம்
வித்யா ஸர்வஸ்ய பூஷணம்!''[61]

வடமொழியில் கழி நெடிலடியான இப்பாடல், அழகு, நன்னடத்தை, உயர்குடிப்பிறப்பு, செல்வச் செழிப்பு எவை இருப்பினும் கல்வி அறிவு இன்றேல் பிரகாசிக்க முடியாது என்கிறது.

தமிழில்,

''கற்ற வழிதனில் சென்று
கடமையும் நேர்மையும் கொண்டு
நற்றமிழ் ஆர்வம் பெருக
நற்றொண்டில் திளைக்க வேண்டும்''.[62]

என்ற பாடல் கழிநெடிலடிப் பாடல்.

**ஒருசீர் ஒருவரி:**

குழந்தைப் பாடல்களில் ஒரு சீர் ஒரு வரியாக அமைவது அரிது. இது புதுக்கவிதைகளில் காணக்கூடிய அமைப்பு. இருந்தும் ஒரு சில கவிதைகள் ஒரு சீர் அடியாக அமைந்து, புதிய முயற்சியாகக் காணப்படுகிறது.

**ஆங்கிலப் பாடல்:**

The
Longest
ever
wooly
scarf
was
worn
by
Geraldine
Giraffee
Around
her
neck
the
scarf
she

wound

but

still

it

trailed

upon

the

ground"[63]. (Poet-Colinwest)

என அமைந்துள்ளது.

**தமிழில்,**

''செல்லப் பிள்ளை

செல்லப்பா

செல்வந்தராம்

அவனப்பா

அதனால்

இறுமாப்பாய்

அவன்

சொல்வதெல்லாம்

வீராப்பே.

அதைச்

சொல்லப் போனால்

பொல்லாப்பே!'.[64]

என்று ஒருசீரடியாகப் பாடியுள்ளார்.

நாட்டுப்புறப் பாடல்களில் இது போன்ற பாடல்கள் சில விளையாடுகையில் பாட ஏற்றவையாக அமைந்துள்ளன.

''காரி

கக்கரி

முக்கரி

சுண்டெலி

வெட்டி

படுப்பான்

எந்தெல்லாம்

வேணும்

தேனோ

பாலோ

பழமோ''[65]

இப்பாடலில் உள்ள சொற்கள் பொருள் தொடர்பற்றவை எனினும் ஒரு சீரடியாக ஒலிக்குறிப்புடன் கூடியதாக அமைந்துள்ளன.

**இரட்டைக்கிளவி:**

இரட்டைக்கிளவி இடம் பெற்ற பாடல்கள் குழந்தை இலக்கியத்தில் நிறைய உள்ளன.

இந்தியில்,

''**சம்சம் சம்சம்** சந்தா சம்கே
தாரே சம்கே ஜில்மில்
**டன்டி டன்டி** ஹவா பவஹ் ரஹி
லோரிஸி குச் காதி
அச்சா லக்தி ஆஜ் ஸபீ கோ
**தூர் தூர்** தக்ஃ பிர்னா.''[66]

இப்பாடலின் பொருள்

''பளபளவென சந்திரன் ஒளிவீச
மினுமினுவென விண்மீன்கள் மின்ன
சிலுசிலுவென குளிர்தென்றல் வீச
நிலவொளியில் வெகுதூரம்
உலாவர மனம் விரும்புது''

என்பதாகும்.

இதுபோன்ற பாடல்கள் பல தமிழில் உள்ளன.

''காற்ற டிக்குது! காய்ந்த ஓலை
கலகலக்குது
பச்சை இலைகள் புதுமரத்தில்
பளபளக்குது
நிலவின் ஒளியில் ஆற்றுவெள்ளம்
மினுமினுக்குது!''[67]

**சொற்பொருள் பின் வருநிலையணி:**

வந்த சொல்லே மீண்டும் வந்து, அதே பொருளைத் தருகின்ற அமைப்பில் குழந்தைப் பாடல்கள் நிறைய வந்துள்ளன. காரணம் குழந்தைகளின் மனப் பதிவிற்கு ஏற்றவையாக அவை உள்ளன. சொற்கள் மட்டுமன்றி இசைப்பாடல்களில் பல்லவி மீண்டும் மீண்டும் வருவதையும் குழந்தைப் பாக்களில் காணலாம்.

ஸ்பானிஷ் மொழியில் கோழிக்குஞ்சுகள் பற்றிய ஒருபாடல்,

"Son preciosos
mis pollitos
menuditos
son tan tiernos
tan chiquitos
tan sedosas
tan finitos
que enel mundo
no hay pollitos
tan banitos
pain corren
hungan saltan
buscan chillan
vienen van
se pelean
como locas
porun pedazo
de pan

sontan tiernos
tan chiquitos
tan sedosos
tan finitos
que enel mundo
no hey pollitos"[68]

மேற்கண்ட பாடலில் 'tan' என்ற ஸ்பானிஷ் சொல் மீண்டும் மீண்டும் வந்து 'மிகவும்' என்ற பொருளையும் 'Pollitos' என்ற ஸ்பானிஷ் சொல் 'அழகு' என்ற பொருளையும் தருகின்றன.

மேலும் முதல் பத்தியின் ஒருபகுதி, பாடலில் மீண்டும் மீண்டும் வருகின்றது.

தமிழில்,

''ஐயா வீட்டுக்
கொய்யாப்பழம்
ஆசை யாகத்
தந்த பழம்

கையில் எடுத்து
வாயில் வைத்துக்
கடிக்க கடிக்க
இனிக்கும் பழம்

ஐயா வீட்டுக்
கொய்யாப் பழம்
ஆசை யாகத்
தந்த பழம்''.69

இது போன்ற பாடல்கள் நிறைய உள்ளன. குழந்தைப் பாடலில் கூறியது கூறல் தவறாகாது. மேற்கண்ட பாடலில் 'பழம்', 'கடிக்க' என்ற சொற்கள் மீண்டும் மீண்டும் வந்து ஒரே பொருளைத் தருகின்றன. மேலும் முதல் பத்தி மீண்டும் மீண்டும் வருகின்றது.

**பொருள் விளக்கப் பாடல்:**

குழந்தைப் பாடல்களில் சொற்களின் பொருளை விளக்கும் வகையில் அமைந்த சில பாடல்களைக் காணலாம்.

> "Chah ko Hindi mein katha kuan
> Dood ko Hindi mein katha hain Dhun
> Hindi mein Aqrab ka Bichhoo nam hai
> Farsi mein bhaun Ka Abroo naam hai"[70]

பார்சி மொழியில் சாக்கோ, தூத், அக்ரப், பாவுன் என்ற சொற்களுக்கு முறையே கூவா, துவா, விச்சு, அபூர் என இந்தியில் பொருள்படும் என குழந்தைக்குச் சொல்லும் உருது பாடல் இது. அவை முறையே தமிழில் கிணறு, புகை, தேள், புருவம் என பொருள்படும்.

இது போல் தமிழிலும் மலேய மொழிச் சொற்களை அறிமுகப்படுத்தும் விதமாக அமைந்த கவிதை ஒன்றுள்ளது.

> ''காலா' என்றால் தேளாம்
> 'காக்கி' என்றால் கையாம்
> 'கூச்சிஸ்' என்றால் பூனை
> 'கூடா' என்றால் குதிரை
> 'சூச்சி' என்றால் கழுவு
> 'சூடா' என்றால் முடிவு''.[71]

மேற்கண்ட இருபாடல்களும் பிறமொழிச் சொற்களை அறிமுகப்படுத்துவனவாக உள்ளன.

**கதைப்பாடல்கள்:**

தமிழைப் போலவே பிறமொழிகளிலும் கதைப் பாடல்கள் உள்ளன.

சான்றாகக் கன்னடத்தில் எம்.எஸ். புட்டண்ணா இயற்றிய ''கோவின கதை'' (பசுவின் கதை) என்ற பாடலில் புண்ணிய கோடி என்ற நல்ல பசுவின் மீது ஒரு புலி பாய வருகிறது. உடனே பசு, 'கொட்டிலில் என் குழந்தை இருக்கிறான். அவனுக்குப் பாலூட்டி

விட்டு வந்து உனக்கு உணவாகிறேன்.' என்கிறது. புலி நம்ப மறுக்கிறது. பாடலின் இறுதிப் பகுதியில்,

> ''சத்யயே நம்ம தாயி—தந்தை
> சத்யவே நம்ம பந்து— பகை
> சத்ய வாக்யகெ தப்பி நடெதரெ
> மெச்சனா பரமாத்மனு?''[72]

என்று பாடல் நிறைவடைகிறது. இதன் பொருள்,

> 'சத்யமே என் தாய் தந்தை
> சத்யமே என் உற்றார் உறவினர்
> சத்ய வாக்கைத் தவறி நடந்தால்
> மெச்சு வானா அந்தப்பரமாத்மா?''

என்பதாகும்.

தமிழிலும் ஈசாப் கதைப் பாடல்கள், பாட்டிலே காந்தி கதை, மற்றும் கதைப்பாடல்கள் பல வந்துள்ளன. மேலும் சில கவிஞர்கள் தங்கள் கவிதை நூல்களின் ஒரு பகுதியைக் கதைப் பாடல்களுக்காக ஒதுக்கியுள்ளனர்.

தமிழில்,

> ''வெண்ணிலவே வெண்ணிலவே
> எங்கே போகிறாய்?
> உன்னுடன் நான் கூடவர
> ஆசை கொள்கிறேன் .
> உலகமெலாம் சுற்றிவர
> நானும் போகிறேன்
> உலகமெலாம் சுற்றிவர
> உன்னால் முடியுமா?
> விண்ணிலேறித் தொட்டுவிட்டோம்
> உன்னை நாங்களே, அதை
> எண்ணிடாமல் கேட்கலாமோ
> இந்தக் கேள்வியை''[73]

இப்பாடல் கதைபோல் அமைந்த பாடலாகும்.

**வினா-விடைப் பாடல்கள்:**

பேசாதவற்றையும், கேட்காதவற்றையும் பேசுவன, கேட்பன போலக் கருதி இயற்றப்படுவது குழந்தைப் பாடல்களின் இயல்பு. அதுவும் வினா விடை முறையில் அமைந்தால் குழந்தைகளுக்கு மகிழ்ச்சி தரும்.

ஓரிய மொழிப் பாடல் ஒன்று,

"Oh plant why do you die?"

"The black cow eats me up"

"Oh black cow! why do you eat the plant?"

"The cow- herd watches me not"

"The cow herd
why don't you watch?"

"The eldest-Bohu doesn't give me food"

"oh Bohu don't you feed the cow-herd?"[74]

இப்படியே வளர்ந்து செல்லும் பாடல் ஆங்கில மொழி பெயர்ப்பாக வந்துள்ளது.

தமிழில்,

''எலியே எலியே ஓடுவதேன்?
என்னைப் பூனை துரத்துவதால்
பூனையே பூனையே ஓடுவதேன்?
பொல்லா வெறிநாய் துரத்துவதால்
நாயே நாயே ஓடுவதேன்?
நாலடிச் சிறுவன் துரத்துவதால்
சிறுவா சிறுவா ஓடுவதேன்?
சிங்கம் என்னைத் துரத்துவதால்

சிங்கமே சிங்கமே ஓடுவதேன்?

எங்கோ வேட்டுக் கேட்டதனால்!''.[75]

என்று ஒவ்வொருவரிடமும் வினாக் கேட்டு விடைபெறும் முறையில் இப்பாடல் அமைந்துள்ளது.

ஒரிய மொழியில் அமைந்த ஒரு பாடலின் ஆங்கில ஆக்கம்,

Let me tell a story
what story?
story of a frog
which frog?
wood frog
what wood?
Jungle wood.
which jungle?
The jungle of thorns
what thorn?
The thorn of a plum bush which sticks to
the old woman's saree and cannot be removed".[76]

ஒரு அடியின் சீர் அடுத்த அடியிலும் வரும் வகையில் வினா விடையாக அமைந்த இப்பாடலைப் போல் தமிழிலும் உள்ளது.

''ஒன்பது ஒன்பது
கோள் ஒன்பது
என்ன கோள்?
வானக் கோள்.
என்ன வானம்?
நீல வானம்
என்ன நீலம்?
கடல் நீலம்
என்ன கடல்?
அமைதிக் கடல்
என்ன அமைதி?
மன அமைதி

என்ன மனம்

குழந்தை மனம்''[77]

இது போன்ற மற்றொரு பாடல்,

''தேன் தேன்
என்ன தேன்?
கொம்புத்தேன்.
என்ன கொம்பு
மான் கொம்பு
என்ன மான்?
காட்டு மான்
என்ன காடு?
ஆற்காடு
என்ன ஆறு?
பால் ஆறு
என்ன பால்
கள்ளிப் பால்.''[78]

இது நாட்டுப்புறச் சிறுவர் பாடல். இத்தகைய பாடல்கள் குழந்தைகள் மனதில் எளிதில் பதியும். அதனோடு தொடர்ச்சியாகப் பேசப் பாட பயிற்சி அளிக்க ஏற்ற பாடல்களாக உள்ளன.

'ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம்' என்ற இந்த இயலில், பிறமொழி குழந்தை இலக்கிய வளர்ச்சி குறித்த செய்திகளோடு, தழுவல், மொழி பெயர்ப்பு, கருத்து, வடிவ ஒப்புமைகள் ஆகியவை பற்றிய கருத்துக்கள் ஆய்ந்துரைக்கப்பட்டுள்ளன.

**தொகுப்புரை:**

- இந்திய மொழிகளில் குழந்தை இலக்கியத் தோற்றம், வளர்ச்சி.
- அந்நிய மொழிகளில் குழந்தை இலக்கியத் தோற்றம், வளர்ச்சி.
- பிறமொழி இதழ்களில் குழந்தை இலக்கியம் பெற்றுள்ள இடம்.

- பிறமொழி வானொலி நிகழ்ச்சிகளில் குழந்தைகள் நிகழ்ச்சி.
- பிறமொழிப் பாடல்களைத் தழுவி எழுதப்பட்ட தமிழ்க் குழந்தை பாடல்கள்.
- பிறமொழிக் கதையைத் தழுவி தமிழில் எழுதப்பட்ட குழந்தைகளுக்கான கதைப்பாடல்கள்.
- பிறமொழிக் குழந்தைப் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதிய பாடல்கள்.
- தமிழ்க் குழந்தைப் பாடல்களைப் பிறமொழியில் மொழிபெயர்த்துள்ளமை ஆகியன சான்றுடன் சுட்டிக்காட்டுப்பட்டுள்ளன.
- தமிழுடன் பிறமொழிப் பாடல்களை ஒப்புநோக்கி அவற்றில் காணப்படும் கருத்து (பாடுபொருள்) மற்றும் வடிவ ஒப்புமைகள் சான்றுடன் காட்டப்பட்டுள்ளன.

# இயல் நான்கு
# ஒப்பீட்டுப் பார்வையில் குழந்தை இலக்கியம்

## சான்றெண் விளக்கம்:

1. "சிறப்புத்தமிழ்-பாடப்புத்தகம் வகுப்பு 11" 'தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்' ப.227
2. மேலது ப.226.
3. பாரதியார், "பாரதியார் பாடல்கள்" ப.138
4. ப.ந.வேங்கடாச்சாரி, "வங்காளியில் குழந்தை இலக்கியம்"ப.71 குழந்தை இலக்கிய மலர்-1959 (தொ.ஆ) மயிலை சிவமுத்து, தி.ஜ.ர.
5. கவிமணி, "மலரும் மாலையும்" ப.72, 73.
6. மேலது ப. 119, 120.
7. அழ.வள்ளியப்பா, 'மலரும் உள்ளம் இரண்டாம் தொகுதி' ப.67, 68
8. அழ.வள்ளியப்பா, "மலரும் உள்ளம் முதல் தொகுதி' ப.132.
9. ரா.பொன்ராசன், "பாலும் தேனும்" பாடல் 10.
10. ஆர்.பி.சாரதி, "சிறுவர் கவிப்பூங்கா" ப.72.
11. மேலது ப.70.
12. ச.அஹமது பஷீர், "சிரி குழந்தாய் சிரி" ப.60-63.
13. தண்டரை முகில் வண்ணன் 'புதுமழை' ப.21-24
14. மேலது ப.12-13
15. பாரதியார், "பாரதியார் கவிதைகள்" ப.168.
16. மேலது ப.169.
17. தமிழப்பன், "சின்னச் சின்ன அணில்கள்' ப.107
18. மேலது ப.107.
19. மேலது ப.109
20. மேலது ப.109
21. அழகி, "சோவியத் குழந்தைப் பாடல்கள்' ப.5
22. மேலது ப.24
23. கவிமணி, "உமர்கய்யாம் பாடல்கள்" (மொ.பெ.) தமிழ்ப்பாடநூல் 9-ஆம் வகுப்பு ப.55.
24. சுந்தர ராமசாமி, 'தொலைவிலிருக்கும் கவிதைகள்' (மொ.பெ) ப.155,
25. நா.காமராசன், "ரஷ்யக்கவிஞர் கோபு சேவ் பாடல்" (மொ.பெ.) தமிழ்ப்பாடநூல் 10-ஆம் வகுப்பு ப.64.
26. தமிழன்பன் முத்துசாமி, "மானும் வேடனும்" ப.124
27. எஸ்.டோரதி, "வளர்பிறை' (மொ.பெ.) ப.48-50
28. இராம.கோபிநாத் "குமாரன் ஆசான் கவிதைகள்" (மொ.பெ.) தமிழ்ப்பாடநூல் 9-ஆம் வகுப்பு, ப. 49.
29. டி.என்.ராமச்சந்திரன் , 'Bharathi Patalkal' ப.242, 243.
30. Christina Rossethi. "The poem tree" Book I (தொ.ஆ) Deam Gasfer P.9

31. நாரா.நாச்சியப்பன், ''சிறுவர் பாடல்' ப.30
32. Mago Artenio, From "www.elhuevochacolate.com/poesias/posesia2.htm".
33. மேலது ஆங்கில பெயர்ப்பு
34. செல்ல கணபதி''மலரும் மொட்டுக்கள்'' ப.35
35. அ.அகமது பஷீர், ''சிரி குழந்தாய் சிரி'' ப.43
36. ஸ்ரீராகவன், ''ஸரள ஸம்ஸ்க்குருத பால போதினி'' (மொ.பெ.) ப.36
37. சுத்தானந்த பாரதி. ''குழந்தையின்பம்'' ப.62
38. ரா.பொன்ராசன், ''கற்பக மலர்கள்'' ப.125.
39. ப்ராதமிக் ஹிந்தி பாடநூல்'', ஆ.பெ.இல்லை ப.37
40. சாப்டூர் சதுரகிரியான், ''சிறுவர் கவிதைப்பூங்கா''. ப.30
41. பொய்யாமணி ச.வரதசிகாமணி, ''புன்னகைப் பூக்கள்'' ப.51
42. K.A. Jamuna "C.L. in I.L." ப.126.
43. எஸ்.சாந்தலெட்சுமி, ''மழலை இன்பம்'' ப.59
44. எஸ்.விஜயலெட்சுமி ''சின்னக் கண்ணன் பிறக்கிறான்''. ப.19.
45. K.A. Jamuna "C.L in I.L." ப.40
46. ஐகுந்தம் பி. வெங்கடேசன், ''சத்துணவுப் பாடல்கள்''. ப.89.
47. K.A. Jamuna "C.L in I.L." ப. 92
48. சொ.அடைக்கலம், ''பாலர் மலர்கள்'' ப.47
49. ஜெயந்திநாகராஜன் அருகில் உள்ளவர்களிடம் கேட்டெழுதிய பாடல்.
50. வாய்மொழி இலக்கியம்.
51. ஜெயந்தி நாகராஜன் அருகில் உள்ளவர்களிடம் கேட்டெழுதிய பாடல்.
52. பெருஞ்சித்திரன், ''பள்ளிப் பறவைகள் முதல் தொகுதி'' ப.46, 47
53. வி.ஜி.சந்தோசம் ''சந்தோசப் பாப்பா பாட்டு'' ப.27.
54. K.A. Jamuna "C.L in I.L." P.89.
55. மேலது ப.89.
56. பி.வெங்கட்ராமன், ''சிறுவர் சிறுமியருக்கான சாலை விதிப் பாடல்கள்'' ப.9
57. K.A. Jamuna "C.L in I.L." P.88.
58. கவிமணி, ''மலரும் மாலையும்'' ப.71.
59. K.A. Jamuna "C.L in I.L." P.127.
60. ஆலந்தூர் கோ.மோகனரங்கன், ''ஆலந்தூர் மோகனரங்கன் குழந்தை இலக்கியம்'' ப.62.
61. ஸ்ரீராகவன் ''ஸரள ஸம்ஸ்க்குருத பால போதினி'' (மொ.பெ.) ப.36.
62. பி.வி.கிரி, ''ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே'' ப.28
63. Dean Gasper, "The Poem Tree-Book I" P.13.
64. பா.ஆ. ஷண்முக சுப்பையா 'பாப்பா பாட்டு' (தொ.ஆ.) ராஜகோபாலன், ப. 24.
65. தி.நடராசன் (தொ.ஆ.), 'நாட்டுப்புறச் சிறுவர் பாடல்' ப.22
66. ப்ராத் மிக் ஹிந்தி பாடநூல். ப.37 (பாடல் ஆசிரியர் பெயர் இல்லை)
67. மு.வை.அரவிந்தன், ''சிறுவர் உலகம்'' பாடல் 5. பக்க எண் இல்லை.
68. www.elhuvochocolate.com/poesias/poesias2 htm

69. அழ.வள்ளியப்பா, 'சிரிக்கும் பூக்கள்', ப. 36.

70. K.A. Jamuna "C.L in I.L." P.246.

71. பூவண்ணன், ''குழந்தைக் கவிஞர்கள்'', ப.227.

72. ஜெயலட்சுமி ஸ்ரீனிவாசன், ''கன்னடத்தில் குழந்தை இலக்கியம்'', 'குழந்தை இலக்கிய மாநாடு - சிறப்பிதழ் 1977', ப. இல்லை.

73. ரத்னம், ''தேனருவி'' திருமாவளவன், திருஞானம் (தொ.ஆ.) ப.50

74. K.A. Jamuna "C.L in I.L." P.146

75. அழ.வள்ளியப்பா, ''சிரிக்கும் பூக்கள்'' ப.189.

76. K.A. Jamuna "C.L in I.L." P.147.

77. துரை.மாலிறையன், '' ஒலிப் பயிற்சிப் பாடல்கள்'' ப.55.

78. தி.நடராசன் (தொ.ஆ) ''நாட்டுப்புறச் சிறுவர்பாடல்'' ப.77.

# இயல் ஐந்து

# பண்புருவாக்கத்தில் குழந்தைப் பாடல்கள்

*சான்றோரின் உயர்வுக்கு உரைகல்லாக அமைவன அவர்தம் அருஞ்செயல்களே! அருஞ்செயல்களுக்கு அடித்தளம் அமைப்பன அவர்தம் பண்பு நலன்களே!*

**5.1. பண்புடைய வாழ்வு:**

''பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அது இன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.''[1]

*என்றார் வள்ளுவர். உலக இயக்கத்திற்குக் காரணமே பண்புடையார் தான் என உறுதியாகக் கூறுகிறார் வள்ளுவர்.*

*பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார் தம் பாடலில்,*

''சின்னப் பயலே சின்னப் பயலே
சேதி கேளடா.
ஆளும் வளரணும் அறிவும் வளரணும்
அது தாண்டா வளர்ச்சி.
........ ......... ........ ........
மனிதனாக வாழ்ந்திட வேணும்
மனதில் வையடா—தம்பி
மனதில் வையடா (மனிதனாக......)
வளர்ந்து வரும் உலகத்துக்கே —நீ
வலது கையடா—நீ
வலது கையடா''[2]

*என்று பாடினார். ஆளும் அறிவும் வளருவது வளர்ச்சி. 'மனிதனாக வாழ்வது' என்பதில் நற்பண்புகளுடன் வாழும் முறையைக்*

குறிப்பிடுகிறார். அத்தகைய வாழ்வின் மூலம் உலகிற்கே வலதுகையாகத் திகழ வேண்டும் என்கிறார்.

**5.1.1. குழந்தை வளர்ப்பு:**

பெற்றோர் பலர் குழந்தைகளின் உடல் வளர்ச்சியில் அக்கறை கொண்டு சத்தான உணவு வகைகள், ஊட்டச் சத்து மிக்க பானங்கள் கொடுத்து உடல் நலத்தைப் பேணுகின்றனர்.அதுபோல் குழந்தைகள் அறிவில் மேம்பட்டவர்களாகத் திகழ வேண்டும் எனப் பள்ளிக் கல்வியுடன், தனிப்பட்ட பல வகுப்புகளுக்கும் அனுப்புகின்றனர். ஆளும் அறிவும் வளர இவை வகை செய்கின்றன.

குழந்தைகள் நல்ல மனிதராக உருவாகப் பண்பு வளர்ச்சி அவசியம். அவசரமான இன்றைய உலகில் பெற்றோர் பண்பு வளர்ச்சி பற்றிச் சிந்திக்கவும் நேரமின்றி இருக்கின்றனர்.

**5.1.2. நற்பண்பு உருவாக்கம்:**

குழந்தைப் பருவத்தில் நன்னெறிக் கதைகளையும் பாடல்களையும் கேட்டும் படித்தும் வளரும் குழந்தைகள் நற்பண்பின் உறைவிடமாய் விளங்குவர்.

*''சால்பின் வளர்ச்சியையும் ஆக்கத்தையும் ஆற்றுப்படுத்துவது பற்றுக்கள் என்பர் மனநூலார். இந்தப் பற்று இயற்கையானதல்ல; செயற்கையே; வளர்ப்பும் சூழ்நிலையும் அதனை அமைக்கின்றன.''*[3]

இங்கு மனநூலார் 'பற்று' என்பதை, எண்ணத்திலும் செயலிலும் கொள்ளும் ஈடுபாடு எனலாம்.

ஒருவரின் பண்பு என்பது எண்ணங்களின் அடிப்படையிலான செயல்களில் வெளிப்படக் காண்கிறோம். அத்தகைய பண்புருவாக்கத்தில் குழந்தைப் பாடல்கள் பெறும் இடம் குறித்து ஆய்வதே இவ்வியலின் நோக்கம்.

### 5.2. இலக்கணம் காட்டும் பண்பு:

இலக்கண நூலார் அறுவகைப் பெயர்களில் ஒன்றான பண்புப் பெயர், நிறம், சுவை, அளவு,வடிவம் என்பவற்றின் அடிப்படையில் தோன்றுவன என்பார். இலக்கண நூல்கள் இதனை குணப்பெயர் எனவும் குறிப்பிடும்.

நிறம் முதலான பண்புகள் ஒரு பொருளின் தன்மையைச் சுட்டப் பயன்படுவன. அது போல் மனிதர்களின் தன்மைகளைச் சுட்டும் சொல்லாக பண்பு, குணம் என்பவை வழக்கில் உள்ளன.

#### 5.2.1. ஒழுக்கமும் பண்பும்:

ஒழுக்க நெறிகளைப் பழக்கப்படுத்திக் கொள்ளும் போது பண்பாகிறது. ஒழுக்கம், நல்லொழுக்கம்,தீயொழுக்கம் எனப் பிரிக்கப்படுவது போல் பண்பும், நற்பண்பு, தீயபண்பு என இருவகைப்படும்.

நற்பண்புகளைப் பின்பற்றவும் தீய பண்புகளைக் களையவும் வழி சொல்லும் குழந்தைப் பாடல்கள், குழந்தைகளின் நற்பண்புருவாக்கத்தில் சிறப்பிடம் பெறுகின்றன. பாடல் வழி குழந்தை மனங்களைச் செம்மைப்படுத்தும் சிற்பிகள் கவிஞர்கள்.

#### 5.2.2. விதைப்பது விளையும்:

“சிறுவர்களின் உள்ளம் ஒட்டுத்தாள் (Blotting Paper) போன்றது. நாம் எதை எழுதினாலும் பிளாட்டிங் பேப்பரில் ஒட்டிக் கொள்ளும். அது போலவே சிறுவர்களின் மனதில் தீமையையும் விதைக்க முடியும்; நன்மையையும் விதைக்க முடியும். எதை விதைக்கிறோமோ , அதுதான் விளையும்”[4] என்கிறார் சாமி பழனியப்பன்.

#### 5.2.3. பண்பூட்டும் முறை:

“தமிழ் நாட்டில் சில தலைமுறைகளுக்கு முன் சிறுவர்களுக்குக் கதையும் பாட்டும் ஊட்டி வளர்க்கும் முறை இருந்து வந்தது. கதையுணவும் பாட்டுணவும் பள்ளிக்கூடங்களில் தருவதைவிட மிகுதியாக வீடுகளில் பாட்டிமாரும் பெற்றோரும் அளித்து வந்தார்கள்.

காலம் மாறியது. உணவைப் பிசைந்தூட்டும் நிலை குறைந்து, உணவைத் தாமே அள்ளி உண்ணும் நிலை உள்ளது. ஆகையால் கதை நூல்களும் பாட்டு நூல்களும் எழுதி அளிப்பவர் தேவையான காலம் இது''[5] என்கிறார் டாக்டர் மு.வ.

கதையும் பாட்டும் ஊட்டி வளர்க்கப்படுவதாக மு.வரதராசனார் குறிப்பிடுகிறார். உணவு உடலை வளர்ப்பது போல் பாட்டும் கதையும் குழந்தைகளின் அறிவையும் பண்பையும் ஒரு சேர வளர்த்தன.

பாடல்களைக் குழந்தைகள் பாடி மகிழும் போதே, 'செய்யத் தக்கன இவை; தகாதன இவை' என உணரும் வண்ணம் பாடல்கள் இயற்றப்பட்டன.

**5.3. பண்புகள் பலவகை:**

இறையுணர்வு, அன்பு, இரக்கம், கருணை, பகிர்ந்தளித்தல், உண்மை பேசுதல், உழைப்பு, நீதி, நேர்மை, உதவி, கனிவு, பொறுமை போன்ற பின்பற்றத் தகுந்த நற்பண்புகளும், பொய், பொறாமை, கடுஞ்சொல், வன்முறை, தீய பழக்கங்கள் போன்ற பின்பற்றத் தகாத பண்புகளும் பாடற் பொருளாயின.

பாடும் பாடலைப் பின்பற்ற நினைக்கும் குழந்தைப் பருவத்தில் இத்தகைய பாடல்கள் பண்புருவாக்கத்திற்குத் துணை நிற்கின்றன.

**5.3.1. இறைவன்:**

மொழி, மதம், இனம், நாடு கடந்து நிற்பது இறை நம்பிக்கை. வழிபடும் தெய்வமும் முறையும் வேறுபடினும் இறைவழிபாடு என்பது உலகளாவிய ஒன்று.

> **''இருசிறு கண்கள்**
> **இறைவனைக் காண**
> **இருசிறு செவிஅவர்**
> **இசையினைக் கேட்க**
> **...........**

ஒருசிறு நா அவர்
உயர்நிலை போற்ற''[6]

என்று மு.வ. இறைவனை வழிபட அமைந்த உறுப்புகள் பற்றிப் பாடுகிறார்.

''இறைவா எனக்கொரு வரம் தருவாய்
இனியதை நினைக்க அருள்புரிவாய்.
இறைவா எனக்கொரு வரம்தருவாய்
இனியதைப் பேச அருள்புரிவாய்.
இறைவா எனக்கொரு வரம்தருவாய்
இனியதைச் செய்ய அருள்புரிவாய்.''[7]

அழ.வள்ளியப்பாவின் இந்தப் பாடல் எண்ணம், வாக்கு, செய்கையிலே இனிமை சேர்க்க இறையருளை வேண்டுவதாக அமைந்துள்ளது.

மேற்கண்ட இரு பாடல்களும் எம்மதத்தினர்க்கும் ஏற்ற இறைவழிபாட்டுப் பாடலாக அமைந்துள்ளன.

இஸ்லாமியச் சிறுவன்,

''நோன்பிருக்கிறேன் – அம்மா
நோன்பிருக்கிறேன்
தூய்மையான ரமலான் நோன்பு
நானிருக்கிறேன்!
..............
உலகில் அமைதி நிலைக்கவே
உயிர்கள் இனிது செழிக்கவே
கலகம் யாவும் நீங்கவே
கருணை மழையும் பொழியவே
நோன்பிருக்கிறேன் அம்மா''[8]

என்ற பாடல் இஸ்லாமியர்களின் வழிபாட்டு முறையைச் சொல்கிறது.

''ஏசுபிரான் நற்கதையைக்
　　கேள் தம்பி கேள்—நீ
ஏற்ற பிழை பாவமெல்லாம்
　　தூள் தம்பி தூள்!
இரத்தம் சிந்தி உலகினையே
　　சுத்தம் செய்தவர்—நம்
இதயமெல்லாம் வாழத்தன்னை
　　தத்தம் செய்தவர்.
ஏசுபிரான் பொன்மொழிகள்
　　ஏற்றுப் போற்றுவோம்—இனி
எந்த நாளும் வாழ்வில் இதை
　　செயலில் காட்டுவோம்.''[9]

ஏசுவின் வாழ்வைச் சொல்லி வழிபடும் பாடலாக இது அமைந்துள்ளது.

''ஆற்றங் கரையில் அமர்ந்தவனே!
ஆனந்த வடிவான ஐங்கரனே!
நாற்புற மெங்கும் நிறைந்தவனே!
நானிலஞ் சிறக்கச் செய்வோனே!''[10]

என்று விநாயகரைப் போற்றும் கவிதை இது.

சிவன், திருமால்,அம்மன், முருகன், இராமன், கண்ணன் எனப்பல தெய்வங்களும் குழந்தைப் பாடல்களில் இடம்பெறுகின்றனர். குழந்தைகளுக்கு இறை நம்பிக்கை ஊட்டவும் இறைவனை வழிபட்டு நற்செயல்கள் புரியவும் இத்தகைய பாடல்கள் வழி வகுக்கின்றன.

இறைவனுக்கு இணையாக மதிக்கப்பட வேண்டியவர்கள், நாம் நேரில் காணும் பெற்றோர்கள் என்று சிறுவர்க்கு உணர்த்த,

''அம்மா! அப்பா! வணங்குகிறேன்.
அன்பைப் போற்றி இணங்குகிறேன்.
இம்மா நிலத்தில் நான்பார்த்த
முதலாம் தெய்வம் நீர் தாமே!''[11]

என்று பெற்றோரையும் கடவுளாய்ப் போற்றும் பண்பைச் சொல்லித்தரும் பாடலாக இது அமைந்துள்ளது.

**5.3.2. பெரியோரை மதித்தல்:**

வயதில் முதிர்ந்த பெரியோர்களைப் புறக்கணிப்பதும் அவமதிப்பதும் பெருகி வரும் இக்காலக்கட்டத்தில் பெரியோரை மதிக்க வேண்டும் என்னும் பண்பை இளம் உள்ளங்களில் பதிக்கும் பணியைக் குழந்தைப் பாடல்கள் செய்கின்றன.

> ''வயது முதிர்ந்த பெரியோரை
> வணக்கம் கூறி வரவேற்கும்
> நியதி தன்னை எந்நாளும்
> நினைவில் வைப்பது நன்றாகும்.
> இயல்பாய் இன்றைய முதியவராய்
> இருப்பவர் முன்னைய இளையவராம்
> நலமாய் நாமும் வளர்ந்தோங்கி
> நாளைய முதியவராய் வரலாம்.''[12]

பெரியவர்களை மதிக்கும் பண்பைச் சொல்வதோடு அவர்கள் நேற்றைய இளைஞர்கள் . நாம் நாளைய முதியவர்கள் என்கிற இயற்கை நியதியைக் குழந்தை மனம் கொள்ளக் கூறுகிறார் கவிஞர்.

> ''அலட்சியப் படுத்தல் ஆகாது
> அவமதித் திடவும் கூடாது
> உலகில் மூத்தோர் அறிவுரையை
> உணர்ந்து திருத்திக் கொளவேண்டும்!''.[13]

இந்தப் பாடல் மூத்தோரின் அறிவுரை அனுபவ உரை. அதனை உணர்ந்து, இளையோர் தவறுகளைத் திருத்திக் கொள்ளும் பண்பினைச் சொல்கிறது.

மேலும்,

> ''புத்திமதி சொல்பவரை
> பொக்கென்று தட்டாமல்

புத்தியென்று கேட்டுப்

பொருத்தவே வேண்டும் புத்திரியே!"[14]

புத்திமதி சொல்பவர் யார் என்பதைவிட, அவர் சொன்ன நல்ல அறிவுரையைக் கேட்டு நடத்தல் குழந்தைகளுக்குத் தேவையானதொரு பண்பு என்பதனை மேற்கண்ட பாடல் சொல்கிறது.

**5.3.3. சான்றோர் வழிநடத்தல்:**

நம் காலத்து வாழும் பெரியோர்களை மதிப்பதும் அவர்தம் அறிவுரை கேட்பதும் எவ்வளவு முக்கியமோ அந்த அளவிற்கு உலகில் வாழ்ந்து மறைந்த சான்றோர்களின் வாழ்வு நமக்குச் சிறந்த வழி காட்டுதலாய் அமையும்.

"வாடா தம்பி வாடா வா
வாழும் வழியைச் சொல்வேன் வா
பாடாய்ப் பட்டு உயர்ந்தவர்கள்
பாதை சொல்வேன் நெருங்கிவா! (வாடா)

ஈவெராவின் சமத்துவம்
இங்கர்சாலின் மகத்துவம்
பாவேந்தரின் மொழித்திறம்
பாரதியாரின் கவித்திறம் (வாடா)

நேதாஜியின் போர்க்குணம்
நேருஜியின் பாண்டித்தியம்
காந்திஜியின் உயர்குணம்
காமராஜரின் தனித்துவம் (வாடா)

இவர்கள் வாழ்வை அறிந்துகொள்
இதயத்திற்குள் பதித்துக் கொள். (வாடா)"[15]

இப்பாடல் சான்றோர்களின் பெயரையும் அவர்கள் சிறப்புப் பெற்ற காரணத்தையும் கோடிட்டுக் காட்டுகின்றது. இதன் மூலம் கவிஞர் குழந்தைகளின் ஆர்வத்தைத் தூண்டி அச்சான்றோர்களின் வரலாற்றைப்

படிக்க வழி செய்கிறார். ஒவ்வொரு வரலாறும் குழந்தைகளை நல்வழி நடத்தும் என்பது உறுதி.

**5.3.4. பார்த்து நடத்தல்:**

சான்றோரின் வாழ்வைப் பின்பற்றுவது போல இயற்கையின் அரிய படைப்புகள் பலவும் குழந்தைகளுக்கு நல்வழிகாட்டியாய் அமையும் விதத்தையும் குழந்தைப் பாடலில் காண்கிறோம்.

''கடலைப் போல அமைதி கொண்டு
அடங்கி நடக்கணும்—அங்குக்
கிடைக்கும் பொருட்கள் போல நாளும்
பயன்பட வேணும்—நாட்டுக்குப்
பயன்பட வேணும்.
மலையைப் போல உலகில் நீயும்
உயர்ந்து நிற்கணும்........
........ ......... ........ ........
மரத்தைப் போல நிழலைத் தந்து
வாழ்ந்திட வேணும்.............''[16]

கடலும் மலையும் மரமும் கூட குழந்தைகளுக்கு நற்பண்பைக் கற்பிக்கும் ஆசானாய் விளங்குகின்றன. மேலும் விலங்குகள், பறவைகள் போன்றவற்றைச் சான்று காட்டி குழந்தைகளின் பண்பை வளர்க்கும் பாடல்களும் குழந்தை இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

''லொள் லொள் என்றே குரைக்கும் நாயும்
நன்றியில் சிறந்தது தானுங்க!
........ ......... ........ ........
விலங்குகள் பறவைகள் உதவி புரியுது
நம்மைக் காக்க என்றுங்க!
நாமும் அதுபோல் உதவிட முயல்வோம்
நாட்டை என்றும் வளமாக்கங்க''[17]

விலங்குகள், பறவைகளைக் காட்டி குழந்தைகளின் பண்புருவாக்கத்திற்கு உதவும் பாடல் இது.

### 5.3.5. நாட்டுப் பற்று:

குழந்தைகள் பெற்றோரையும் பெரியோரையும் போற்றிப் பேணுவது போல நம் நாட்டையும் பேண வேண்டும். கவிஞர்கள் 'நாட்டுப்பற்று' எனும் குணத்தை வளர்க்கப் பல பாடல்கள் பாடியுள்ளனர். முதலில் குழந்தை தன் நாட்டின் சிறப்பினைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

''சேர நாட்டில் யானையாம்
சோழ நாட்டில் சோறாகும்.
பாண்டிய நாட்டில் முத்தாகும்
தொண்டை நாட்டில் சான்றோராம்
எல்லாம் சேர்ந்தால் தமிழ்நாடு.''[18]

என்ற மு.வரதராசனாரின் பாடல், பண்டைய தமிழக நிலப்பரப்பையும், அவற்றின் சிறப்பினையும் குழந்தைக்குத் தெளிவுபடுத்தும் பாடலாக அமைந்துள்ளது. நமது தமிழ் மாநிலம் அமைந்துள்ள இந்திய நாட்டின் மீது குழந்தைகளுக்குப் பற்றேற்படும் வகையில்,

''எங்கள் நாடு இந்தியா
எங்கள் தேசம் பாரதம்
எங்கள் எண்ணம் ஒன்றுதான்
எங்கள் செய்கை ஒன்றுதான்''.[19]

என்றும்,

''சத்தியம் பேசும் தேசமிது
தர்மம் காக்கும் தேசமிது
கத்தி இன்றி விடுதலையைக்
கண்ட புண்ணிய தேசமிது.
........ ......... ........ ........
எங்கள் இதயம் பாரதமே
எழிலார் தங்க பாரதமே.''[20]

இவ்வாறு பல பாடல்கள் உள்ளன. நம் நாட்டைப் பற்றி உயர்வாக நினைக்கும் குழந்தைதான் உயர்ந்த பண்புடன் உருவாக முடியும்.

நாட்டிலுள்ள ஒருசில குறைபாடுகளைப் பெரிதுபடுத்தி நாட்டை இழிவாக நினைப்போர், உயர்ந்த சிந்தனைக்கு இடமளிக்க மாட்டார். எனவே குழந்தைப் பாடல்களில் நாட்டின் மீது பற்றுக் கொள்ளும் பண்பு உருவாக்கப்படுகிறது.

**5.3.6. மொழிப்பற்று:**

எண்ணத்தை வெளிப்படுத்த உருவான ஒலிக்குறிப்பு மொழி. மொழி இல்லா நிலை இருக்குமாயின் நுட்பமான நம் கருத்துக்களைப் பிறருக்குச் சொல்லவோ, பிறரின் கருத்தை அறியவோ இயலாது. அத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த மொழியின் மீது குழந்தை பற்றுக் கொள்ள வேண்டும். அதனால்,

''தமிழே நமது தாய்மொழியாம்
தமிழே உலகின் உயர்மொழியாம்
இயலே இசையே கூத்தென
இனிமைத் தமிழில் மூன்றுண்டே
உயர்வு கொண்ட முத்தமிழ்தான்
உலகின் மூத்த மொழியாகும்.
சேர சோழ பாண்டியர்கள்
சேர்ந்து வளர்த்த தமிழ்மொழியை
வாரீர் நாமும் வளர்த்திடுவோம்
வாழ்த்தி வணங்கிப் போற்றிடுவோம்''[21]

என்று குழந்தை பாடுவதாக நாக.முத்தையா பாடியுள்ளார். 'நமது தமிழ் மொழி' 'உயர்மொழி' 'உலகின் மூத்த மொழி' 'வாழ்த்தி வணங்கிப் போற்றுவோம்' என்றெல்லாம் பாடும் போது குழந்தைக்கு நம்மொழியின் மேன்மை மனதில் பதிந்து மதிக்கும் பண்பு உருவாகும்.

**5.3.7. அன்பு:**

வழிபாடு, போற்றுதல், மதித்தல், வழிநடத்தல், நாட்டுப்பற்று, மொழிப்பற்று என்பவை அன்பு சார்ந்த செயல்கள். அன்பு என்பது அடிப்படைப் பண்பு. அதுவே பண்புகளுக்கெல்லாம் ஆணிவேர் எனலாம்.

''சிறுவரைப் பயிற்றுவதில் அன்பு மிகவும் இன்றியமையாதது. அன்பு நல்வளர்ச்சிக்கு வழிசெய்யும். அன்பு இன்பமளிக்கும்; துன்பம் துடைக்கும்; ஆறுதல் தரும்; நம்பிக்கைக்கு அடிப்படை அன்பு. முழு முயற்சிக்குக் காரணம் அன்பு. இறுதி வெற்றியின் முன்னணி அன்பு''[22] என்கிறார் மனநூலார்.

> ''குழந்தை வளர்வது அன்பிலே—நல்ல
> குணங்கள் அமைவது பண்பிலே!''[23]

குழந்தையின் வளர்ச்சிக்கு அடிப்படை அன்பெனும் பண்பு என்கிறார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

> ''சின்னஞ் சிறிய பருவத்தில்
> சிறந்த பண்பைக் கற்றுக்கொள்.
> அன்னை உன்னை வளர்த்திடவே
> அன்பை முதலாய் வைத்திருந்தார்.
> உன்னை வளர்த்த தாயன்பு
> உலகை வளர்க்க உதவிடுமே.''[24]

என்ற அடிகளாசிரியரின் பாடல் உலக வளர்ச்சிக்கு உறுதுணையாய் இருப்பது அன்பு என்கிறது.

> ''நெஞ்சிற் கருணை நிறைந்தவர்க்கு
> நேயம் கொண்ட நெறியோர்க்கு
> விஞ்சும் பொறுமை யுடையவர்க்கு
> வெல்லும் படைகள் வேறுளவோ?''[25]

படைக் கருவிகளுள் ஒன்று அன்பு என்று பாடுகிறார் கவிமணி.

இன்றைய உலகின் அவசியத்தேவை, அவசரத்தேவை என்று சொல்லத்தக்க அமைதிக்கு வழி என்ன?

> ''அன்பு பெருகப் பெருகத்தான்
> அமைதி அடையும் உலகமே''[26]

என்று உலக அமைதிக்கு வழி சொல்கிறார் அழ.வள்ளியப்பா.

பாசம், நேயம், கருணை எனப் பல பெயர்களால் சுட்டப்படும் அன்பு பற்றிப் பல கவிஞர்கள் குழந்தைப் பாடல்கள் எழுதியுள்ளனர்.

**5.3.8. உதவி:**

"9 முதல் 12 வயதில் பிறருக்கு உதவும் குணம் தோன்றும். தனக்கு இல்லாவிடினும் பிறருக்கு அளிக்கும் தியாக புத்தி பிறக்கும்"[27] என்கிறது மனநூல்.

இத்தகைய பண்பைப் பாடல்வழி, குழந்தைகளுக்குப் பெற்றோரும் பள்ளியும் நீடித்து நிலைக்கும்படி வளர்க்க வேண்டும். உதவி செய்வதற்கு அடிப்படையாய் அமைவது இரக்க குணம். அதுவும் குழந்தைப் பாடல்கள் பலவற்றில் இடம் பெற்றுள்ளன.

> "செல்வத்திலே புரண்டு–இமயச்
> சிகரத்திலே வாழ்ந்தி டினும்
> எள்ளி நகைக்காதே –ஏழைகட்
> கென்றும் இரங் கிடுவாய்"[28]

என்று ஏழைகளுக்கு இரங்கி உதவ வேண்டியதன் அவசியத்தைச் சொல்கிறது இப்பாடல்.

> "செவிடர், குருடர், முடவர்க்குச்
> செய்வாய் நல்ல உதவிகள்
> அவரைக் கேலி செய்வதோ
> அதிகக் கெட்ட செய்கையாம்".[29]

என்கிறார் அழ.வள்ளியப்பா. மாற்றுத் திறனாளிகளைக் கேலி செய்யாது, அவர்களுக்கு இயன்ற வகையில் உதவி செய்ய வேண்டும் என்ற பண்பை வளர்ப்பது இப்பாடல்.

மாற்றுத் திறனாளிகளுக்கு உதவுவது போல உடல்நலக் குறைவால் வாடுவோர்க்கும் நம்மால் இயன்ற உதவி செய்ய வேண்டும். அறிவியல் கண்டுபிடிப்பால், மருத்துவ வசதிகள் பெருகிவிட்டதை உணர்த்துவதோடு, மனிதர்களாகிய நாம் எவ்வகையில் உதவ முடியும் என்பதையும் குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டும்.

''குருதிக் கொடை கொடுக்கக் கொடுக்க
உடலில் குருதி பெருகிடும்.
விழிக் கொடையும் மனித வாழ்வில்
ஒளியை ஏற்றி வைத்திடும்.
பள்ளிப் பாடம் வாழ்க்கைக் கல்வி
இரண்டும் அறிவை வளர்த்திடும்.
பரந்த வாழ்வில் பிறருக்குதவும்
பணிவைக் கற்றுத் தந்திடும்''.[30]

இப்பாடல் இரத்தம், விழி ஆகியவற்றைக் கொடையாகக் கொடுத்து உதவுதலின் முக்கியத்துவத்தைக் குழந்தைக்குச் சொல்கிறது.

**5.3.9. நன்றி மறவாமை:**

உதவும் பண்பின் முக்கியத்துவத்தைக் குழந்தைகட்குச் சொன்ன கவிஞர்கள், பிறர் செய்த உதவியை என்றென்றும் மறக்கலாகாது எனும் பண்பையும் பாடல்வழி விளக்கினர். இதனையே வள்ளுவப் பெருந்தகை செய்ந்நன்றியறிதல் என்ற அதிகாரத்தில் விளக்கினார்.

''ஒருவர் செய்த உதவியினை
உலகோர் அறியச் செய்தலொடு
பெருமை கிட்டும் வண்ணம தாய்ப்
பேசி நன்றி காட்டென்பர்!
நன்றி மறத்தல் தீதென்று
நாளும் உரைத்து நின்றிடுவார்!
என்பும் பிறர்க்கு ஈந்திடவே
எங்கள் அப்பா சொல்லிடுவார்!''[31]

செய்ந்நன்றியறிதலின் முக்கியத்துவத்தைச் சொல்லும் பாடல் இது.

''நன்றி மறந்தவர் வாழ்ந்ததில்லை
நன்றி காத்தவர் தாழ்ந்ததில்லை
நன்றி உணர்வைப் பெற்றாலே
நமக்கு வீழ்ச்சி வருவதில்லை.''[32]

நன்றி மறவாமை, மறத்தலினால் ஏற்படும் விளைவுகளைக் குழந்தைகளுக்குப் புரியும் எளிய சொற்களால் சொல்லும் பாடல் இது.

**5.3.10. ஒற்றுமை:**

மதம், மொழி, பணக்காரர்கள்-ஏழைகள் என்ற வேறுபாடுகளைக் குழந்தைகள் உணரும் வண்ணம் சுற்றுச்சூழலில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அவற்றைப் பாடல்கள் வழி மாற்ற வேண்டும்.

> ''இந்து, முஸ்லீம், கிறித்துவம்
> ஈரம் விளைக்கும் புத்தமுடன்
> சாந்தம் விளங்க நன்நெறியில்
> சார்ந்து புழங்கும் மலைநாடு.
> ........ ......... ........ ........
> மதங்கள் பலவாய் இருந்தாலும்
> மனங்கள் எல்லாம் ஒன்றாகி
> இதமாய் மக்கள் கூட்டுறவாய்
> இணைந்தே வாழும் மலைநாடு.''[33]

மதவேறுபாடுகளின்றி இணைந்து வாழ வழி சொல்லும் குழந்தைப் பாடல் இது.

> ''எத்தனை விழுதுகள் ஆலினிலே
> எனினும் ஆலம் ஒருமரமே
> எத்தனை மொழிகள் இந்நாட்டில்
> எனினும் இந்தியர் இந்தியரே''.[34]

மொழி வேறுபடினும் இந்தியத் தாயின் பிள்ளைகள் நாம் அனைவரும் எனும் நம்பிக்கையூட்டும் பாடல்; ஒற்றுமை கூட்டும் பாடல்.

> ''ஏழை பணக்காரர்
> என்று எண்ணாமல்
> ஒட்டி வாழ்வது சமத்துவம்.
> தோழமை கொண்டு
> பகைமை ஒழித்துத்
> தோள்கள் சேர்வது சமத்துவம்''[35]

ஏழை, பணக்காரர் வேறுபாடின்றிப் பழகும் பண்பே சமத்துவம் என குழந்தைக்குச் சொல்லி வளர்க்க உதவும் பாடல் இது.

> ''ஆதர வற்ற பிள்ளைகள் வாழும்
> ஆலயம் போய்வருவோம்
> அவர்கள் உடுத்த உடைகள் கொடுத்து
> இனிப்புகள் வழங்கிடுவோம்!
> கூடிச் சிரித்துப் பேசி மகிழ்ந்து
> கைகள் குலுக்கிடுவோம்!
> குடும்பத் தோடு பிறந்தநாள் அங்கே
> கொண்டாடி மகிழ்ந்திடுவோம்!''[36]

இப்பாடல், ஆதரவற்ற குழந்தைகளுடன் பிறந்தநாளைக் கொண்டாடும் குழந்தை அவர்களை உறவாகக் கருதும். தானும் மகிழ்ந்து அக்குழந்தைகளையும் மகிழ்விக்கும். வேறுபடுத்திக் காணும் எண்ணமின்றி உறவாடும் உள்ளம் தோன்றும்.

வேற்றுமை எண்ணம் நீங்கிய குழந்தைகளுக்கு ஒற்றுமையின் மகத்துவத்தைக் கூற வேண்டும்.

> ''ஒருகை ஓசை எழுப்பாது
> ஒற்றுமை என்றும் தோற்காது
> ஓடி வாருங்கள் தோழர்களே,
> ஒன்றாய்ச் சேருங்கள் நண்பர்களே''[37]

மேலும்,

> ''உலகம் நமது பெருவீடு–இதை
> உணர்ந்தவர் உள்ளம் தேன்கூடு
> பலவகை மக்கள் வாழ்கின்றனர்–இது
> பாங்குடன் விளங்கும் பூந்தோட்டம்''[38]

மேற்கண்ட பாடல்கள் ஒற்றுமையின் வலிமையைச் சொல்கின்றன; உலகளாவிய ஒற்றுமைக்கும் வழிவகுக்கின்றன.

### 5.3.11. உழைப்பு:

'உழைப்பின்றேல் உயர்வில்லை' என்பதைச் சிறு வயதிலேயே குழந்தை உள்ளத்தில் பதிய வைக்க வேண்டும். குழந்தைகளால் இயன்ற சிறு சிறு வேலைகளைச் செய்ய குழந்தைகளைப் பழக்க வேண்டும். குழந்தைகளின் மனம் கவர்ந்த பாடல்களின் வழியாக உழைக்கும் பண்பை உருவாக்க வேண்டும்.

> ''தூங்காதே தம்பி தூங்காதே –நீயும்
> சோம்பேறி என்றபெயர் –வாங்காதே!
> ........ ......... ........ ........
> நல்ல பொழுதையெல்லாம்
> தூங்கிக் கெடுத்தவர்கள்
> நாட்டைக் கெடுத்ததுடன்
> தானும் கெட்டார்.
>
> ........ ......... ........ ........
> உழைத்துக் கொண்டோ ரெல்லாம்
> பிழைத்துக் கொண்டார்.''[39]

உழைப்பிற்கு எதிரான சோம்பல், பகல் தூக்கம் இவற்றின் மூலம் தானும் கெட்டு, நாட்டையும் கெடுப்பர் சிலர் என்பதைத் தம்பியிடம் கூறுகிறார் பட்டுக்கோட்டையார். அதனைத் தொடர்ந்து உழைப்பின் மூலம் பிழைக்க வழியுண்டு என்பதையும் தெளிவுபடுத்துகிறார்.

> ''தூங்கித் திரிபவன் சோம்பேறி!
> துக்கப் படுபவன் சோம்பேறி!
> மற்றவர் போல உழைக்கின்ற
> மதிப்பை அறியான் சோம்பேறி!
> ........ ......... ........ ........
> பிறர்க்குச் சுமையாய் வாழ்ந்திடுவான்
> பேயாய் உலகில் திரிந்திடுவான்''[40]

உழைப்பின் மதிப்பை அறியாதவர் சோம்பேறி. அவர் பிறர்க்குச் சுமை; பேய் என்ற இழிநிலைக்கு ஆளாவார் என்கிறார் கவிஞர்.

காமாட்சி ஸ்ரீநிவாசன் என்ற கவிஞர் ''தொழிலாளர்'' என்ற பாடலில், உழவர், தோட்டக்காரர், ஆடுமாடு மேய்ப்பவர், நூற்பாலைத் தொழிலாளி, சாலை போடுபவர், கொல்லர், தச்சர் ஆகிய 7 தொழில்கள் செய்பவர்களின் உழைப்பைச் சொல்லி,

''என்றும் மக்கள் அனுபவிக்க
ஏற்ற பலவும் செய்தளிப்பார்
குன்றும் சோர்வொன் றில்லாதார்
........ ......... ........ ........
நன்றி யோடும் சிந்தித்து
நடக்க வேண்டும் நாமெல்லாம்''[41]

என்கிறார். நாம் உண்பதும் உடுப்பதும், இருப்பதும், பயணம் செய்வதும் பலரின் உழைப்பின் பயனால்தான் என்பதைக் குழந்தைக்குப் பாட்டாகச் சொல்லி, உழைக்கும் பண்பை உருவாக்க வேண்டும்.

''காலைப் பொழுது பிறக்கிற போதே
கடமைகள் தொடங்கி விடு.
கடகட வென்றே வேலைகள் முடித்துக்
காலத்தை வென்று விடு''.[42]

இப்பாடல் குழந்தைப் பருவத்திற்கேற்ற கடமைகளை காலை முதல் தொடங்கி, தொடர்ந்து செய்து வெற்றிபெறும் வழியைச் சொல்கிறது.

''கண்கள் இல்லா மனிதன் ஒருவன்
கூடை பின்னுகிறான்.
கைகள் இல்லா மனிதன் ரப்பர்
கையால் உழைக்கின்றான்.''[43]

குழந்தைகளுக்கு நம்பிக்கை ஊட்ட, மாற்றுத் திறனாளிகளின் நம்பிக்கையைச் சொல்லி, உன்னாலும் உழைக்க முடியும் என்கிறது இப்பாடல்.

**5.3.12. கல்வி:**

கேடில் விழுச் செல்வமான கல்வி, குழந்தைகளுக்கு மிகமிகத் தேவையான ஒன்று. கல்வி கற்கும் பண்பைக் கவிதை வழி கவிஞர்கள் சொல்கின்றனர்.

''தலைவாரிப் பூச்சூடி உன்னைப் பாட
சாலைக்குப் போஎன்று சொன்னாள் உன்அன்னை
........ ......... ........ ........
படியாத பெண்ணா யிருந்தால் – கேலி
பண்ணுவார் என்னை இவ்வூரார் தெரிந்தால்!
........ ......... ........ ........
கடல்சூழ்ந்த இத்தமிழ் நாடு–பெண்
கல்வி பெண் கல்வி என்கிறதன் போடு!''[44]

என்று பாரதிதாசன் ''தந்தை பெண்ணுக்கு!'' என்ற பாடலில் பெண் கல்வியின் முக்கியத்துவத்தைச் சொல்லக் காண்கிறோம்.

''கல்வியை என்றும் மறவாதே
கற்றதைச் செய்ய மறவாதே!''[45]

என்றும்,

''கல்வியைக் கசடறக் கற்க வேண்டும்
கற்பித்த ஆசானை வணங்க வேண்டும்''[46]

என்றும் கவிஞர்கள் பாடியுள்ளனர். கல்வி என்பது மதிப்பெண் பெறவும் அதனடிப்படையில் வேலை பெறவும் உதவும் கருவியாகக் கருதப்படுகிறது. ஆனால் 'கல்வி என்பது கசடறக் கற்க வேண்டிய ஒன்று; கற்றபடி நடப்பது நன்று; கற்பித்த ஆசானை மதித்தல் என்றும் நன்று' என்ற பண்புகளைப் பிள்ளைக்குச் சொல்லும் பாடலாக உள்ளது.

**5.3.13. விடுதலை:**

நாடு பெற்ற விடுதலையை நயமாய்ச் சொல்லிக் குழந்தைகளுக்குப் புரிய வைக்க வேண்டும்.

''பாரதத்தாய் மடியில் முளைத்த
பசிய இளஞ் செடிகளே!
பரங்கியர்கள் பிடியில் நாடு
பட்ட பாடு தெரியுமா?
கூறு போட்ட வெள்ளையனின்
கொடுமை கண்ட இந்தியா
மாறு பட்டு வாழ்ந்திருந்தால்
மண்ணை மீட்க முடியுமா?''[47]

என்று அடிமைத் தனத்தின் அவலத்தைச் சொல்லி,

''விடுதலை யாம் விடுதலை
வேண்டிப் பெற்ற விடுதலை
அடிமை என்னும் கொடுமையை
அழித் தொழித்த விடுதலை!
........ ......... ........ ........
மடமை தன்னை நீக்கவும்
மார்க்கம் சொன்ன விடுதலை''[48]

என்று விடுதலை உணர்வால் அடிமை நீங்கியதுடன் மடமையும் நீங்க வழி சொல்கிறார் கவிஞர்.

''சுதந்திரம் அடைந்தோம்
துணிவுடன் எழுந்தோம்.
நிதமொரு நன்மை
நிச்சயம் புரிவோம்
இந்திய நாட்டின்
இளஞ்சுடர் மணிகள்''[49]

அடிமை, மடமையில் அமிழ்ந்திருந்த நாட்டை, விடுதலை உணர்வுடன் முன்னேற்ற நிதமொரு நன்மை புரியும் பண்பை ஏற்படுத்துவதாக மேற்கண்ட பாடல் அமைந்துள்ளது.

### 5.3.14. வீரம்:

வீரம் என்பது வளர்ந்தோர்க்குரியது. இளம் குழந்தைகளுக்கு வீரம் தேவையா? எனச் சிலர் நினைப்பர். பழந்தமிழகத்தில், தாய்மார்கள் பால் மணம் மாறாக் குழந்தைகளைப் போருக்கு அனுப்பியதை இலக்கியங்கள் காட்டுகின்றன. எனவே குழந்தைகட்கு வீரப்பண்பு வேண்டியதே.

''வீரம் வேண்டும் தம்பி—எதற்கும்
வீரம் வேண்டும் தம்பி
யாவரும் போற்றும் மான வீரம்
எவர்க்கும் வேண்டும் தம்பி!
........ ......... ........ ........
வீட்டு நாட்டுக் கடமை புரிந்து
வாழ்தல் வீர மாகும்
........ ......... ........ ........
திண்மை நேர்மை திரட்டி—எதிர்க்கும்
திறமை வீர மாகும்.''[50]

இப்பாடலில் கவிஞர், நாட்டிற்கும் வீட்டிற்கும் உரிய கடமையைப் புரிவதும் அநீதியை நேர்மையுடன் எதிர்ப்பதும் வீரப் பண்பென விளக்குகிறார்.

''ஊருக்கு பயப்பட மாட்டேன்—அம்மா
உன்னைக் கைவிட மாட்டேன்
போருக்குப் பயப்பட மாட்டேன்—பழம்
பொய்யினை நையப் புடைப்பேன்
........ ......... ........ ........''

''நஞ்சுக்கு பயப்பட மாட்டேன்—வஞ்ச
நரிக்கும் பயப்பட மாட்டேன்.
அஞ்சாமல் யானைமுன் நிற்பேன்—நான்
அன்புக்கே பணிந்து நடப்பேன்''[51]

இளம் கன்று பயமறியாது என்பார்கள். ஆனால் மேற்கண்ட பாடல் குழந்தை எவையெல்லாம் வீரப்பண்பெனப் புரிந்து பாடும் பாடலாக அமைந்துள்ளது.

**5.3.15. தூய்மை:**

''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' என்பது முதுமொழி. நோய்க்கான கிருமிகளை உருவாக்குவது தூய்மையற்ற சூழல். எனவே தூய்மை பேணுவது தலையாய பண்பு.

''உடலில் உறுதி உடையவரே
உலகில் இன்பம் உடையவராம்.
........ ......... ........ ........
சுத்த முள்ள இடமெங்கும்
சுகமும் உண்டு; நீ அதனை
நித்தம் நித்தம் பேணுவையேல்
நீண்ட ஆயுள் பெறுவாயே!
........ ......... ........ ........
தூய காற்றும் நன்னீரும்
சுண்டப் பசித்தபின் உணவும்
நோயை ஓட்டி விடும் அப்பா!
நூறு வயது தரும் அப்பா!''[52]

கவிமணி, தூய காற்றும் நன்னீரும் சுத்தமான இடமும் உடல்நலத்தைத் தரும் என்கிறார். அதனால் தூய்மை பேணும் பண்பைக் குழந்தைகளிடம் வளர்க்க வேண்டும் என்கிறார்.

''வீட்டைச் சுற்றிப் பார்த்திடுவீர்
விதவிதமாய்ப் பூச்சிகள் தெரியுதே.
கரப்பான் மூட்டைப் பூச்சிகள்
கண்ட இடங்களில் திரிகிறதே.
........ ......... ........ ........
எங்கும் ஈக்கள் மொய்த்திடுதே
இரவில் கொசுக்கள் வந்திடுதே!
........ ......... ........ ........

கழிவுநீர் வெளியே ஓடிடவே
கால்வாய் நன்றாய்க் கட்டிடுவீர்
உள்ளே வெளியே தூய்மையினை
ஒவ்வொரு நாளும் காத்திடுவீர்''.[53]

வீட்டுச் சுற்றுப்புறத் தூய்மையும் உள்வீட்டின் தூய்மையும் மிகமிக அவசியம். அவற்றைக் குழந்தைகள் புரிந்து கொண்டு தூய்மை பேண முன்வரும் வகையில் இப்பாடலை இயற்றியுள்ளார் கவிஞர்.

''வீதியில் விற்கின்ற பண்டங்கள்
விலை குறைவெனினும் வேண்டாமே!
ஈக்கள் மொய்த்த பொருள்யாவும்
எளிதில் நோய்பற்ற ஏதாகும்.
தீமைகளே அவை பயப்பதனால்
திடமாய் ஒதுக்குதல் நன்றாகும்
தொற்று நோய்கள் பற்றாமல்
தூய்மை காத்து வளர்ப்போமே!''[54]

வீடும் சுற்றுப்புறமும் தூய்மையாய் இருப்பதுடன், விலை குறைவு என ஈ மொய்த்த பண்டங்களை வாங்கி உண்ணக் கூடாது. அதுவே நோய்க்குக் காரணமாகும் என்கிறது இப்பாடல். எல்லா வகையிலும் தூய்மை போற்றும் பண்பைக் குழந்தைகளுக்குச் சொல்லும் பாடல்கள் உள்ளன.

**5.3.16. விருந்தோம்பல்:**

குழந்தைகள் தம் பொருளைக் குறிப்பாகத் திண்பண்டத்தைப் பிறருக்குக் கொடுக்கத் தயங்குவர். சில குழந்தைகள் கொடுக்க மறுப்பர். அத்தகைய குழந்தைகளிடம் உணவைப் பகிர்ந்தளித்தல், வீட்டுக்கு வருபவரை உபசரித்தல் போன்ற பண்புகளைப் பாடல் வழி உருவாக்கலாம்.

''மாம்பழமாம் மாம்பழம்
மல்கோவா மாம்பழம்
........ ......... ........ ........

இங்கே ஓடி வாருங்கள்
பங்குபோட்டுத் தின்னலாம்''[55]

மாம்பழத்தைக் கையில் கொடுத்து, இந்தப் பாட்டையும் பாட வைத்தால் குழந்தை நிச்சயமாகப் பங்கு கொடுக்கும்; பகிர்ந்துண்ணும்.

''இனிப்பு அம்மா செய்கிறாள்
இரண்டு காரமும் செய்கிறாள்.
அறுசுவை விருந்தும் பாட்டியே
அருமை யாகச் சமைக்கிறாள்
எனது நண்பா! நீயுமே
என்னுடன் விருந்து உண்பாயே!''[56]

குழந்தை, நண்பனை விருந்துண்ண அழைக்கும் பாடல் இது. அம்மா, பாட்டி இருவரும் செய்த உணவு வகைகளை நண்பனுடன் ருசிப்பது மகிழ்ச்சி தரும் எனும் பண்பைக் குழந்தை உள்ளத்தில் பதியச் செய்கிறது இப்பாடல்.

**5.3.17. சிக்கனமும் சேமிப்பும்:**

சிக்கனம் என்பது சிறந்த பண்பு. சேமிப்பென்பது சிறந்த பழக்கம். சிக்கனத்தைப் பெற்றோர் செயல்வழி ஓரளவு குழந்தை தெரிந்து கொள்ளும். அதனைப் பாடல்வழி தெளிவுபடுத்துகிறது குழந்தை இலக்கியம்.

''சிக்கலைத் தணித்திடும் சிக்கனமே
சிக்கெனப் பற்றுதல் நம்கடனே.
..... ...... ...... ..... .... .... ........
அக்கம் பக்கம் தனைப் பார்த்தே
அதிகம் செலவு செய்யாமல்
சிக்கன உணர்வை ஏற்று நிதம்
சேமித்து வாழ்வதே நலமாகும்.''[57]

இப்பாடல் ஆடம்பரச் செலவுகளைத் தவிர்த்து சிக்கனத்தைச் சிக்கெனப் பிடிக்க வழி சொல்கிறது.

''பத்துக் காசுதான் என்றாலும்

பார்த்துச் செலவு செய்ய வேண்டும்.

பத்துக் காசுதா னேஎன்றால்

பறந்து பறந்து போயிடுமே!

சிக்கன வாழ்வே நீர்த்தேக்கம்

சீராய் அதுவே குடிகாக்கும்.

சிக்கன வாழ்வே வானமாகும்

குடும்ப நிலவாய் ஒளிவீசும்''[58]

வானம், நிலவு என்ற உருவகத்துடன் கூடிய இப்பாடல், பத்துக் காசைக் கூடப் பார்த்துப் பார்த்துச் செலவு செய்ய வேண்டும் என்கிறது.

இன்று சிக்கனம், சேமிப்பு என்பவை காசு பணத்தில் மட்டும் அன்றி எரிபொருள், நீர் போன்றவற்றிலும் சிக்கனம் எனும் பண்பு கடைப்பிடிக்கப்பட வேண்டியதன் அவசியத்தைக் குழந்தைப் பாடல் சொல்கிறது.

''எரிசக்தி சிக்கனம்

மிச்சப் படுத்தணும்

நாட்டுக்குச் சேவை இதுதான்

நமக்கெல்லாம் தேவை பொதுதான்

எதிர்காலம் பற்றி எண்ணிப் பார்ப்போமே

இன்னல் வாராமல் முன்பாதுகாப் போமே!''[59]

எதிர்கால இன்னல்களைத் தவிர்க்க இக்காலச் சிக்கனம் அவசியம் என்கிறது இப்பாடல்.

''சேமிப்பு! சேமிப்பு! சேமிப்பு!–பணம்

சேர்த்தாலே நமக்குண்டு ஓர் மதிப்பு!

சேவைக்கும் தேவைக்கும் செலவழித்து–நீ

சேர்த்துள்ள மிச்சத்தை வைகணக்கு''[60]

சேமிப்பு என்பது தேவைக்கும், சேவைக்கும் செலவளித்த பிறகு, சேமிக்க வேண்டும் என்ற பண்பைச் சொல்லும் பாடலாக அமைந்துள்ளது.

### 5.3.18. காலம் போற்றுதலும் காலப்பங்கீடும்:

''காலம் பொன் போன்றது'' என்பதால் பொன்னினும் மேலான காலத்தைப் போற்ற வேண்டும். உரிய நேரத்தில், உரிய செயலைச் செய்ய வேண்டும். இப்பண்பைக் கவிஞர்கள் பலர் குழந்தைப் பாடலாகத் தந்துள்ளனர்.

''காலக் கழிவு செய்யாதே;–நீ
கடமை செய்ய மறவாதே;
காலத்தை வீணாய்ப் போக்காதே; – எதையும்
காலத்தில் செய்ய மறவாதே''.[61]

என்றும்,

''காலம் என்னும் செல்வம்–நமக்குக்
கடவுள் தந்த செல்வம்.
மேலும் மேலும் கிடைக்கும்–செல்வம்
போலக் கிடைப்ப தில்லை.
செலவு செய்த செல்வம் –பின்னர்
தேடிக் கொள்ள முடியும்.
செலவு செய்த காலம்–என்றும்
திரும்பக் கிடைப்ப தில்லை.
........ ......... ........ ........
வீணில் காலம் போக்கி–நீ
விரயம் செய்ய வேண்டாம்''[62]

மேற்கண்ட பாடல்கள் காலத்தின் சிறப்பினைச் சொல்லி, செலவு செய்த காலம் மீண்டும் திரும்பி வராது. எனவே விரயம் செய்யலாகாது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

காலத்தை எப்படிப் பகிர்வு செய்து வேலைகளைச் சரியாக முடிக்க வேண்டும் என்பதையும் குழந்தைப் பாடல் சொல்கிறது.

''ஓடி ஆட ஒருநேரம்
உணவை உண்ண ஒருநேரம்

பாடம் படிக்க ஒரு நேரம்

படுத்துத்தூங்க ஒரு நேரம்

பெற்றோ ருக்கு ஒரு நேரம்

பிறருக் காக ஒருநேரம்

இப்படி நேரம் ஒதுக்கிடுவேன்.

என்றும் இன்பம் பெற்றிடுவேன்.''[63]

ஆடி, ஓடி விளையாடும் பருவத்தில் இருக்கும் குழந்தை விளையாடவும் வேண்டும். பாடம்படித்தல், பெற்றோருக்கும் பிறருக்கும் உதவுதல், உண்ணுதல், தூங்குதல் என்ற செயல்களுக்கான நேரத்தைச் சரியாய் ஒதுக்கி இன்ப வாழ்வு வாழ வழிகாட்டும் பாடலாக இது அமைந்துள்ளது.

**5.3.19. படித்தபடி நடத்தல்:**

ஏட்டில் படிக்கும் செய்திகள் பலவிதம்; சில தேர்வுக்கானவை; சில உரைநிகழ்த்த, கட்டுரை எழுத உதவுவன. இன்னும் சில பொழுது போக்கிற்கானவை என எண்ணுவர். 'கசடறக் கற்றபின், நிற்க அதற்குத் தக' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப படித்தபடி நடக்க வேண்டும். வாசிப்பை வாழ்வில் வழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பண்புக்கு வித்திடும் குழந்தைப் பாடல்கள் சில உள்ளன.

''ஏட்டில் படித்ததோடு

இருந்து விடாதே! நீ

ஏன் படித்தோம் என்பதையும்

மறந்து விடாதே.

நாட்டின் நெறிதவறி

நடந்து விடாதே–நம் (நாட்டின்)

நல்லவர்கள் தூற்றும்படி

வளர்ந்து விடாதே! நீ (ஏட்டில்)

மூத்தோர்சொல் வார்த்தைகளை

மீறக்கூடாது–பண்பு

முறைகளிலும் மொழிகளிலும்

மாறக் கூடாது.''[64]

என்று பாடினார் கல்யாண சுந்தரனார். ஏட்டில் படித்தவற்றை மறக்காமல் பின்பற்ற வேண்டும் என்பதைச் சொல்கிறார். ஏராளமான அற நூல்களைக் கொண்ட மொழி நம் தாய்மொழி. அவற்றில் சொல்லப்பட்ட கருத்துக்களை என்றும் வாழ்வில் பின்பற்றும் பண்பைக் குழந்தைப் பருவத்தில் உருவாக்க வேண்டும்.

**5.3.20. பொறுமை:**

அவசரமான உலகத்தில் அனைத்தும் விரைந்து கிடைக்கும் காலமிது. எனவே இன்றைய குழந்தைகளிடம் பொறுமை எனும் பண்பைக் காண்பது அரிதாகிவிட்டது. எதற்கும் பொறுமையற்ற நிலை உருவாகியுள்ளது. குழந்தைகளிடம் பொறுமையின் அருமையைச் சொல்ல வேண்டும்.

''பொறுமைதான் உன்றன் உடைமை—அதைப்

போற்றலே கடமை.

பொறுமையாற் கழியும் நாளிலே

புதுவன்மை சேருமுன் தோளிலே.

........ ......... ........ ........

பலமுறை பொறுப்பாய்—வேறு

பழுது நேருமெனில் சீறு.''[65]

என்கிறார் பாரதிதாசன். பொறுமையை உடைமையாய்க் கொள்ள வேண்டும்; அதன்மூலம் புதுவலிமை சேரும் என்கிறார். வேறு தீங்கு ஏற்படுமாயின் பொறுமையை விடுத்துச் சீற வேண்டும் என்பதையும் சொல்கிறார்.

**5.3.21. சாலை விதியை மதித்தல்:**

சாலை விபத்துக்களால் உயிர் இழப்புகளும், உறுப்பிழப்புக்களும் பெருகி வருகின்றன. இந்நிலையில் சாலை விதிகளைக் குழந்தைகளுக்குச் சொல்லி அவற்றை மதிக்கும் பண்பினை உருவாக்க வேண்டும்.

அதற்காகக் கவிஞர்கள் குழந்தைப் பாடல்களில் சாலை விதிகளைப் பாடியுள்ளனர்.

''வேடிக்கை விளையாட் டெல்லாம்
வீதியில் வேண்டாம் தம்பி!
ஓடியே வந்து மோதும்
உறவையே கலங்க வைக்கும்
ஊனமே விளைத்து மற்றும்
உயிரையே மாய்க்கச் செய்யும்
........ ......... ........ ........
உரியதோர் நீதியோடு
மெல்லவே வீதிதன்னில்
செல்வதே நல்லதாகும்''.[66]

என்று சிறிய குழந்தைகள் தெருவில் விளையாடுவதைத் தவிர்க்க வேண்டும் என்றும் விபத்துக்களின் கொடுமையான விளைவுகளைச் சொல்வதாகவும் பாடல் அமைந்துள்ளது.

சற்று வளர்ந்த குழந்தைகளுக்கு, ''சிறுவர் சிறுமியர்க்கான சாலை விதிப் பாடல்கள்'' என்ற நூல் உள்ளது. அதில் சாலை விதிகளைப் படத்துடன் பாடலாகத் தந்துள்ளார் பி. வெங்கட்ராமன்.

''சாலை விதிகள் அனைத்துமே
சரியாய் புரிந்து கொள்ளுவீர்!
........ ......... ........ ........
கூடிப் பலரும் சைக்கிளில்
கும்ப லாகச் செல்லுவதோ?
........ ......... ........ ........
வீதி திரும்பும் வளைவினிலே
வேக உணர்வைக் கொள்ளாதீர்!
........ ......... ........ ........
சரியாய் பிரேக்கும் மணியுமின்றி
சைக்கிள் ஓட்டுதல் பிழையாகும்.''[67]

சைக்கிள் ஓட்டக் கற்ற குழந்தைகள், சாலைவிதி என்ற ஒன்று இருப்பதைக் கூட அறியாமல் இருப்பார்கள். அத்தகைய குழந்தைகளுக்கு, இத்தகைய பாடல்கள் நினைவில் நின்று, பின்பற்றும் பண்பைத் தரும்.

### 5.3.22. பேச்சு:

நா நலத்தின் சிறப்புரைக்க வந்த வள்ளுவர்,

''ஆக்கமும் கேடும் அதனால் வருவதால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.''[68]

என்று ஆக்கம், கேடு இரண்டிற்கும் நாம் பேசும் பேச்சே காரணம் என்கிறார். அதனைப் பாடல்வழி சில கவிஞர்கள் கூறுகிறார்கள்.

''இனிய வார்த்தைகள் பேசிடுவாய்!
இன்பம் நாளும் நாடிடுவாய்!
கனிபோல் பிறர்க்குப் பயன்படுவாய்!
கற்றார் போற்ற வாழ்ந்திடுவாய்!''[69]

இனிய வார்த்தைகளே இன்பத்திற்கான வழி என்பதை இக்கவிதை உணர்த்துகிறது.

''தீச்சுட்ட காயங்கள் ஆறும்–உடல்
தேறிய பின்வடு தானாக மாறும்!
நாசுட்ட காயங்கள் ஆறா–எந்த
நாளிலும் இதயத்தின் புண்ஆறித் தேறா!''[70]

இப்பாடல் பொய்யில் புலவரின் குறள் கருத்தை உள்ளடக்கியதாகக் கடுஞ்சொல்லின் கொடுமையை விளக்கும் பாடலாக அமைந்துள்ளது.

இன்சொல், வன்சொல்லைத் தனித்தனியாகச் சொல்வதுடன், இணைத்தும் சில குழந்தைப் பாடல்கள் சொல்கின்றன.

''கரும்பு போல இனிமையாகப்
பேசக் கற்கணும்–பாகல்

கசப்பைப் போலப் பேசுவோர்பால்

பழக மறுக்கணும்!''[71]

பேச்சில் இனிமை வேண்டும்; கடுமை கூடாது என்பது போல, பேச்சில் உண்மை வேண்டும்; பொய் கூடாது எனவும் குழந்தைக்குப் பண்பூட்டும் பாடல்கள் உள்ளன.

''உண்மை பேசு தம்பி—நாளும்

உண்மை பேசு தம்பி!

உண்மை உன்னை உயர்த்தும்—அதனால்

உண்மை பேசு தம்பி!

........ ......... ........ ........

உண்மை யொன்றே இறைவன்—என்ற

உண்மை யறிந்து கொண்டால்

புன்மை யாவும் வெயிலைக் கண்ட

பனியைப் போல நீங்கும்![72]

உண்மை இறைவனுக்கு இணையானது; குழந்தைகளை உயர்வடையச் செய்வது எனப் பாடுகிறார் கவிஞர்.

''அருளே வருவ தாயிடினும்

பொருளே வருவ தாயிடினும்

புகழே வருவ தாயிடினும்

இகழே வருவ தாயிடினும்

துன்பம் தொலைவ தாயிடினும்

மெய்யே அன்றி எப்பொழுதும்

பொய்யே புகலோம் புகலோமே!''[73]

சிறப்புக்குரிய எது கிடைப்பதாக இருந்தாலும் அதன் பொருட்டு பொய் சொல்லுவதாகிய இழி செயலைச் செய்ய மாட்டோம் என்று குழந்தைகளே பாடும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது. உண்மை பேசும் உயர் பண்பு, பாடல்வழி குழந்தைகளுக்கு எளிமையாகச் சொல்லப்படுகிறது.

### 5.3.23. நற்பழக்கங்கள்:

நல்ல பண்புகளைப் பழக்கப்படுத்திக் கொள்வதே நற் பழக்கங்களாகின்றன. தனித்தனியாக நல்ல பண்புகளைப் பாடிய கவிஞர்கள் ஒரே பாடலில் நல்ல பண்புகள் பலவற்றை அடுக்கிப் பாடியுள்ளனர்.

''இனிமை வேண்டும் மொழியிலே
இரக்கம் வேண்டும் விழியிலே
கனிவு வேண்டும் எழுத்திலே
துணிவு வேண்டும் கருத்திலே!
எளிமை வேண்டும் உடையிலே
வலிமை வேண்டும் உடலிலே
தெளிவு வேண்டும் விடையிலே
செருக்கு வேண்டும் நடையிலே!''[74]

மேலும் ஒரு பாடல், அகர வரிசையில் நற்பண்புகளைச் சொல்கிறது.

''அன்பைப் பெருக்க வேண்டும்.
ஆணவம் விலக்க வேண்டும்.
இன்சொல் நெஞ்சில் வேண்டும்
ஈகைக் குணமே வேண்டும்
உண்மை உழைப்பு வேண்டும்
ஊக்கம் மனதில் வேண்டும்.
எளிமைத் தோற்றம் வேண்டும்
ஏற்றம் என்றும் வேண்டும்
ஐயம் விலக்க வேண்டும்
ஒழுக்கம் பண்பும் வேண்டும்
ஓடி ஆட வேண்டும்
ஔவை நெறியே வேண்டும்
அஃதை ஏற்க வேண்டும்''[75]

அழகு என்பது உணர்வாக இருந்தாலும், நம் உறுப்புகளின் செயல் பாட்டிற்கு அடிப்படையான பண்புகளே அழகு தரக்கூடியன எனக் குழந்தைக்குச் சொல்லும் பாடல் இதோ:

''சரியாய்ப் பார்க்கும்
பார்வை இருந்தால்
கண்ணுக் கழகு.
உண்மை பேசும்
போது மட்டும்
நாவும் அழகு.
தாய்மொழிச் சொல்லைக்
கேட்கும் போதே
செவியிற் கழகு.
தூய காற்றை
இழுக்கும் போதே
மூக்கிற் கழகு.
அழுக்கி நீக்கி
குளிக்கும் போதே
உடலுக் கழகு''.[76]

ஐம்பொறிகளுக்கு அழகு அதன் அமைப்பில் இல்லை. ஐம்பொறிகளின் பண்பு மிக்க செயல்களே அழகைத் தருவன என்று இப்பாடல் குழந்தைகளுக்குச் சொல்கிறது.

**5.4. தீய பண்புகள்:**

நற்பண்புகளைச் சொல்லும்போதே சில தீய பண்புகளையும் சொல்லி அவற்றின் தீமையையும் விளைவையும் சொல்லி அவற்றை விட்டுவிடச் சொல்ல வேண்டும்.

''சுற்றித் திரியும்நல்ல தம்பி—நீயும்
சோம்பற் கிடங்கொடாதே தம்பி!
கற்றுத் தெளியவேணும் தம்பி—கல்வி
கண்கள் உனக்குத் தம்பி!
பொய்யும் திருட்டும் வேண்டாம் தம்பி—அவை
பொல்லாக் கொடுமை தம்பி!''[77]

மேலும், நற்பழக்கங்களை 'வேண்டும்' என்று அகர வரிசையில் சொன்னதைப் போல் தீய பழக்கங்களை 'வேண்டாம்' என்று அகர வரிசையில் சொல்லும் பாடல் உள்ளது.

> ''அறவாழ்வை ஒருநாளும் துறக்க வேண்டாம்
> ஆன்றோரை ஒருபோதும் பழிக்க வேண்டாம்.
> இழிவான செயல்களிலே இறங்க வேண்டாம்.
> ஈன்றாளின் கோபத்தை ஏற்க வேண்டாம்.
> உழைப்பாளர் ஊதியத்தைக் குறைக்க வேண்டாம்.
> ஊக்கத்தை ஒருபோதும் இழக்க வேண்டாம்.
> எடுப்பாரின் கைப்பிள்ளை ஆக வேண்டாம்.
> ஏழைகள் மனம்வாட வெருட்ட வேண்டாம்.
> ஒன்றுபடும் நல்வாழ்வைக் குலைக்க வேண்டாம்.
> ஓதியதை ஒருகணமும் ஒதுக்க வேண்டாம்.''[78]

இவ்வாறு ஒரே பாடலில் பல தீய பண்புகளைக் களைய வழி சொல்லுவது ஒரு வகை. மற்றொரு வகை, ஒரு தீய பண்பைச் சுட்டிக்காட்டி, அதனை விட்டொழிக்க வழி சொல்வது.

**5.4.1. பொறாமை:**

வள்ளுவர் அழுக்காறாமை என்னும் அதிகாரத்தில் பொறாமையின் விளைவுகளைச் சொல்கிறார்.

> ''அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
> தவ்வையைக் காட்டி விடும்.''[79]

'குறளும் குழந்தைக் கவிதையும்' என்ற நூலில் வே.இரா.சிவஞான வள்ளல், குறள் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு பாடல்கள் எழுதியுள்ளார். அதில், 'பொறாமை' பற்றிப் பாடுகையில்,

> ''கெட்ட தாம்பொ றாமையைக்
> கொண்டு விட்டால் செய்யவள்
> கெட்ட அந்தத் தவ்வையைக்
> காட்டி விட்டு நீங்குவாள்!

ஆத லால்பொ றாமையை

அகற்றி விட்டுப் பாரிலே

ஏத மின்றி வாழலாம்!

என்றும் நன்மை சூழலாம்!''[80]

என்று பாடியுள்ளார். செய்யவள்=திருமகள், தவ்வை=மூதேவி என்று விளக்கமும் தந்துள்ளார். சற்று வளர்ந்த குழந்தைகளுக்கான பாடலாக இது அமைந்துள்ளது.

''அறிவுடன் இருந்தால் பிடிக்காது

அழகைக் கண்டு இரசிக்காது.

பிறரின் உயர்வை சகிக்காது.

பொல்லா நோய்தான் –பொறாமை''.[81]

இந்தப் பாடலில் பொறாமையின் தன்மையினைக் கூறுகிறார். கவிஞர் பொறாமையை நோய் என்று சொல்வதன் மூலம் அது கொடுமையானது எனக் குழந்தைகள் உணர்ந்து 'பொறாமை' எனும் தீப்பண்பை வெறுப்பர்.

### 5.4.2. சினம்:

சினம் எனும் கோபம் சிறுவயது முதலே குழந்தைகளை அண்டாதிருக்க வேண்டும். குழந்தைகளிடம் சினம் எனும் பண்பின் தீமையைக் கூறும் பாடல்கள் நல்ல மாற்றத்தை ஏற்படுத்தும்.

''கோபம் என்றும் கொடியது, ஆம்

கொடுமை எண்ணம் தீய துதான்

அச்சப் படுதல் கூடாது.

ஆத்திரம் நம்மை அழித்து விடும்''[82]

கோபம் கொடியது. ஆத்திரம் அழிக்க வல்லது எனக் கோபத்தின் வேகத்தைச் சொல்கிறார்.

### 5.4.3. திருட்டு:

திருடுவது தவறான செயல் என்பதைக் கூட இளங் குழந்தைகள் உணரமாட்டார்கள். திருடுவது தவறு என இளம் உள்ளங்களில் பதிவு

செய்ய வேண்டும். திருட்டைத் திருத்திக் கொள்ளச் சொல்லும் பாடல் இதோ.

> ''திருடாதே! பாப்பா திருடாதே
> வறுமை நிலைக்கு பயந்துவிடாதே!
> திறமை இருக்கு மறந்து விடாதே
> சிந்தித்துப் பார்த்துச் செய்கையை மாத்து—தவறு
> சிறுசா இருக்கையில் திருத்திக்கோ!
> தெரிஞ்சும் தெரியாம நடந்திருந்தா —அது
> திரும்பவும் வராமே பார்த்துக்கோ.''[83]

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனாரின் இந்தப் பாடல், வறுமை காரணமாகத் திருடும் குழந்தையிடம் இதமாகச் சொல்லி, திறமையால் வாழ வேண்டும் என்ற நம்பிக்கையை ஊட்டுவதாக அமைந்துள்ளது.

> ''ஒருவர் பொருளை விரும்பி—வீணில்
> உரிமை கொள்ள வேண்டாம்.
> பருவம் தன்னில் நீங்கள்—சிறுவர்
> படித்து வளர வேண்டும்.
> நிந்தை யான திருட்டுப் பொருள்
> நிலைப்ப தில்லை நாளும்
> இந்த ஞானம் தானே— காக்கும்
> என்றும் உனது மானம்!''[84]

என்ற பாடல், பிறர் பொருளை விரும்புவதும் உரிமையாக்கிக் கொள்வதும் திருட்டு. அந்தத் திருட்டுப் பொருள் நிலையானதில்லை என திருட்டின் தன்மையை விளக்கி, விலக்கச் செய்யும் பாடலாக உள்ளது.

**5.4.4. சூழ்ச்சி:**

நல்லவர் போல் நடித்தல்; நம்பியவர்களைக் கெடுத்தல் போன்றவை சூழ்ச்சி. இத்தகைய சூழ்ச்சி, தீயபண்பு எனக் குழந்தை அறிந்து கொள்ள ஏற்ற பாடலாக,

**பல்லவி**

''நேருக்கு நேர் நின்று வாதாடு—என்றும்
நீதிக்கும் நேர் மைக்கும் போராடு.

**அநுபல்லவி**

ஆருக்கும் சூழ்ச்சிகள் பண்ணாதே—வீண்
ஆனந்தம் அதனால் அடையாதே! (நேருக்கு)

**சரணம்**

நல்லவர் போலவே நடிக்காதே—உன்னை
நம்பிய பேர்களைக் கெடுக்காதே.
தொல்லைகள் எவருக்கும் கொடுக்காதே—நீ
சூழ்ச்சிகள் செய்வதும் அடுக்காதே! (நேருக்கு)''[85]

என்று ஞானமணியம் பாடியுள்ளார். சூழ்ச்சியால் ஆனந்தம் அடைவது சிறுமை. நீதி, நேர்மையுடன் நேருக்கு நேர் நின்று போராடுவதே பெருமை எனக் குழந்தைகளுக்குப் பாடல்வழி பண்பூட்டுகிறார்.

**5.4.5. தீயவர்:**

பொறாமை, சினம், பொய், திருட்டு, சூழ்ச்சி போன்ற தீய குணங்கள் பல உள்ளன. அவற்றைத் தனித் தனியாகச் சொல்லும் குழந்தைப் பாடல்களைக் கண்டோம். பொதுவாக தீமையையும் தீயவரையும் ஒதுக்குதல் வேண்டும் என்ற கருத்தில் சில பாடல்கள் உள்ளன.

''பாழும் நெருப்பைப் போலத்—தீய
பழக்கம் கூட தீது
வாழும் வாழ்வில் இதனை எண்ணி
வாழ வேண்டும் என்றேன்!
உற்றுக் கேட்ட தம்பி—இதன்
உண்மை தெரிந்து கொண்டான்.
சற்றும் தீய வற்றை—நான்
செய்ய மாட்டேன் என்றான்.''[86]

தீய பழக்கம் குறித்துக் கேட்டறிந்த தம்பி, தீயவற்றைச் செய்ய மாட்டேன் என உறுதி அளிப்பதாகப் பாடப்பட்ட பாடல் இது. இதனைப் படித்த குழந்தைகள் அந்தத் தம்பி போல உறுதி கொள்ள முயல்வர்.

''தீயவர்க் கன்பு செய்தால்—நம்மைத்
தீமைகள் தேடிவரும்
நாயினுக் கன்புசெய்தல்—அது
நம்மைச் சுற்றிவரும்.''[87]

நன்றி மிக்க நாய்க்கு அன்பு செய்வதற்கு நேர்மாறானது, தீயவர்க்கு அன்பு செய்வது என்ற முரண்பாடான கருத்துக்களை இணைத்துக் கூறித் தீயவரால் தீமை வரும் என்பதைக் கவிஞர் சொல்கிறார்.

''கையை எடுத்து வாயினில் வைத்து
நகத்தைக் கடிக்காதே!
கண்ட இடத்தில் எச்சிலைத் துப்பித்
தூய்மை கெடுக்காதே.
செய்யும் செயலை ஒழுங்காய்ச் செய்நீ
சேட்டைகள் பண்ணாதே!
சிரமம் இல்லாமல் நல்லபேர் எடுக்கலாம்!
கடமை மறக்காதே!''[88]

நகம் கடித்தல், கண்ட இடத்தில் எச்சில் துப்புதல், சேட்டை செய்தல் போன்ற தீய பழக்கங்களைத் தவிர்த்து நல்ல பேர் எடுக்க வழி சொல்லும் பாடலாக இது அமைந்துள்ளது.

**5.4.6. புகையும் குடியும்:**

'புகைபிடித்தல், மது குடித்தல்' இவை இரண்டைப் பற்றியும் சிறு குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டுமா? அவை தேவையற்றவை. தெரியாதவற்றைப் பற்றிச் சொன்னால், 'அது என்ன?' என்று அறியும் ஆர்வமும், அதை ருசித்துப் பார்க்கும் எண்ணமும் ஏற்படும். எனவே அவை பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டியது அவசியமற்றது என்பது பலரின் கருத்து.

வேகமாக வளர்ந்து வரும் உலகில் குழந்தைகட்கு தவறு எது? நல்லது எது? என இனங்காட்டப் பலர் இல்லாத நிலை. அத்துடன் குழந்தைகளின் ஐயங்களைத் தீர்ப்பதற்கு நேரமற்ற பெற்றோர் பலர் இருக்கின்றனர்.

''12 ஆம் வகுப்பு மாணவர்களில் 45 சதவிகிதம் பேர் மது குடிப்பதாகவும் ஒரு மாதத்தில் 5 முதல் 6 தடவை மதுக்குடிப்பதாகவும் ஆய்வில் தெரிந்துள்ளது....... சமீபத்தில் சென்னை அருகே புழல் பகுதியில் 40 பள்ளிக் கூடங்களில் மாணவர்களிடம் ஓர் ஆய்வு நடத்தப்பட்டது. அதில் 11 சதவிகித மாணவர்கள் குடிப்பழக்கத்திற்கு ஆளாகியிருப்பதாகத் தெரிவித்துள்ளனர்..... இதற்கு இரண்டு காரணங்கள். 1. சிரமமின்றிக் கிடைப்பது 2. மது பானம் தாராளமாகக் கிடைப்பது.''[89] என புதிய தலைமுறை இதழில் வெளியான கட்டுரைச் செய்தி கூறுகிறது.

பொதுவாக 9, 10 ஆம் வகுப்புப் பயிலும் 14, 15 வயதுச் சிறுவர்கள் எளிமையாகக் கடைகளுக்குச் சென்று புகைக்கட்டு, மதுபானம் போன்றவற்றை வாங்கும் வகையில் விற்பனை நடைபெறுகின்றது. இத்தகைய சூழலில் புகை, மது போன்றவற்றைப் பற்றிப் பாடல்வழி குழந்தைகளுக்குச் சொல்வது தவறில்லை.

> ''புகைச் சுருட்டால் இளமை
> பறிபோகும்.
> பொல்லாங் குண்டாகும்.

சிகரெட் பிடிப்பதில் நிகரற்ற சமர்த்தர் புரட்சிக்கவிஞர். ஆயினும் இளைஞர்கள் தம்மைப் போல் புகை பிடிக்கும் பழக்கத்தை வைத்துக் கொள்ளக்கூடாதென்ற நல்ல எண்ணத்தோடு, பயன்மிக்கப் பாடலைப் படைத்துள்ளது பாராட்டத் தக்கதாகும்''[90] என்கிறார் புத்தனேரி ரா.சுப்பிரமணியம். இசையமுது நூலில் சிறுவர் பகுதியில் புகை சுருட்டு பற்றிய கவிதை இடம் பெற்றுள்ளது.

> ''பீடி, சுருட்டு, சிகரெட்
> புகைத்தால் உடலும் மிகக் கெட்டு

வாடி வலிமை இழந்து விடும்.
வாழ்வும் குன்றி அழிந்து விடும்.''[91]

பீடி, சிகரெட், சுருட்டு என்று புகைப்பவற்றால் ஏற்படும் விளைவுகளைக் குழந்தைகட்குச் சொல்லும் பாடல் இது.

''போதைப் பானம் குடிக்காதீர்
பொல்லாத பேர் எடுக்காதீர் (போதை)

குடிக்கும் வெறி மயக்கத்தினால்
குடி அழியும் வறுமையினால்
துடிக்கும் பசி பட்டினியும்
தொல்லை தரும் நித்தியமும் (போதை)

வளரும் நீங்கள் அறிந்திடுவீர்
வளர்ந்த போது புரிந்திடுவீர்
இளமை நேரப் பாடமெல்லாம்
இனிமை யாகுங் காலமெல்லாம். (போதை)''[92]

இது கவிஞர் ஞானமணியத்தின் பாடல். போதைப் பானமான மதுவினை அருந்துவதால் ஏற்படும் விளைவுகளை வளரும் குழந்தைகளுக்குச் சொல்லி வளர்ந்த பின்னும் மறக்காமல் கடைபிடிக்க வழி சொல்லும் பாடல் இது.

**5.4.7. ஊழல்:**

நாளும் நாட்டில் பெருகி வரும் ஊழல் பற்றியும் குழந்தைகளுக்குச் சொல்ல வேண்டும். அவற்றின் தீமையைக் கூறி, அதனைக் களையும் வழி வகைகளையும் சொல்வது நல்லது. ஊழல் என்ற சொல்லாட்சி இடம்பெறாவிட்டாலும், அதுகுறித்த செய்திகள் சில குழந்தைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

''அல்லும் பகலும் உழைப்பவனும்
மனிதன் தானே—தீய
தில்லு முல்லாய் வாழ்பவனும்
மனிதன் தானே!''[93]

'தில்லுமுல்லு' என்பது ஊழலைக் குறிக்கிறது.

''ஆட்சி பீடம் ஏறியோர்
அறம் பிறழ்ந்து நடந்திடின்
நாடே வெந்து போமென
நமக்குச் சொன்ன ஞானியார்?''[94]

என்று இளங்கோவின் பெருமை சொல்ல வந்த கவிஞர் ஆட்சியிலிருப்போர் அறம் பிறழ்தல் கூடாது என்று குழந்தையிடம் சொல்கிறார்.

''களவு, பொய், வஞ்சனை
ஒழித்து சுதந்திரமாக வாழ
தேச பக்தி வேண்டும்
நல்ல தேச பக்தி வேண்டும்''[95]

தில்லுமுல்லு செய்யாது, அறம் பிறழாது நடக்கச் சட்டங்கள் மட்டும் போதாது; தேசத்தின் மீது பக்தி கொள்ளும் பண்பு வேண்டும் என குழந்தைகளுக்கு பாடல் வழி கூறி வளர்க்க வேண்டும்.

குழந்தைகளின் பண்புருவாக்கத்தில், குழந்தைப் பாடல்கள் துணை நிற்கும் விதத்தினை இவ்வியலில் கண்டோம். பண்பின் இருவகைகள் நற்பண்பு, தீயபண்பு என்பன. இவற்றில் பின்பற்ற வேண்டிய நற்பண்புகளைப் பாடலாகத் தந்தது போல் களைய வேண்டிய தீய பண்புகளையும் பாடல்வழி கவிஞர்கள் கூறியுள்ளனர்.

**தொகுப்புரை:**

- பண்புடைமையே உலக இயக்கத்திற்குக் காரணம்.
- குழந்தைகளின் உடல், அறிவு வளர்ச்சியுடன் பண்பு வளர்ச்சியிலும் கவனம் செலுத்த வேண்டும்.
- நன்னெறிக் கதைகள், பாடல்கள் கேட்டு வளரும் குழந்தைகளிடம் நற்பண்புகள் நிறைந்திருக்கும்.

- ஒழுக்க நெறிகளைப் பழக்கப்படுத்திக் கொள்வதே நற்பண்பாகும். பண்புகளின் பல வகைகள்: இறையுணர்வு, அன்பு, பகிர்வு, உண்மை, உழைப்பு, உதவி, நேர்மை, நீதி, கனிவு, பொறுமை இவை பின்பற்றத்தக்க நற்பண்புகள்.

- பொய், திருட்டு, பொறாமை, சூழ்ச்சி, கடுஞ்சொல், வன்முறை போன்றன களைய வேண்டிய தீய பண்புகள்.

- புகையும் மதுவும் தீயன எனக் குழந்தைக்குச் சொல்லுதல், அவற்றைத் தவிர்க்கச் செய்தல்.

- லஞ்சம், ஊழல் போன்ற சமூக விரோதப் பண்புகளின் தீமைகளையும் குழந்தைகளுக்குப் பாடல்வழி சொல்லி, அவற்றைத் தவிர்க்க வழி சொல்ல வேண்டும்.

